PALLAVAN GRAMA BANK

DIVYA.P
1650524782
23-01-1995
PANDYAN GRAMA BANK

AISHWARYA S
2691001180
05-02-1992
RESERVE LIST

SUBHASHREE R
2691007095
15-05-1996
PALLAVAN GRAMA BANK

DIVYA.G
1650413433
10-06-1992
PALLAVAN GRAMA BANK

SINDHU BHARATHI
2831003277
10-06-1995
RESERVED LIST

YOGITHA YEKULA
1650556390
25-08-1994
ANDHRA PRAGATHI GRAMEEN BANK

FEE *

TIER-II - 29.09.2019
TIER-III - 29.12.2019

TIER-I -DATE OF ADEVERTISEMENT
31.10.2019, 28.11.2019

TIER-I -DATE OF ADVERTISEMENT
12.12.2019, 10.01.2020

# 6+ LAKHS VACANCIES

ANY DEGREE IS ELIGIBILITY

IN 2019

# BANKING SSC RAILWAYS

DO JOIN NOW AND START YOUR PREPARATIONS BECOME A GOVERNMENT EMPLOYEE SOON.

## MULTI TASKING (NON - TECHNICAL) STAFF EXAMINATION 2019

DATE OF ADVERTISEMENT
22.04.2019 - 22.05.2019

PAPER - 1 EXAM -
02.08.2019 TO 06.09.2019
PAPER - 2 EXAM
17.11.2019

## FEE STRUCTURE FROM 01-01-2019

| REGULAR FEE | | FEE |
|---|---|---|
| BANKING<br>SSC | INCLUDING GST | 17,000<br>20,000 |
| TP STUDENTS REFERENCE | | |
| BANKING<br>SSC | | 16,500<br>19,500 |
| TP EMPLOYEES REFERENCE & EX-SERVICEMEN | | |
| BANKING<br>SSC | | 16,000 |

## IBPS CLERK PRELIMS RESULTS -2018

123 / 178

123 OUT OF 178 STUDENTS CLEARED

## CHENNAI SEMBAKKAM

NO-2, DURGA COLONY
4TH CROSS ROAD,
SEMBAKKAM
(VELACHERY-TAMBARAM HIGH ROAD)
CHENNAI-73

## CHENNAI VELACHERY

82, 2ND FLOOR,

# வெற்றி தரும்

# ஸ்ரீ வாராஹி

பரமஹம்ஸ

ஸ்ரீபரத்வாஜ் ஸ்வாமிகள்



மதி நிலையம்
பிருந்தாவன் அபார்ட்மெண்ட்ஸ்,
4(39), தணிகாசலம் சாலை, தி.நகர்,
சென்னை - 600 017. ✆ 24311 838

முதற் பதிப்பு : நவம்பர் 2005

◆

விலை : ரூ.60.00

◆



**ஆசிரம விலாசம்:**

ஸ்ரீ யோகமாயா புவனேஸ்வரி பீடம்,

ஸ்ரீ பரத்வாஜ் ஆச்ரமம்,

கங்கை நகர், கள்ளிக்குப்பம் பஸ் ஸ்டாப்,

ரெட்ஹில்ஸ் ரோடு, அம்பத்தூர்,

சென்னை - 600 053. ✆ : 2686 0777, 2844 4579

**ஸ்ரீ ஸ்வாமிகளைத் தரிசிக்கும் விலாசம்:**

ஸ்ரீ புவனேஸ்வரி மந்த்ரம்,

புதிய எண் 36 (23) அனுமந்தராயன் கோயில் தெரு,

திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.

தொலைபேசி : 2844 4579

தினமும் மாலை ஐந்து மணி முதல்

மாலை ஏழு மணி வரை

TYPE SET BY : MATHI NILAYAM, CHENNAI - 17

PRINTED AT : SELVA VINAYAGA OFFSET, CHENNAI



# இரண்டு வார்த்தை

நாலஞ்சு வருஷத்துக்கு முன்னாடி நான் டில்லி போயிருந்தபோது நடந்த விஷயம்! இப்பவும் நன்னா ஞாபகமிருக்கு. அங்கே காலேஜ்ல படிக்கிற 'தீப்தி' என்கிற பெண்ணை, அவள் சாயங்காலம் வீடு திரும்ப வரும்போது, பஸ் நிலையத்திலிருந்து ஒரு தீவிரவாதக் கும்பல் கடத்திட்டா. அந்தப் பெண்ணோட அப்பா சர்க்கார் உத்தியோகஸ்தர். அவர் மேலே இருந்த விரோதத்திலே, தீவிரவாதிகள் அவர் மகளை கடத்திட்டா. யார் மூலமோ கேள்வியுற்று அந்த ஆபிஸர் மனது பதைபதைக்க எங்கிட்ட வந்தார். "சுவாமி நீங்களே கதின்னு வந்துட்டேன். எப்படியாவது என் கண்மணியைக் காப்பாத்திக் கொடுக்கணும்"னு காலில் விழுந்து கதறினார். எனக்கு ரொம்ப வருத்தமாக இருந்தது. எப்படியாவது அவர் பெண்ணைக் காப்பாற்றணும்னு தோணித்து! உடனே மெட்ராஸுக்கு 'போன் கால்' போட்டு, அப்பா ஸ்ரீ புவனேஸ்வரி சுவாமிகளிடம், என்ன செய்யறதுன்னு கேட்டேன். அப்பா சொன்னார்– அதற்குண்டான வழியை, அமைதியாக! அதன்படி நாலு மூலையிலே நாலு அக்னி நடுவிலேயும் ஓர் அக்னி, இப்படிப் பஞ்சாக்னியிலே,

வாராஹியை ஆவாஹனம் பண்ணி, மூணுநாள் தொடர்ந்து 1008 ஆவர்த்தி வாராஹி மூலமந்திரம் சொல்லி ஹோமம் செய்தேன்! என்ன ஆச்சரியம் பாருங்கோ! நாலாவது நாள் எந்த பஸ் ஸ்டாண்டி லிருந்து அந்தப் பெண்ணை தீவிரவாதிகள் கடத்திண்டு போனாளோ, அங்கேயே அவளைப் பத்திரமாகக் கொண்டு விட்டுவிட்டுப் போயிட்டா! இது எப்படி நடந்தது? இங்கே ஹோமம் பண்ணப் பண்ண, கடத்தினவங்க உடம்புலே ஒரே காங்கை. சூடு அதிகமாகி அதிகமாகிக் கடைசியிலே அவுங்க கண்ணுலே ஒரு பயங்கரப் பன்றி முகம் – தெரிஞ்சது. தெற்றிப்பல் காட்டி உறுமியது! அவாள்லே ஒருத்தன் கொஞ்சம் விஷயம் தெரிந்தவன். இந்தப் பெண்ணைக் கடத்தி வந்ததிலேர்ந்து தான் இந்த மாதிரி இருக்கு! அதனாலே நாம உயிர் பிழைக்கணும்னா இவளைக் கடத்திண்டு வந்த இடத்திலேயே பத்திரமாக விட்டுவிட்டு நம்ம மற்ற வேலையைப் பார்ப்போம்னு சொன்னதைக் கூட்டத்திலே எல்லாரும் ஒப்புக்கொண்டா! அப்புறம் என்ன, பெண் பத்திரமா வீடு வந்து சேர்ந்தாள்!

இதுபோல வாராஹியோட பெருமை சொல்லி முடியாது! பாலையாக வந்து அஷ்டமாசித்திகளைத் தருவா, புவனேஸ்வரியாகச் செல்வத்தை அள்ளித் தருவா. திரிபுர சுந்தரியாக, நமக்கு வேண்டாத பகைவர்களை அழிச்சு நமக்கு நன்மை செய்வா! பிரும்மா, விஷ்ணு முதலான தெய்வங்களும் அவளைப் பணிஞ்சு காரியசித்தி அடையறா!. இதை 'வாராஹி மாலை'யிலே எவ்வளவு அழகாகச் சொல்லியிருக்கா தெரியுமா?

***"வாலை, புவனை, திரிபுரை மூன்றும் இவ்வையகத்திற்***
***காலையும், மாலையும், உச்சியும் ஆக எக்காலத்துமே***
***ஆலயம் எய்தி, வாராஹி தன் பாதத்தை அன்பிலுன்னி***
***மாலயன் தேவர் முதலான பேர்களும் வாழ்த்துவரே"***

(வ.மா-8)

என் அப்பா ஸ்ரீ புவனேஸ்வரி ஸ்வாமிகள் ரிஷிகேஷ்லே, புனிதமான கங்கையிலே, வாராஹி மந்திரத்தை எனக்கு உபதேசித்தார்! அப்போதி லிருந்து வாராஹி எனக்கு எப்பவுமே ஒரு காப்பாக, கவசமாக இருந்து, காப்பாற்றிண்டு வரா! அவளை உபாசனை பண்றவாளுக்கு 'துர் எண்ணங்களே' வராது, பொசுக்கிடுவா. உபாசகனையும் புடம் போட்டு சுத்தத் தங்கமா அவனை மாற்றிடுவா! 'வாராஹி உபாசகனிடம், வாயாடாதே' என்ற பழமொழி 100க்கு 100 அப்படியே உண்மை! இதை என்னுடைய சொந்த அனுபவத்திலேயே பார்த்திருக்கேன். நாம்ப அமைதியாக இருந்தாக்கூட, எதிரிகளை அவ பார்த்துப்பா! பெரும் கும்பாபிஷேகங்களை நடத்தி வைக்க வேண்டிய கட்டத்தில், முதலில் வாராஹியை வணங்கி விட்டுத்தான் யாகத்தைத் தொடங்குவேன்! சில காரியங்களுக்கு ஆமாம், நுணுக்கமான விஷயங்களுக்கு - வாராஹி அருள் தேவை! அதைத்தான் இப்போ உங்களுக்கு இந்த புத்தக ரூபமாகக் கொடுத்திருக்கேன்! அம்பிகையின் குழந்தைகளே! பக்குவப்படுத்தி ஏற்றுக் கொள்ளுங்கள்! இதைப் புத்திசாலிகளும் சாமர்த்தியசாலிகளுமே

ஏற்றுக் கொள்வர்! அந்தப் புத்தியையும் அவள்தானே தருகிறாள்? நமது சலனத்தை அவள் சலித்து விடுகிறாள். சபலத்தைச் சாம்பலாக்குகிறாள். கர்வத்தைத் தண்டித்து விடுகிறாள். 'வாராஹி' 'வாராஹின்னு' அவளை, அன்பாய் கூப்பிடுங்கள்! சேனாநாயகி, நீங்கள் சேவித்ததை - ஏற்றுக்கொள்வாள்! அவளுக்கு கரம் கூப்பு. அவளே நமக்கு பாதுகாப்பு. அப்புறம் மூப்புமில்லை, தவிப்புமில்லை! நாம் வாழ்வாங்கு வாழலாம்! இந்தப் புத்தகத்தின் பக்கங்களைப் புரட்டுங்கள்! ரத்தினக் குவியல்கள் இருக்கின்றன. அவளுக்கு அணிவித்து மகிழுங்கள். அற்புதத்தை அனுபவியுங்கள்!

நீங்காத செல்வம் நிறைந்து வாழ,

பரமஹம்ஸ ஸ்ரீமத் புவனேஸ்வரி சுவாமிகளின்

திருவடிகளைச் சிந்தித்து ஆசீர்வதிக்கிறேன்!

ஸ்வாமிகளின் திருவடிகளில்

பரமஹம்ஸ ஸ்ரீ பரத்வாஜ் சுவாமிகள்





ஸ்ரீம்

## நூன்முகம்

(கவிமாமணி தமிழ்மாறன்)

"பயிரவி, பஞ்சமி, பாசாங்குசை, பஞ்சபாணி, வஞ்சர்
உயிர்அவி உண்ணும் உயர்சண்டி, காளி, ஒளிரும் கலா
வயிரவி, மண்டலி, மாலினி, சூலி, வாராகி என்றே
செயிர்அவி நான்மறை சேர்திரு நாமங்கள் செப்புவரே!''

என்று அபிராபி பட்டர் அன்னை பராசக்தியின் ஏவலுறும் காவல் தெய்வங்களை அன்புடன் குறிப்பிடுகிறார். சைவம், வைணவம், சாக்தம், பௌத்தம் இப்படிப் பல தெய்விக வழிபாடுகளுக்குப் பொதுவான 'பெரிய' தெய்வமாக வணங்குபவள் அன்னை வாராஹி! அவள் வல்லமையும், ஆளுகைத் தன்மையும் அளவிடற்கரியது என்பதால் அவளை 'ப்ருஹத்வாராகீ' என்றழைத்தனர் பெரியோர். அவள் சதாசிவரின் பத்னியாக இருந்து பஞ்ச கிருத்யங்களைச் செய்பவள்! புறத்திலே - கிரி சக்கரத்திலும், நமது அகத்திலே ஆக்ஞா சக்ரத்திலும், மிளிரும் - ஆக்ஞா சக்ரேஸ்வரி! அன்னை ஸ்ரீ லலிதா பராபட்டாரிகாவின் நம்பிக்கைக்குரிய, இன்னுயிர்ப் படைத்தளபதி; யமனுக்கே யமனாக விளங்கும் - புரஸ்கரி; இவளை காலஸ்வரூபிணி என்றும், லய காரிணி என்றும், பிரளய காரிணி என்றும், விஸ்வ விஜயா என்றும், பத்ரகௌமுதி என்றும் வராஹமுகி என்றும் பல்வேறு

நாமங்களில் ஸ்ரீவித்யா மஹார்ணவம், 'தந்த்ரராஜ தந்த்ரம்', 'மந்த்ரமஹோததி' தத்வநிதி போன்ற பல தந்த்ர சாஸ்திர நூல்கள் குறிப்பிட்டுக் காரணத்தையும் விளக்குகின்றன.

வாராஹி வழிபாடு மிகத் தொன்மையான ஒன்றே. குறிப்பாகச் சொல்வதெனில், விஜயநகரப் பேரரசு பெரும் புகழோடு ஆட்சி செய்த காலகட்டத்தில் இந்த வழிபாடு தென்னாட்டில் மிகப்பிரபலமாகவும் தீவிரமாகவும் பரவி ஏற்றுக்கொள்ளப்பட்டது எனலாம். மிகவும் நுட்பமான பல அம்சங்கள் கொண்ட இந்த வாராஹி தேவியின் வழிபாட்டைப் பற்றி பலவித மாறுபட்ட கருத்துகளும், ஏன் பயமுறுத்தல்களும் கூட உண்டு. ஆனால் ஸ்ரீ புவனேஸ்வரி சுவாமிகளின் அத்யந்த சீடராய், ஓர் அருட்கடலாக, மந்த்ர சாஸ்திர விற்பன்னராக, பக்தர்களுக்கு மிகச் சுலபராகவும் விளங்கும் ஸ்ரீ பரத்வாஜ ஸ்வாமிகள், மிகப் பரம கருணையுடன், நோயும், பிணியும், நலிவும், பகையும் சூழ்ந்த இந்த உலகில் மக்கள் க்ஷேமமாய் வாழ்ந்திட உதவுகிறவள்-உன்னதமான ஆளுமையும் ஆற்றலும் கொண்ட ஸ்ரீ வாராஹி-தேவியே என உணர்ந்து, அவளது வழிபாட்டு நூலிதனை வெகு அற்புதமாக அமைத்துத் தந்துள்ளார்கள்!

இந்த ஒப்பற்ற நூலில், வாராஹியின் பல ரூபங்கள், அவற்றின் மந்திரங்கள், வழிபாட்டு முறைகள், சப்தமாதர்களில் அவளது நிலை, வாராஹியின் வைணவ, சாக்த, தாந்திரிக வழிபாட்டு நெறிகள், வாராஹி மாலை [விளக்கத்துடன்] வாராஹி பாராயண கவசங்கள், அஷ்டோத்திரங்கள் மற்றும் ஸஹஸ்ரநாமம், வாராஹி வழிபாட்டு ஆலய விவரங்கள் போன்ற பல அரிய விஷயங்களை பக்தர்கள் அனைவரும் உணர்ந்து பயன்படத்தக்க வகையில் ஸ்வாமிகள் கொடுத்துள்ளது நமக்கெல்லாம் பெரும் வரப்பிரசாதமாக அமையும்!

வாராஹி மிகவும் உக்கிரமானவள்; சரியாக அவளை பூஜை செய்யாவிட்டால் பைத்தியம் பிடிக்கும். சித்த ஸ்வாதீனம்

போய்விடும் என்றெல்லாம் கொஞ்சம் அதிகமாகவே பயமுறுத்துவோர் பலர் இங்குண்டு. உண்மை என்னவென்றால் மிகப் பெரும் பதவியிலிருப்பவர்களைப் பற்றிச் சுலபமாகத் தேவையற்ற உண்மைக்குப் புறம்பான செய்திகளும் வெளிவருவது போல தெய்வீக சக்திகளுக்குள்ளும், மிக முக்கியமான இடத்திலிருக்கும் வாராஹி போன்ற சக்திகளைப் பற்றியும் இத்தகைய மிகைப்படுத்தப்பட்ட கருத்துகள் பரப்பப்படுவது இயல்பாக உள்ளது. ஆகையால்தான் சுவாமிகள், வாராஹியைப் பற்றி எழுதும்போது முதலிலேயே பக்தர்களுக்கு இந்த முன்னறிவிப்பான எச்சரிக்கையைத் தந்துவிட்டே மேலே செல்கிறார். எந்தத் தெய்வச் சக்தியைப் பற்றிப் பேசினாலும் எழுதினாலும் சுவாமிகள் அதன் சிறப்பம்சங்களை மட்டும் தொகுத்து இயம்புவது' என்பது அவரிடம் இயல்பாக அமைந்துள்ள 'சத்வகுண' வெளிப்பாடாகும்! 'வாய் நல்ல நல்லோர்' என்று ஆண்டாள் கூறுவாள். எப்போதுமே இனிய வாழ்த்துகளுடன் கூடிய மங்கலச் சொற்களையே கூறும் நாவுடைய குருநாதர் 'ஆச்சார்ய திலகம்', பரமஹம்ஸ ஸ்ரீமத் பரத்வாஜ சுவாமிகளின் வாராஹி நூலுக்கு நூன்முகமாகச் சில வார்த்தைகளை அடியேன் எழுதிடக் கிடைத்த இந்த அரிய சந்தர்ப்பம், எனது பூர்வஜன்ம 'சுகிர்தமாக' உணருகிறேன். பணிவுடன்,

19.08.2005 — என்றும் சுவாமிகள் பணியில்,

சென்னை — கவிஞர் தமிழ்மாறன்

ஓம் தத் சத்



## நுழைவாயில்

## பரமஹம்ஸ ஸ்ரீமத் பரத்வாஜ சுவாமிகள்

"வாராஹி, விஜயா, விந்த்யாவாசினி
பைரவி, ப்ரசன்னா, ப்ருஹ்மசாரிணி,
காரணி, நாரணி, காமசாரிணி
கௌமாரி, வரதை, கட்க தாரிணி" என

அன்னை ஆதிபராசக்தி ஏற்கின்ற எண்ணற்ற வடிவங்களில் முதன்மை ஸ்தானத்தை பெற்று வல்லமையுடன் திகழ்வது ஸ்ரீ வாராஹி ரூபம். பன்றியின் முகமும் அழகிய பெண்ணுடலும் கொண்டவள். உருக்கிய பொன்னின் மேனியள்; பழுப்புநிறப் பளபளக்கும் முடியுடையவள். எட்டுக் கரங்களில் அபய வரத ஹஸ்தங்களைத் தவிர மற்றைய ஆறு கரங்களில் பாசம், உலக்கை, கலப்பை, சங்க சக்கரம், கத்தி ஆகிய ஆயுதங்களை அழகுற ஏந்தியவள்! வராஹப் பெருமானின் உட்சக்தி. எருமையைத் தன் வாகனமாக உடையவள். புங்க மரம் இவளது தலவிருக்ஷம். ஸ்ரீலலிதா பராபட்டாரிகாவின் கரத்திலுள்ள புஷ்ப பாணத்திலிருந்து ஆதியில் ஆவிர்ப்பவித்தவள். அனைத்து தேவர்களாலும், ரிஷிகளாலும் பயபக்தியுடன் வணங்கப்படுபவள். ஸ்ரீலலிதாவின் பலியை ஏற்கும் - பலிதேவதை இவள்! சக்தி சேனையின் தன்னிகரற்ற தானைத் தலைவி! இவளை-இகலில் வெல்ல, மூவுலகில் எவரும் இதுவரை இல்லை; இனியும் இருக்கப் போவதில்லை! மகா உக்கிரம் பொருந்திய தேவியானாலும் குற்றமற்ற பக்தர்களின் குறைகளைக் கேட்டு அவர்கள் துயரம் நீங்க, உடனடியாக நியாயம் வழங்கும் தண்டநாதை! 'ஸ்ரீலலிதோ பாக்யானம்', 'ஸ்ரீதேவி மகாத்மியம்', 'மந்திரமகோததி', தந்த்ர ராஜ தந்திரம் 'பாவனோபநிஷத்' ஸ்ரீதத்வநிதி போன்ற பல சக்தி தந்திர, சாஸ்திர நூல்கள் ஸ்ரீ வாராஹியைப் பற்றி விளக்கமாகத்

தெரிவிக்கின்றன. இராத்திரி தேவதையாக திகழும் இவளது வழிபாடு, பகலின் பொழுது சாயுங்காலம் - தொடங்கி நடுநிசி வரை செய்வதே சிறப்புடையதாகக் கருதப்படுகிறது. 'ஸ்ரீலலிதோபாக்யானம்' இவளுக்குரிய பன்னிரண்டு நாமாக்களைத் தெரிவிக்கிறது. பஞ்சமி, தண்டநாதை, ஸங்கேதா, சமயேஸ்வரி, சமயஸங்கேதா, வாராஹி, போத்ரிணி, சிவை, வார்தாளி, மகாசேனா, ஆக்ஞா சக்ரேஸ்வரி மற்றும் அரிக்னி. தலைசிறந்த தந்த்ர நூலாகிய 'தந்த்ர ராஜ தந்திரத்தில் இவளது பெயர்கள் வாராஹி, பஞ்சமி, விஸ்வ விஜயா, பத்ர கௌமுதி மற்றும் வார்தாளி என்றும் குறிப்பிடப்படுகிறது. இவள் பயன்படுத்தும் ரதத்தின் பெயர் 'கிரிசக்ரம்'. இவள் சமரிடும் சமயம் ஆரோஹணிப்பது 'வஜ்ரகோஷம்' என்கிற சிம்மத்தின் மீது. வைணவம், சாக்தம் இரண்டுக்கும் பொதுவான தெய்வமாக இவள் இருப்பதோடு, புத்த மதத்தினராலும், 'வஜ்ர வாராஹி' என்கிற பெயரில் - வணங்கப்படும் அதி உன்னத 'பலப்ரதாயினி'.

ஸ்ரீ வாராஹி எப்போது எப்படித் தோன்றினாள்? அவளது எண்ணற்ற ரூபங்கள், வல்லமை, அனுக்ரக-நிக்ரக ஆற்றல்கள், வழிபடு மந்திரங்கள், பலன்கள், அவளது பலவிதமான ரூபா ரூபக் குணப்பாகுபாடுகள், அவளது வழிபாட்டுக் கிரமங்கள், சக்தி தந்திரத்தில் அவளது இடம், சாதகனின் தகுதி, ஒழுக்கம், கட்டுப்பாடு, குருவின் வழிகாட்டுதல், நைவேத்யப் பொருள்கள், வழிபட ஏற்ற காலம், கடைப்பிடிக்க வேண்டிய நியதிகள் - அனுஷ்டானம், ஆகியவை பற்றியெல்லாம் ஐயம் திரிபறத் தெரிந்து கொள்ள இந்த நூல் உங்களுக்குத் துணை புரியும். அவசரமில்லாமல் அமைதியாக அமர்ந்து, மனத்தில் சலனமில்லாமல், தீர்க்கமான கவனத்துடன் ரத்னக் குவியலான இந்த நூலின் ஒவ்வொரு பகுதியையும் படித்துக் குருவருளால் குருவின் வழிகாட்டுதலுடன் ஸ்ரீ வாராஹியை வழிபடுவோர்க்குக் கிடைக்கும் நன்மைகளை அளவிடவே முடியாது.

"வீற்றிருப்பாள் நவகோணத்திலே! நம்மை வேண்டுமென்று
காத்திருப்பாள் கலிவந்தணுகாம ல், என் கண்கலக்கம்
பார்த்திருப்பாள் அல்லள், எங்கே என்றங்குச பாசம் கையில்
கோத்திருப்பாள், இவளே என்னை ஆளும் குலதெய்வமே
[வாராஹி மாலை]

என்று வாராஹி மாலையில் கூறியாங்கு கலி வந்து நம்மை நலிவடையச் செய்யாமல் காத்திருந்து நமக்கு ஊறு செய்வோரையும் ஒறுக்கப் பாசாங்குசமும் ஏந்திப் புரக்கும் - கருணைமிகும் அன்னை ஸ்ரீ வாராஹி! அதேசமயம் ஒரு காவல்துறையின் மிக உயரிய அதிகாரி, எவ்வளவு அன்புடன் நம்மிடம் நெருங்கிப் பழகினாலும், நாம் எப்படி எச்சரிக்கையுடன் மரியாதைக்குரிய தூரத்திலிருந்து அவரால் பயனடைய வேண்டுமோ, அப்படி இந்த மகாசக்தியிடம் மரியாதை கலந்த பக்தியுடன் வழிபட்டுப் பலனடைதல் வேண்டும் என்பதை முதலில் நன்றாக புரிந்து கொள்ள வேண்டும். மந்திரத்தால் அவளைக் கட்டுப்படுத்தி ஏவல் கொள்வதைவிட, பக்தியினால் அவளை யாசித்து அவளது அருளைப்பெற முயலுவதே நிரந்தர நன்மை தருவது; தீயவிளைவுகளைத் தாராதது! என்கிற சிறிய முன்னுரையுடன் இந்த முதல் அத்தியாயம் நிறைவு பெறுகிறது. வாராஹியைப் பற்றிப் பல நூல்கள், பல நம்பிக்கைகள், பல அபிப்ராயங்கள் உலவுவது உண்மையே! ஆனாலும் வழிபாடு மற்றும் உபாசனை செய்ய விழைவோர்க்கு மட்டுமின்றி ஸ்ரீலலிதாவின் பாதுகாப்புப் படைத்தளபதியான பஞ்சமியின் பராக்ரமங்களை, அருளிச் செயல்களைத் தெளிவுற அறிந்து கொள்ள விரும்பும் அனைத்து அன்பர்களுக்கும் இந்த நூல் பயன்பட வேண்டுமென்று ஸ்ரீமத் புவனேஸ்வரி ஸ்வாமிகளின் குருவருளைச் சிந்தித்து இதை உங்கள் பார்வைக்கு வைக்கிறேன்.

ஜெய் புவனேஸ்வரி!




## பொருளடக்கம்

1. இரண்டு வார்த்தை ........................................ 3
- பரமஹம்ஸ ஸ்ரீ பரத்வாஜ சுவாமிகள்

2. நூன்முகம் - தமிழ்மாறன் ................................ 7

3. நுழைவாயில் ........................................................ 10

4. வாராஹியின் தெய்விக வாசஸ்தலங்கள் ......... 15

5. சப்தமாதர்களில் வாராஹி வழிபாடு ................ 20

6. வரலாற்றுச் செய்திகள் ........................................ 27

7. வைணவத்தில் வாராஹி ...................................... 32

8. சாக்தத்தில் வாராஹி .............................................. 36

9. தந்த்ர சாஸ்திரத்தில் வாராஹி ........................... 41

10. தாந்திரிக வழிபாட்டில் வாராஹி ...................... 45

11. புத்த மதத்தில் வாராஹி தாந்திரிக வழிபாடு ... 48

11. வாராஹியின் பல வழிபாட்டு வடிவங்கள் ...... 51

ஸ்ரீ மகா வாராஹி (ஸ்ரீ ஆதி வாராஹி) ......... 51

லகு வாராஹி (உன்மத்த பைரவி) ............... 53

| | | |
|---|---|---|
| | பஞ்சமி ........................................ | 54 |
| | அஸ்வாரூடா வாராஹி ........................ | 55 |
| | தண்டநாத வாராஹி ............................ | 57 |
| | தூம்ர வாராஹி .................................. | 58 |
| | ப்ருஹத் வாராஹி .............................. | 59 |
| | ஸ்வப்ந வாராஹி ................................ | 61 |
| 12. | ஆஷாட நவராத்திரியில் வாராஹி வழிபாடு ... | 65 |
| 13. | ஸ்ரீ வாராஹி மாலை (விளக்கத்துடன்) .......... | 74 |
| 14. | ஸ்ரீ வாராஹி ஆலயங்கள் ........................ | 98 |
| 15. | ஸ்ரீ ஆதி வாராஹி கவசம் ........................ | 104 |
| 16. | வாராஹி யந்திரங்கள் ............................ | 106 |
| 17. | ஸ்ரீ ஆதி வாராஹி ஸ்தோத்திரம் ................ | 116 |
| 18. | வாராஹி கவசம் - மந்திரம் ...................... | 118 |
| 19. | வாராஹி நிக்ரகாஷ்டகம் .......................... | 120 |
| 20. | வாராஹி அனுக்ரகாஷ்டகம் ...................... | 122 |
| 21. | வாராஹி அஷ்டோத்தரம் .......................... | 124 |
| 22. | வாராஹி ஸஹஸ்ரநாமம் .......................... | 128 |
| 23. | நிறைவுரை ........................................ | 165 |
| 24. | அனைத்து நலன்களையும் வழங்கும் அம்பத்தூர் ஸ்ரீ புவனோஸ்வரி தேவி .. | 168 |
| 25. | ஸ்வாமிகளின் மற்ற தெய்விக புத்தகங்கள் ..... | 183 |




# வாராஹியின் தெய்விக வாசஸ்தலங்கள்

## காப்பு

''வலிமையுறு வராகங்கள் இழுக்கின்ற தேரிலே
வாகான ஐந்தட்டிலே,
பொலிவு பெற உலவ வரும் புயல்நங்கையே!
எனது புலனைந்ததன் காவலே!
நலிவுபிணி குறைவயது குலையவைக்கா திங்கு
நன்மையருளும் இறைவியே!
கலியுலவு நிலவுலகில் கண்கண்ட அன்னையே
கருணையே வாராஹியே!''

''இடிமின்னல் பூகம்பம் எதுவரினும் என்னவுன்
இருபதமெனைக் காக்குமே!
கடியவிட தேள்பாம்பு மிருகங்கள் யாவுமுன்
கண்களுக்கே அஞ்சுமே!
கடிதான துன்பங்கள் காலபயம் என்றாலும்
காதவழிதான் ஓடுமே!
மடியுமுன் என் மடமை நீக்குமொரு ஞானமே
மாதேவி - வாராஹியே!''

### *ஸ்ரீ வாராஹியின் வாசஸ்தலங்கள்*

ஸ்ரீ வாராஹி தேவியின் முதல் இருப்பிடம் 'பூபுரம்' என்று சொல்லப்படும் பதினாறாவது ஆவரணமாகும். இதுவே அன்னை பராசக்தியின் வாசஸ்தலமான ஸ்ரீசக்ரம்-சிந்தாமணி கிருகத்தின் நுழைவாயில். இங்கே அமைந்துள்ள மரகதக் கோட்டையில் நூறு தூண்கள் கொண்ட மண்டபத்தினுள் அமைந்த பொற்பீடத்தில்

ஸ்ரீ தண்டநாதை தன் அபிமான ஸ்தலமாகக் கொண்டு வசிக்கிறாள் என்கிற செய்தியை **ஸ்ரீ லலிதோபாக்யானம்** தெரிவிக்கிறது. இந்த உபாக்யானம் எப்போது தோன்றியது? யாரால் உபதேசிக்கப்பட்டது?

உலகில் தர்மங்கள் அழிந்து, சத்காரியங்கள் குறைந்து பொய்மை மலிந்து கலியின் கொடுமையால் பூவுலக மக்கள் தாறுமாறாக வாழ்வதைக் கண்டு மனம் பொறுக்காத அகத்திய முனிவர் க்ஷேத்ராடனமாகச் சென்று இறுதியிலே காஞ்சியிலே தங்கி, திருமாலைக் குறித்துப் பெரும் தவம் செய்தார். பல்லாண்டுகள் கழிந்தன. சங்கு சக்ர கதாபாணியாய் ஹஸ்திகிரி வரதர், ஹயக்ரீவ வடிவில் முனிவர் முன் தோன்றினார்! "ஜநார்த்தன! பாமர ஜனங்கள் பிறவிக்கடலை கடந்து பேரானந்தம் பெற ஒருபாயத்தை அருள வேண்டும்" என வேண்டினார். மகாவிஷ்ணுவும் மனமகிழ்ந்து "முன்னம் சிவனால் எனக்குக் கூறப்பட்டு பிறகு பிரும்மா துர்வாசர் போன்றோர்க்கு உபதேசிக்கப்பட்ட இந்த சுலபமான வழியை மீண்டும் கூறுகிறேன். பாமரரும் சுலபமாக நற்கதியடைய பராசக்தியான ஸ்ரீ ஜகன்மாதாவை பூஜிப்பதே அந்த வழி. முனிவரே! சாஸ்திரம் உணராமலும், விதியை மீறியும் கூட, தேவியிடம் அத்யந்த பக்தியும் ப்ரீதியும் கொண்டு உண்மையுடன் எவர் பூஜித்தாலும் அவருக்கு இம்மையில் சுகத்தையும், மறுமையில் மோட்சத்தையும் தரவல்லவள் தேவி ஒருத்தியே! அவளது வரலாறும் வழிபாடும் அதிரகஸ்யமானது. அகத்தியரே! உமது தபோ பலத்தாலும், உலகமெலாம் இன்புற வேண்டுமென்ற எண்ணத்தாலுமே இதை உமக்குக் கூறுகிறேன். தேடி வரும் மானுடரும் உம்மிடம் உபதேசம் பெற்று ஸித்தி பெறட்டும்!" என்று சாக்ஷாத் விஷ்ணுவின் அம்சமான ஸ்ரீ ஹயக்ரீவ பகவான் அருளி ஸ்ரீலலிதா பராபட்டாரிகாவின் ஆவிர்பாவத்தையும், அவளது இச்சையினால் அவளுக்குத் துணையாகத் தோன்றிய ஸ்ரீ வாராஹி, மந்திரிணி, சம்பத்கரி, அச்வாரூடா, நவதுர்கைகள், தசமகா வித்யாக்கள், சப்தமாதர்கள் இவர்களைப் பற்றியும் மற்றும் அன்னை துஷ்டநிக்ரக சிஷ்ட

பரிபாலன ஹேதுவாக செய்த - அசுர சம்ஹார விஷயங்கள் - அனைத்தையும், ஹயக்ரீவர் அகத்திய முனிவருக்கு உபதேசித்தது தான் ஸ்ரீ லலிதோபாக்யானம்! இதில் ஸ்ரீ வாராஹி தேவியின் இருப்பிடத்தைப் பற்றிக் கூறுகையில், பதினாறாவது ஆவரணத்தில் முத்துக்கோட்டைக்கு ஏழு யோஜனை தூரத்தில் உள்ள மரகதக் கோட்டையே, தண்டநாதையின் முதல் வாசஸ்தலமாகும். இங்குள்ள மாளிகையில் 100 தூண்கள் உள்ள மண்டபத்தில் தங்கமயமான பீடத்தில் அமைந்துள்ள பொன் புஷ்பத்தில் 110 அக்ஷரங்கள் உள்ள சக்கரத்தில் ஸ்ரீ வாராஹி அன்னை வீற்றிருக்கிறாள். கிரி சக்ரமென்கிற அவளது ரதத்தின் ஐந்து தட்டுகளிலும் வசிக்கும் தேவிமார்கள் அனைவரும் அப்படியே இங்கும் பிரசன்னமாகி இருக்கிறார்கள். இவர்கள் எல்லாரும் தண்டநாதையின் அழகுக்குச் சமானமானவர்கள். கலப்பை, உலக்கை ஆகியவற்றை விளையாட்டாகச் சுற்றியபடியே இங்கு உலா வருவார்கள். இந்த மரகதக் கோட்டையினுள் ஆங்காங்கே பழக்குலைகள் கூடியதாக, எங்கணும் மதுக் குடங்கள் கட்டப்பட்டும் சுவர்ணமயமான நீண்ட பனை மரங்கள், கணக்கற்ற எண்ணிக்கையில் காணப்படுகின்றன. ஜ்ரும்பினி, ஹேதுகர் ஆகிய நிக்ரக தேவதைகள் ஸுரையைப் பருகிக் களித்து கூத்தாடியபடி மகிழ்ச்சியுடன் காவல் புரிகின்றனர். கோட்டையின் நான்கு மூலைகளிலும் உன்மத்த பைரவி, ஸ்வப்நேசி, திரஸ்கரணீ, கிரிபதா போன்ற பல துணைச் சக்திகளும், அஷ்ட பைரவர்களும் தண்டநாதையைச் சேவித்துப் பணிபுரிகின்றனர். வாராஹி வசிக்கும் அங்கணம் முழுமையும் ஒரே மரகதமயமாய் இருக்கிறது. இந்த இடத்தில் "கேவலம் அபிமானத்தால் மாத்திரமே பஞ்சமி வசிக்கிறாளே தவிர, பரதேவதையின் சேவையின் பொருட்டு அவள் முக்கியமாய் வசிப்பது **"மஹாபத்ம அடவி ஸ்தலமாகும்"** என்று ஸ்ரீ லலிதோபாக்யானம் மேலும் விளக்கம் தருகிறது. மஹாபத்ம அடவியில் சிந்தாமணி கிருகத்திலுள்ள ஈசான திக்கில் ஸ்ரீ தண்டநாதை - பெரிதும் வசிக்க விரும்புவதன் காரணம், பரதேவதையான ஸ்ரீலலிதாவின் வாஸஸ்தலத்திற்கு இது மிக

சமீபமாக இருப்பதால் தான்; மேலும் சக்தி சேனையின் சேனாபதி என்ற முறையில் பாதுகாப்பு ஏற்பாடுகளை அவ்வப்போது நேரிடையாகக் கண்காணிக்கவுமே இந்த ஏற்பாடு.

ஸ்ரீ வாராஹியின் அதிமுக்கியமான மேற்சொன்ன - இரண்டாவது வாசஸ்தலம் அமைந்துள்ள **''மகா பத்ம அடவி''**, இருபத்தி ஐந்தாவது கோட்டைக்குள்ளே அமைந்துள்ளது. இந்த வனத்தில் தான் அம்பிகையின் சிந்தாமணி கிருகமும் அமைந்துள்ளது. இங்கு பரா பட்டாரிகா தேவி பஞ்ச பிரும்மாசனத்தில் சர்வானந்த மயம் என்கின்ற ஸ்ரீ சக்ர ராஜம் என்னும் மேரு வடிவப் பீடத்தில் வீற்றிருக்கிறாள். இந்த கிருகத்தின் அக்னி மூலையில், பரதேவதையின் உற்பத்தி ஸ்தானமும், பேரொளியோடு கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருக்கக்கூடிய சிதக்னிகுண்டமும், பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. நிருதி மூலையில் ஸ்ரீ லலிதாவின் திவ்வியமான ஸ்ரீ சக்ர ரதமும், வாயு மூலையில் மந்திரிணியாகிய ஸ்ரீ சியாமளாவின் கேய சக்ரம் என்னும் ரதமும், ஈசான மூலையில் தண்டநாதையின் ஸ்ரீ வாராஹி தேவியின் கிரி சக்கர்ம் ரதம் என்ற தேரும் விளங்குகின்றன. சிந்தாமணி கிருகத்தின் கிழக்கு வாயிலில் வலப் பக்கத்தில் சியாமளையின் கோயிலும், இடப்பக்கத்தில் வாராஹியின் கோயிலும் உள்ளன. இங்கு ஸ்ரீ மகா வாராஹி தேவியானவள், வராஹ முகமும், தாமரை இதழ் போன்ற கண்களும், சந்திர கிரீடமும், தங்கம் போல் பளபளக்கும் சரீரமும், சிவந்த மலர் மாலைகளும், கலப்பை, உலக்கை, சங்கம், சக்கரம், பாசம், அங்குசம், அபயம், வரதம் ஆகியவற்றால் சோபிக்கும் கைகளையும் உடையவளாய் உன்மத்த, கபால, பீஷண, டமருபாஸ்கர, ரவிபக்ஷக, கால, சண்ட, மகாமந்தானர்கள் எனும் அஷ்ட பைரவர்கள் புடைசூழ ஜ்ரும்பினி முதலிய சேனைகளோடும் தயார் நிலையில் இங்கு பராபட்டாரிகாவின் பாதுகாப்புப் பணியில் சிறந்து விளங்குகிறாள்.

மேலும் மனோமயக் கோட்டையில் அம்ருத வாபியின் தலைமை ஏற்று காவல் காக்கும் ஓடக்காரி தாரணேஸ்வரி என்கிற

தாராவும், புத்திமயமான கோட்டையைச் சுற்றி அமைந்துள்ள ஆனந்தவாபியை நிர்வகிக்கும் வாருணி தேவியும் (ஸீதாமாலினி, அம்ருதேஸ்வரீ என்றும் பெயர்) மணிமயமான ஓடங்களில் அமர்ந்து கொண்டு, மந்த்ரிணி, தண்டினி ஆகியோர் உத்தரவுடன் இந்த வாபிகளைக் காவல் புரிகின்றனர். இவற்றையெல்லாம் தாண்டி அமைந்துள்ள சிந்தாமணி கிருகத்தில் நடுநாயகமாக விளங்கும் 'மகாபத்ம அடவியின்' பெருமையோ அளவிட முடியாதது. இவ்வாறு பண்டாசுரனை சம்ஹாரம் செய்யச் சிதக்னி குண்டத்தில் ஆவிர்ப்பவித்து ஸ்ரீநகரம் என்கிற சிந்தாமணி கிருகத்தில் மகாபத்ம அடவி என்கிற ஸ்தானத்தில் ஸ்ரீசக்ர ராஜத்தில் நிலைபெற்று உலகை ரக்ஷிக்கும் மகாராஞ்ஞியின் படைத்தலைமை ஏற்று துஷ்டர்களை அழித்தும், சிஷ்டர்களைக் காத்தும் அன்னைக்குத் துணையாக இருந்து சேவை புரியும் ஸ்ரீ வாராஹி தேவியின் வாசஸ்தலங்களைப் பற்றி ஸ்ரீலலிதோபாக்யானம் விவரித்ததை மேலே பார்த்தோம்.

ஸ்ரீ வாராஹி தேவியின் இரண்டு வாசஸ்தலங்கள் அமையப் பெற்றதான ஸ்ரீநகரம் என்கிற அன்னை ஸ்ரீலலிதா பரமேஸ்வரியின் இருப்பிடத்தைப் பற்றியும் அது அமைந்திருக்கும் விதம், அதிலுள்ள பல பிரிவுகள், அவற்றில் பிரசன்னமாகி ரக்ஷணம் செய்யும் எண்ணற்ற தேவ-தேவிகள், இறுதியாக அதில் உள்ள மகாபத்ம அடவியில் அமைந்துள்ள சிந்தாமணி கிருகம், அதில் ஸ்ரீ லலிதா பரமேஸ்வரி அன்னையின் அருளோலக்கம் அமைந்துள்ள ஸ்ரீசக்ர ராஜ நிலையம் ஆகிய அனைத்து விவரங்களையும் தெரிந்து கொண்டு, இத்தகைய மாபெரும் சக்தி சாம்ராஜ்யத்தின் பாதுகாப்பை, சக்தி சேனைகளின் தலைவியாக இருந்து கொண்டு, ஸ்ரீ வாராஹி தேவி எப்படி திறம்பட நிர்வகிக்கிறாள் என்பதை அறியும்போது தண்டநாதையின் எல்லையற்ற பேராற்றலும், ஆளுமையும் நமக்கு நன்கு விளங்கும்.



# சப்தமாதர்களில் வாராஹி வழிபாடு

மிகப் பழைமையான காலத்திலிருந்தே பூமித்தாயின் அம்சமாகக் கருதி, பெண்டிரைக் கடவுளாக வழிபடும் பழக்கம் ஏற்பட்டுள்ளதை உலக வரலாற்றின் பழங்கால நடைமுறைகளும் அகழ்வாராய்ச்சிகளும் தெளிவாக்கியுள்ளன. இன்னோர் உயிரைச் சுமந்து பெற்றெடுக்கும் தாயை 'நியூலித்திக்' போன்ற தொன்மையான கலாசாரத்தைச் சார்ந்த மக்கள் பெண் தெய்வமாகவே கருதி வழிபட்டனர். விவசாயத்தைத் தம் அடிப்படையாகக் கொண்ட இந்த மக்கள் தமக்கு உணவு தரும் மண் மாதாவையும் கடவுளாகக் கருதினர். இந்த அடிப்படைக் கருத்தே உலகெங்கும் பரவியதாய், நமது சிந்துவெளி நாகரிகத்திலும் எதிரொலித்தது எனக் கூறலாம். பூமியில் விதை விதைக்கும் நாளை ஒரு திருவிழாவாகவே கொண்டாடும் பழக்கம் ஆதி நாளிலிருந்தே கிரீஸ், த்ரேல், சிசிலி, ஆசியாமைனர் போன்ற பல நாடுகளிலிருந்து வந்துள்ளது. பூமியை மண்மாதாவாக ஒரு தெய்வமாகப் பரவியதோடு உயிரைப் படைத்தளிக்கும் மங்கையரையும் தெய்வமாகப் போற்றிடும் நெறி இந்த அடிப்படையில் வலிமை பெற்றது. இந்து சமயக் கலாசாரத்திலும் இது ஆழமாகப் பதிந்துள்ளதை நம் பல்வேறு புராணங்களும், பின்னாளில் வந்த சாக்த நூல்களும் பறை சாற்றும். உயிர் வாழ்வதற்குத் தேவையான காய்கறி, கனி வகைகளை அன்னை பராசக்தியே தன் உடலிலிருந்து படைக்கிறேன் என்று கூறுவதாக தேவி மகாத்மியம் குறிப்பிடுகிறது.

ததோSஹமகிலம் லோகமாத்மதேஹ ஸமுத்பவை: ।
பரிஷ்யாமி ஸுரா: சாகைராவ்ருஷ்டே: ப்ராண தாரகை:॥48
சாகம்பரீதி விக்யாதிம் ததா யாஸ்யாம்யஹம் புவி ।
தத்ரைவச வதிஷ்யாமி துர்க்கமாக்யம் மஹாஸுரம் ॥ 49

(தேவர்களே! பின்னர் மழை பெய்யும் வரை உயிரைக் காப்பாற்ற ஒஷதிகளை என் உடலிலிருந்தே தோற்றுவித்து அவற்றால் உலகத்தையும் போஷிக்கப் போகிறேன். அப்போது பூமியில் நான் சாகம்பரீ எனப் பிரசித்தி அடையப் போகிறேன். அதே காலத்தில் துர்க்கமன் எனும் கொடிய அசுரனையும் வதைக்கப் போகிறேன்)

(48, 49 அத் 11வது. தேவி மகாத்மியம்)

என்று தேவி மகாத்மியம் கூறுவதை ஊன்றிநோக்கினால் தன் உடலாகிய பூமியிலிருந்து படைத்தளிக்கிறேன் என்று பொருள் தருகிறது அல்லவா? மார்க்கண்டேய புராணத்தில் ''உயிர் வாழ்வதற்கு வேண்டிய காய்கறி வகைகளை என் உடலிலிருந்தே தோற்றுவிக்கிறேன். என்னை அனைவரும் ''சாகம்பரி தேவி'' என்று அழைப்பார்கள்'' என்பதனால் பூமித்தாயையே பராசக்தியாக மக்கள் கருதி வழிபட ஆரம்பித்தனர் என்பது புலனாகும். பூமித் தாய்க்கும் வராகருக்கும் பிறந்த நரகாசுரனே அன்னையின் 51 சக்தி பீடங்களில் முதன்மையான யோனி பீடமான காமாக்யாவில் சக்தி வழிபாட்டைத் தொடங்கியவன் என்று 'காளிகா புராணம்' கூறுகிறது. பூமியை - வராஹ ரூபத்தில் பிரளயத்தின் அடியிலிருந்து வெளிக்கொணர்ந்த விஷ்ணுவின் துணைவியாக 'பூமாதேவி' ஆனதை புராணங்கள் கூறுகின்றன. சததப்பிரமாணம், தைத்ரியப் பிரமாணம் போன்ற நூல்களும் அதர்வண வேதத்தில் ப்ருத்வீ சூக்தமும் மேற்படி விஷயங்களை வெளிப்படுத்துகின்றன. ருக்வேத காலத்தில் பல பெண் தெய்வங்கள் குறிப்பிடப்பட்டாலும் (உ-ம்: சரஸ்வதி, உஷை, அதிதி, இலா, இந்திராணி, வாக்) அவை எல்லாம் துணைத் தெய்வங்கள் என்ற நிலையிலேயே வைத்து எண்ணப்பட்டன. பின்னாளில் அதர்வண வேத காலத்தில் தான் பெண் தெய்வங்களுக்கு முக்கியத்துவம் சிறிது சிறிதாக வர ஆரம்பித்தன. ''சப்த மாதர்களின் வழிபாடு'' இதற்கு முன்னோடியாக அமைந்தது என்று கூறலாம். பிராமி, மகேஸ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வாராஹி, மாகேந்திரி, நாரசிம்மா அல்லது சாமுண்டா ஆகிய எழுவரும் முறையே சப்தமாதர்கள் என்று

அழைக்கப்பட்டனர். இவர்களுடன் விநாயகர், வீரபத்திரர், பைரவர் ஆகியோரில் ஏதாவதொரு சிலாரூபத்துடன் சப்தமாதரைப் பிரதிஷ்டை செய்யும் வழக்கமும் ஏற்பட்டது. பிரும்மா, சிவன், முருகன், விஷ்ணு, வராகமூர்த்தி, இந்திரன், நரசிம்மர் அல்லது யமன் என்போரது பெண் சக்திகளாக இருந்து மக்களுக்கு இவர்கள் அருளை வழங்குவதாகக் கருதி மக்கள் நம்பிக்கையுடன் தொழுதனர். சப்தமாதர்கள் என்ற எண்ணிக்கைகளுக்கு இல்லாமல் 'மாத்ருக்களாக' சில பெண் சக்திகளை வழிபடும் பழக்கம் முதல் நூற்றாண்டிலிருந்தே இருந்து வந்துள்ளது. இவர்களை தனித்தனியாக வழிபடாமல் ஒரு குழுவாக மக்கள் வழிபட்டனர் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும். இடைக்காலத்தில் ஏழு என்கிற எண்ணிக்கைக் கணக்கு ஏற்பட்டதோடு, பின்னாளில் ஏற்பட்ட புராணங்களில் இவர்கள் முக்கிய பங்கு வகிக்கும்படியான நிலையும் ஏற்பட்டு, ஆண் தெய்வங்களோடு சம்பந்தப்பட்டு, ஏற்கெனவே பிரபலமாக இருக்கும் வேதகால, பிற்கால, ஆண் தெய்வங்களின் பெண் அம்சம் போலவும், பெயரேற்று, அவர்களது ஆயுதங்கள், கொடி, வாகனங்களையும் கைக்கொண்டு விளங்கி பரவலாக வழிபட ஆரம்பித்தனர். மகாபாரத காலத்திலேயே 'மாத்ருக்களின்' செயல்பாடுகள் குறிப்பிடப் பட்டுள்ளது. மேற்படி தெய்வ மாதர்கள் மகா உக்ரசக்தியாக, மாம்ச மதுபக்ஷிணிகளாக கருதப்பட்டதால் மக்கள் இந்த தெய்வங்களை அடிப்படையாக அச்சத்தினால் முதலில் வழிபட்டனர் என்றும், பின்னர் விஷ்ணு, ஈஸ்வரன், தேவி, முருகன் போன்ற பெரும் தெய்வங்களின் தேவாசுரப் போர்களில் இவர்கள் பயன்படுத்தப்பட்டு வெற்றி பெற உதவினர் என்றும் மத்ஸ்ய புராணம், லலிதா உபாக்யானம், தேவி மகாத்மியம், மகாபாரதம் போன்ற இதிகாச புராணங்கள் விளக்கும். சப்தமாதர் வழிபாடு வளர்ச்சியடைந்த நிலையில் ஏழு என்கிற எண்ணிக்கைகளும், பிராம்மி, மகேஸ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வாராஹி, நாரசிம்ஹி, ஐந்திரி ஆகிய ஏழு தெய்வங்கள் முறையே பிரும்மா, ஈஸ்வரன், முருகன், திருமால், வராஹர், நரசிம்மர் மற்றும் இந்திரன்

ஆகிய தெய்வங்களின் பெண் அம்சமாக அவர்களின் ஆயுதங்களையும் வாகனங்களையும் கொண்டு இவர்கள் விளங்கினாலும், மேற்படி ஆண் தெய்வங்களின் மனைவிமார்கள் அல்லர் இவர்கள். அன்னை ஸ்ரீ லலிதா பரமேஸ்வரியின் உடலிலிருந்தே ஆவிர்ப்பவித்து வெளிவந்தவர்கள் என்கிற உண்மையை வாமன புராணம் போன்ற புராணங்களும் சாக்த நூல்களும் தெரிவிக்கின்றன. இந்த விஷயத்தைத் தேவி மகாத்மியமும் தெளிவாகக் கூறுகிறது.

சில சமயங்களில் இவர்கள் போர் வெறியினால் அத்துமீறியதுண்டு. உதாரணமாக ஈஸ்வரனுடைய ஆணையை மேற்கொண்டு, அந்தகாசுரனுடன் போரில் ஈடுபட்ட சப்தமாதர்கள், அந்தகாசுரனைக் கொன்ற பிறகு போர் முடிந்த பின்னாலும் மீதியுள்ள அனைத்து தெய்வ சக்திகளையும் விழுங்கி விடுவதாகப் பயமுறுத்தியபோது, சிவனுடைய ஏவலினால் திருமால் நரசிம்மர் அவதார கோலத்தில் மீண்டும் தோன்றியும் நற்குணம் கொண்ட தேவிமார்களைத் தோற்றுவித்து, அவர்கள் மூலம் சப்தமாதர்களை அடக்கும்படியும் செய்தார். முற்றிலும் அது முடியாமல் போகவே முடிவில் ஈஸ்வரனே 'பைரவராக' ஆவிர்ப்பவித்து, இவர்களை அடக்கியதாகவும் மத்ஸ்ய புராணம் கூறுகிறது. (இந்து காடசஸ், டேவிட் கிங்க்ஸ்லீ, மாத்ருகாஸ் (10) இதற்குப் பின்னர் தான் விநாயகர் மற்றும் வீரபத்ரர் சிலைகளைச் சப்தமாதர் சிலையுடன் வைத்துப் பிரதிஷ்டை செய்யும் வழக்கம் தோன்றியது. அவர்கள் உக்கிரத்தை ஒரு கட்டுக்குள் வைக்கும் 'உத்தி இது' என நாம் ஊகித்தறியலாம்!

ஸ்ரீ லலிதா பரமேஸ்வரியின் மேனியிலிருந்தே இவர்கள் தோன்றியவர்கள் என்பதை ''தேவி மகாத்மியம்'' 10ஆம் அத்தியாயம் இவ்வாறு எடுத்துக்காட்டுகிறது.

''பிராணனுக்கு நிகரான சகோதரன் நிசும்பன் கொல்லப்பட்டதையும் சைனியம் அழிக்கப்பட்டதையும் கண்டு நிசும்பன் கோபம் கொண்டு (துர்கா தேவியைப் பார்த்து) பின்வரும்

வார்த்தைகளைச் சொன்னான். ''பலத்தினால் கொழுப்பு பிடித்து மதிகெட்ட துர்கையே! நீ கர்வத்தைக் கொண்டு வராதே... நீ பிறருடைய பலத்தைக் கொண்டே யுத்தம் செய்கிறாய்!'' **''பலாவலேப துஷ்டே, த்வம், மாதுர்க்கே கர்வ மாவஹ அன்யாஸம் பலமாச்ரித்ய யுத்த்யஸே யாதிமானினி''** அதற்கு தேவி பதில் கூறினாள் :

''இங்கு உலகில் உள்ளவள் நான் ஒருத்தியே! என்னைத் தவிர இரண்டாவதாக என்ன உள்ளது? புத்தி கெட்டவனே! இவர்கள் எல்லாம் என் அம்சாவதாரமானவர்கள் (என்னைத் தவிர வேறல்லர்) என்னிடமே புகுவதைக் காண்பாய்! பின்னர் பிராம்மணீ முதலான அந்த தேவிகளெல்லாம் அந்த கௌசிகீ தேவியின் உடலில் புகுந்தனர். அம்பிகை மட்டும் தான் அப்போது இருந்தாள். தேவி பகர்ந்தாள் : ''என்னுடைய ஐசுவரிய சக்தியால் எந்த பல வடிவங்களைத் தோற்றுவித்தேனோ, அவை மீண்டும் என்னால் கவரப்பட்டன; ஒருத்தியாகவே நிற்கிறேன். யுத்தத்தில் ஸ்திரம் கொள்வாய்'' என்றாள்.

**ஏகைவாஹம் ஜகத்யத்ர த்விதீயோ கா மமாபரா ।**
**பச்யைதா துஷ்டமய்யேவ விசந்த்யோ மத்விபூதய : ॥**
**ததஸ்ஸமஸ்தாஸ்தா தேவ்யோப்ரஹ்மாணீ ப்ரமுகாலயம் ।**
**தஸ்யா தேவ்யாஸ் தநௌ ஜக்முரேகைவாஸீத் ததாம்பிகா॥**

தேவியுவாச :

''அஹம் விபூத்யா பஹுபிரிஹ ரூபைர் யதாஸ்திதா ।
தத் ஸம்ஹ்ருதம் மயைகைவ திஷ்டாம் யாஜௌ - ஸ்திரோ பவ ॥''

(தேவி மகாத்மியம் (10) 1-8

மேற்படி ஸம்வாதத்தினால் தேவி ஒருத்தியே என்பதும், அவளது லீலா விபூதியினால் பல தேவிகள் அவளது உடலிலிருந்தே (அவள் இச்சையினால்) தோன்றி வெளிப்பட்டவர் என்பதும், மீண்டும் தேவைப்படாத போது தேவியிடமே அவர்கள்

லயமடைகிறார்கள் என்பதும் தெளிவாகிறது. ஸ்ப்தமாதர்களின் பெயர்களும், வாகனங்களும் பற்றிக் குழப்பமடையத் தேவையில்லை. சாக்தத்தின் படி எல்லா ஜீவராசிகள் மட்டுமல்ல, பஞ்ச கிருத்தியங்களை இயற்றும் உயர்ந்த கடவுட் சக்திகளான பிரும்மா, ருத்திரன், விஷ்ணு, சதாசிவன் போன்றோரையும் ஆதியில் மூல பிரக்ருதியான அன்னையே சிருஷ்டித்தாள் என்பதால் இதில் மரபு வழுவோ வேறு சம்சயத்திற்கோ இடமில்லை. என்னை? தேவியின் நகக் கணுவிலிருந்தே தசாவதாரமும் நிகழ்ந்தது என லலிதா ஸஹஸ்ரநாமம் கூறுவதும் காண்க!

(கராங்குலி நகோத்பன்ன நாராயண தசாக்ருதி : ப.ஸ-80)

சப்தமாதர்களின் தொடர்பாக கூறப்படும் சில புராணங்களின் கூற்றின்படி சிவனுக்கும் அந்தகாசுரனுக்கும் இடையே நடந்த போரில் ஈஸ்வரனுக்கு உதவியாக இவர்கள் தோற்றுவிக்கப்பட்டதாக மத்ஸ்ய புராணம் தெரிவிக்கிறது. சும்ப நிசும்ப வதத்திற்கு முன், அம்பிகைக்குத் துணையாக இவர்கள் தோற்றுவிக்கப்பட்டனர் என்று மார்க்கண்டேய புராணமும் தெரிவிக்கிறது; தேவி மகாத்மியம் இதை அனுசரித்துக் கூறுகிறது. சில புராணங்களில் (தேவி பாகவதம், லிங்க புராணம், மந்திர மஹோததி போன்றவை) இவர்களை எட்டு என்றும் கூறுவதுண்டு. ஸப்தமாதர்களில் ஸ்ரீ வாராஹி ஒரு பிரதான, தனித்வமான சக்தியாக வைக்கப் பெற்று குழுவுடனில்லாமல் பிரத்யேகமாகவும் போற்றி வழிபடப்படுகிறாள் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**'ஸ்ரீதத்வநிதியில்'** வாராஹி பற்றிக் கூறும்போது ''வராக மூர்த்தியின் சக்தி! கறுப்பு நிறமானவர்; பன்றியின் முகத்தை ஒத்த முகத்தையும், பெரிய வயிற்றினையும் கொண்டிருப்பார். இவருக்கு ஆறு கரங்கள் காணப்படும். வலக் கரங்களில் ஒன்று வரத முத்திரையிலிருக்கும். மற்றையவற்றில் தண்டம், வாள் என்பன இடம் பெற்றிருக்கும். இடக் கரங்களில் ஒன்று அபய முத்திரையினைக் காட்ட, மற்றையவை கேடயம், பாத்திரம்

என்பவற்றை ஏந்தியவாறு காணப்படும். இவர் எருமையை வாகனமாகக் கொண்டிருப்பார் என்று கூறுகிறது. மேலும் தண்டநாத வாராகி, சுவப்ன வாராகி, சுத்த வாராகி என்று மேலும் மூன்று வகையான வராகியின் உருவ அமைப்புகள் பற்றியும் - இந்நூலில் கூறப்பட்டுள்ளது. தண்டநாத வாராஹி பொன்னிறமானவர். பன்றியை ஒத்த முகமுடையவர். இவரது கரங்களில் சங்கு, சக்கரம், கலப்பை, உலக்கை, பாசம், அங்குசம், தண்டம் ஆகியவை காணப்படும். இரு கரங்கள் அபய, வரத முத்திரையிலிருக்கும். சுவப்ன வராகி - மேக நிறமானவர். மூன்று கண்களைக் கொண்டிருப்பார். பிறைச் சந்திரனைச் சூடியிருப்பார். வாள், கேடயம், பாசம், அரிவாள் என்பன கரங்களில் இடம் பெற்றிருக்கும். இரு கரங்கள் அபயவரத முத்திரையிலிருக்கும். சுத்த வாராகி நீல நிறமானவர்; பன்றி முகத்தை ஒத்த முகமுடையவர், வெண்மையான பற்கள் வெளியே நீட்டப்பட்டவாறிருக்கும். தலையில். பிறைச் சந்திரனைச் சூடியிருப்பார். சூலம், கபாலம், உலக்கை, நாகம் என்பன கரங்களில் காணப்படும்! என்று ஸ்ரீ தத்வ நிதி தெரிவிக்கிறது. தத்வநிதியைப் பொருத்தவரையில் வாராஹியை சப்தமாதர்களுள் ஒருத்தியாகக் கருதி பிரதானமாக வெளிப்படுத்தியிருந்தாலும், தண்டநாதையின் வேறு பல ரூபங்களைப் பற்றிய விவரங்களையும் இது விளக்கமாக குறிப்பிட்டுள்ளது நமது கவனத்திற்குரியதாகும்.

க்ருஹீ தோக்ர - மஹா சக்ரே
தம்ஷ்ட்ரோத்த்ருத - வஸுந்தரே ।
வராஹ ரூபிணி சிவே - நாராயணி
நமோஸ்துதே ॥

தேவி மஹாத்மியம் (11-17)

☆☆☆☆☆☆

# ஸப்தமாதர் வழிபாட்டின் வரலாற்று வெளிப்பாடுகள்

வடபுலத்தில் குஷாணர்களின் ஆட்சி காலத்திலிருந்து சப்த மாதர்களின் வழிபாடு ஆரம்பமாகி வளர்ச்சியுற்றது எனலாம். வலக் கரம் அபய முத்திரையிலிருக்க, இடக் கரத்தில் பாத்திரம் ஏந்தியவாறு உள்ள சிற்பங்கள், நிற்கும் நிலையிலுள்ள இருகரமுடைய சாதாரணப் பெண்களாக இருக்கும் சிற்பங்கள் காணப்பட்டன. பின்னாளில் குப்தர்களின் ஆட்சிக் காலத்தில் சப்தமாதர் உருவங்கள் தனித்வ அம்சங்களுடன், வீரபத்திரர், விநாயகர் இடம்பெற்ற சிற்பங்களாக வடிக்கப்பட்டு வழிபடப் பெற்றன. தேவாசுரப் போர்களில் பெருந் தெய்வங்களான ஈஸ்வரன், அம்பாள் போன்றோரின் ஆணைக்குட்பட்டு ஸப்தமாதர்கள் அவர்களின் ஏவலினால் ஈடுபட்டதன் காரணமாக ஏற்கெனவே மிக உக்கிரமும் மூர்க்க குணங்களும் உடைய இவர்களது கோபமும் ஆளுமையும் கட்டுக்கடங்காமல் போனதோடு போர் முடிந்த பின்னும் இவர்களது போர் வெறிக் குணம் குறையாமல், தகாத வழிகளில் வெளிப்பட ஆரம்பித்த போது, அவர்களை ஒரு கட்டுக்குள் கொணர்ந்து அடக்கி நெறிப்படுத்தவே விநாயகரையும் வீரபத்திரரையும் ஸப்தமாதர்கள் இருக்கும் இடங்களில் உடனிருக்கும்படி சிலாரூபப் பிரதிஷ்டை அமலாக்கப்பட்டது. உதாரணமாக - நரபலி வாங்கிய வாராகி ஸ்வரூபமான ஆனைக்காவல் ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி தேவியின் மகா உக்கிரத்தை அடக்கிட ஸ்ரீ ஆதி சங்கரர் அவளது காதுகளில் ஸ்ரீசக்ர தாடங்கத்தை சாத்தியதோடு எதிரில் ஸ்ரீ விநாயகர் சிலையையும் பிரதிஷ்டை செய்து, அன்னையின் சீற்றத்தைக் குறைத்தார்.

காதம்பரி, ஹர்ஷசரிதம், பிருஹத் சம்ஹிதை, மிருச்சகடிகம் போன்ற குப்தர் காலத்திய நூல்களில், சப்தமாதர் பற்றிய வழிபாடு

நிகழ்ச்சிகளும், குறிப்புகளும் நிறைந்துள்ளன. ஒரிசாவில் புவனேசுவரத்திலுள்ள பரமேசுவரி கோயில் (கி.பி. 650) முக்தேஸ்வரர் கோயில், வைத்தால்தெனல் கோயில் (கி.பி. 775) ஆகியவற்றிலிருக்கும் மாத்ருகா சிற்பங்கள் குறிப்பிடத்தக்கன. மத்திய பிரதேசம் கூர்க்தி என்ற இடத்தில் கண்டெடுக்கப்பட்டு அலகாபாத் நூதன சாலையில் உள்ள வீரபத்திரர் - விநாயகர் சிலையுடன் கூடிய சப்தமாதர் (கி.பி. 10ஆம் நூற்றாண்டு) மாத்ருகா சிலை ரூபங்கள் 'சப்தமாதா' வழிபாடு, மத்திய இடைக்காலத்தில் தொடங்கி வளர்ச்சி பெற்ற வரலாற்றைத் தெளிவாக்கும். மேலும் இதம்பூர் என்ற இடத்தில் கிடைத்த வெண்கலத்திலான மாத்ருகா சிலா ரூபம் (இப்போது இங்கிலாந்து நூதன சாலையில்), சேரைகேலாவில் கிடைத்த சிலை 6, 7ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சிற்பம் (பாட்னா நூதன சாலை), பூரி-மார்க்கண்டேஸ்வரர் கோயில் குளக்கரையில் உள்ள சிற்பம், ஜெய்ப்பூர், வங்காளம், சத்ரை, படாசாலி ஆகிய பல தலங்களில் கிடைத்துள்ள, வழிபடப்பட்டு வரும் (சில இடங்களில்) சப்தமாதர் சிலைகள் நம் கவனத்திற்குரியன. தென்னகத்தில் முற்கால சாளுக்யர் காலத்தில் இவ்வழிபாடு சிறப்பாக இருந்ததாகத் தெரிகிறது. சாளுக்யர் காலத்தைச் சேர்ந்த ஐகோளே, எல்லோரா என்னுமிடங்களிலே சப்தமாதர்களின் சிற்பங்களைக் காணலாம்.. பல்லவர் ஆட்சிக் காலத்தில் இவர்கள் வழிபாடு சிறப்புற்றது. காஞ்சிபுரம் கயிலாசநாதர் கோயிலும் - திருகோகர்ணம், மலையடிப்பட்டி, குன்னத்தூர், திருக்காளக்குடி, திருப்பரங்குன்றம் என்னும் இடங்களில் முற்கால பாண்டியர் முத்தரையர்கள் காலத்தில் நிறுவப்பெற்ற பழமையான சப்தமாதர் ரூபங்கள் உள்ளதும் குறிப்பிடத்தக்கதாகும்.

முற்கால சோழர் காலத்தில், சப்தமாதர்களுக்கு தனியாகச் சந்நிதிகள் ஏற்பட்டன. இக்காலத்தில் கட்டப்பட்ட சிவன் கோயில் கருவறையைச் சுற்றி அமைக்கப்பட்ட பரிவார ஆலயங்கள் ஒன்று சப்தமாதர்க்குரியதாக இருந்தது. கச்சியப்பசில்பம், மாயாமதம் போன்ற சிற்ப நூல்களில், அட்ட பரிவார தெய்வங்களுள்

சப்தமாதரும் குறிப்பிடப்பட்டுள்ளனர். சென்னைக்கு அருகில் வேளச்சேரி என்னுமிடத்திலுள்ள செல்லியம்மன் கோயில், திருச்சி மாவட்டம் ஆலம்பாக்கத்திலுள்ள கோயில்கள், சப்தமாதர் களுக்கான தனிக் கோயில்களாகும்.

ஸ்ரீபெரும்புதூர் வட்டம் பிள்ளைப்பாக்கத்திலுள்ள செல்லி யம்மன் கோயிலில் சப்தமாதர் தனிக்கோயில் உள்ளது; அண்மையில் புதுப்பிக்கப்பட்டு குடமுழுக்கும் செய்யப்பட்டுள்ளது.

முதலாம் குலோத்துங்க சோழனின் தளபதியாகிய கருணாகரத் தொண்டைமான் கலிங்க தேசத்தை வெற்றி கொண்டமையைப் பாராட்டி கவிச்சக்கரவர்த்தி ஜெயங்கொண்டாரால் பாடப்பட்ட 'கலிங்கத்துப் பரணியில்' கடவுள் வாழ்த்துப் பகுதியில் சிவன், விஷ்ணு, பிரும்மா, சூரியன், விநாயகர், முருகன், நாமகள், கொற்றவை என்போரைப் பாடிய பின்பு, சப்தமாதர்கட்கு வணக்கம் செலுத்தியுள்ளமையைக் காணலாம். பாடல் வருமாறு :

**''மேதி, புள், அலகை, தோகை, ஏறு, உவணம்**
**வேழம் என்ற கொடி ஏழுடைச்**
**சோதி மென் கொடிகள் ஏழின் ஏழிரு**
**துணைப்பதம் தொழ நினைத்துமே!**
**கேழல், மேழி, கலை, யாளி, வீணை, சிலை**
**கெண்டை இனைய பல்கொடி**
**தாழ, மேருவில் உயர்த்த செம்பியர்,**
**தனிப்புலிக் கொடி தழைக்கவே!''**

மேற்படி அரிய வரலாற்றுச் செய்திகளை திருவாடுதுறை ஆதினம் பதிப்பித்துள்ள ''தெய்வத்திரு மேனிகளின் தியானம், ரூபம், யந்திரம், மந்திரம்'' என்ற நூலில் மேலும் விரிவாக படித்து அறிந்து கொள்ளலாம்.

திருச்செந்தூர் முருகப்பெருமானின் அருளால் ஐந்தாவது பிராயத்தில் ஊமைத்தன்மை நீங்கப்பெற்று, ஒப்பற்ற அருட்கவியாக மாறி கந்தர் கலிவெண்பா, மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், பண்டார மும்மணிக்கோவை,

நீதிநெறி விளக்கம், காசிக் கலம்பகம், சகல கலாவல்லி மாலை முதலான பல தமிழ்ப் பனுவல்களை இயற்றிய ஸ்ரீ ஆதி குமர குருபர சுவாமிகள், புள்ளிருக்கும் வேளூர் என்கிற வைத்தீஸ்வரன் கோயில் முருகப் பெருமான் மீது பாடிய 'முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழில்' கற்பக விநாயகர், மகாவிஷ்ணு, வைத்தியநாதர், தையல்நாயகி, திருமகள், கலைமகள், பிரமன், தேவேந்திரன் ஆகியோரைப் பாடிய பின் சப்தமாதர்களையும் சிறப்பாக பின்வருமாறு பாடிப் பரவியுள்ளார்.

''பயிறரு முதுமறை நூலைத் தெரித்தவள், பகைதொகு
புரமெரி மூளச் சிரித்தவள், பனிவரை பகநெடுவேலைப்
பணித்தவள், படுகடல் புகையெழ வார்விற் குனித்தவ(ள்)

எயிறுகொடு ழுதெழு பாரைப் பெயர்த்தவள், எறிதரு
குலிசம் விடாமற் றரித்தவள், இடுபலி கொளுமொர்க
பாலக்கரத்தினள், எனுமிவர் எழுவர் கடாளைப் பழிச்சுதுங்

(1. பிராம்மி 2. மாகேசுவரி 3. கௌமாரி 4. நாராயணி 5. வராகி 6. இந்திராணி 7. காளி (சாமுண்டி) என முறையே குறிப்பிடல் காண்க)

கயல்திரி சரவண வாவிக்கரைக்குரை கழலொடு பரிபுரம்
ஒலிட்டிடக்கட களிறொடு களிறெதிர் மோதத்
திசைத்திசை கடுநடை யுளதக ரேறச்சமர்த்தனை

முயல்தரு கறையொடு தேய்வுற் றிளைத்தொரு முழுமதி
குறைமதியாகத் துகிற்கொடி, முகிறொடு தடமதில்
வேதப்பதித்தனி முதல்வனை யறுமுக வேளைப்
புரக்கவே

இதில் குறிப்பாக தனது கொம்பினால் தோண்டி ஏழுலகத்தையும் பெயர்த்தெடுத்தவள் என்று வாராகியைக் கூறும் ''எயிறுகொடு உழுது எழுபாரைப் பெயர்த்தவள்'' என்ற வரிகள் தண்டநாதை வராஹரின் உட்சக்தியாக விளங்கி, பிரளய ஜலத்திலிருந்து பூமியை மீட்டுக் கொணர்ந்து உயிர்ப்பித்தவள் என்கிற மூலாதாரக் கருத்து வெளிப்படுகிறதல்லவா? சப்தமாதர்களுள் ஒருத்தியாக வாராஹி

இருப்பினும், தனது தனித்தகவால் மற்றவர்களைத் தன் இருப்பிடமான ''கிரிசக்கர ரதத்தில்'' வசிக்கும்படியாகச் செய்யும் பெரும் வல்லமை உடையவளாக இவள் திகழ்கிறாள்! ஆம். ''கிரி சக்கர ரதத்தில், நான்காவது தட்டில் ப்ராம்ஹி முதலான சக்திகள் (வாராஹி, மகாலட்சுமி நீங்கலாக) மற்றைய மாத்ருக்கள் தண்டநாதையின் உத்தரவுப்படி வசிக்கின்றனர் என்று ஸ்ரீ லலிதா உபாக்யானம் கூறுவதிலிருந்து வாராஹியின் பெரும் ஆளுமையும் உன்னத நிலையும், மகா வல்லமையும் தெள்ளிதின் உணரலாம்.

ஏற்கெனவே வாராஹி தேவியின் இரு தெய்விக வாசஸ்தலங்களான ஸ்ரீநகரத்தில் 16ஆம் மரகதக்கோட்டை மற்றும் மகாபத்ம அடவி ஆகியவற்றைப் பற்றி அறிந்தோம்.

அடுத்தபடி அவள் அவனியிலே தொன்றுதொட்டு வழிபடப்படும் 'ஸப்தமாதர்களில்' ஒரு முக்கிய தெய்வமாக இருந்து மக்களைக் காப்பதையும் உணர்ந்தோம்.

இனி வைணவத்திலும், சாக்தத்திலும், தாந்திரீக நெறியிலும், புத்த மதத்திலும் ஸ்ரீ வாராஹி தேவி எப்படி வழிபடப்படுகிறாள் என்பதை சற்று விளக்கமாக ஆய்வோமா? திருமாலின் மூன்றாம் அவதாரமான 'கேழல்' ஸ்வரூபத்தில் இவளது இன்றியமையாத பங்கு மற்றும் நிலைப்பாடு, ஸ்ரீ மாதாவுடன் உள்ள நெருங்கிய தொடர்பும் சேவையும், வாராஹியின் பல்வேறு விதமான ரூபங்களும் வழிபாடும், தாந்திரிக முறையில் வாமாசார நெறியில் வழிபடப்படுகின்ற வித்தியாசமான நிலை, புத்தமத மகாயானப் பிரிவில் பரவப்படும் காரணம், இவளைத் தாயாக இருந்தாலும் தந்தையாக, ரட்சணார்த்தம் காணும் 'பாவனோபநிஷத்' போன்ற சாக்த தந்திர நூல்களின் வித்தியாசமான பார்வை இப்படி பற்பல வைரமுகப்புகள் உள்ள பஞ்சமி தேவியின் பிரபாவங்களை இனிப் பகுத்துக் காண்போம்!



# வைணவத்தில் வாராஹி

**வை**ணவ நெறியில் யக்ஞ வராஹரின் சக்தியாக வாராஹி கருதப்படுகிறாள். வாராஹரின் மூக்குப் பகுதியில் மூலசக்தியாக இருந்து பூமியைத் தாங்கி பாதாளத்திலிருந்து வெளிக்கொணரவும், ஹிரண்யாக்ஷனைக் கூரிய கொம்புகளால் குத்தி சம்ஹாரம் செய்யவும் உதவுகிறாள். இவளை 'தேவாத்ம சக்தி' என்றும் உபநிஷத்துகள் கூறும். இவளுக்குரிய வேறு பல பெயர்களும் உண்டு. மூலப்ரகிருதி, மகாமாயை, யோகநித்ரை, விஷ்ணுமாயை, வராகசக்தி; திருமாலின் வராக அவதாரம் வரை வாக்தேவியாக அழைக்கப்பட்ட இவள், கிருஷ்ணாவதாரத்தில் மகாமாயாவாகத் தோற்றம் கொள்கிறாள். கம்சனுக்கு எட்டுக் கரங்களுடன் காட்சியளித்து கிருஷ்ணாவதாரத்தைத் தெரியப்படுத்தியவள் இவள்தான். பின்னர் இவள் சென்று நிலைபெற்றது விந்தியமலை உச்சி என்பதால் 'விந்தியவாசினி' எனப் பெயர் பெற்றாள். மதுகைடபர்களை ஸம்ஹாரம் செய்த பிறகு திருமாலை யோக நித்திரையில் உறங்க வைத்தவள் மகாமாயாவான இவள்தான்!

மஹாமாயா ப்ரபாவேண, ஸ்ம்ஸாரஸ்திதி காரிணா ।
தந்நாத்ர விஸ்மய: கார்யோ யோகநித்ரா ஜகத்பதே ॥

மஹாமாயா ஹரேச்சைஷா தயா ஸம்மோஹ்யதே ஜகத்।
ஜ்ஞானினாமபி சேதாம்ஸிதேவீ பகவதீ ஹிஸா ।
பலாதா கிருஷ்ய மோஹாய மஹாமாயா ப்ரயச்சதி ।
தயா விஸ்ருஜ்யதே விச்வம் ஜகதேதச் சராசரம் ॥

தேவி மகாத்மியம் முதல் அத்தியாயம் பக்கம் 63, 64

(பிரபஞ்சத்தின் இருப்பிற்குக் காரணமாக மகாமாயையின் மகிமையினால் அது நிகழ்கிறது. இதில் ஆச்சரியப்பட வேண்டியதில்லை. இந்த மகாமாயை உலக நாயகனாகிய ஹரியினுடைய யோக நித்ரையாகிறாள்)

ஞானிகளின் சித்தம் உள்படக் கவரப்பட்டு அவளால் உலகம் அனைத்தும் மயக்கப்படுகிறது - தேவி மகாத்மியம் (54)

பின்னர் இவள் தூண்டுதலின் பேரில், 'ஹயக்ரீவர்' என்கிற பரிமுகப் பெருமான் அவதாரத்தில், குதிரை முகமுடைய அசுரன் ஹயக்ரீவனை அழித்து வேதங்களை மீட்டுப் பரமனிடம் கொடுக்கச் செய்தவள். ரிக் வேதத்தில் ருத்ராணீ என்று குறிப்பிடப்படும் யுத்த தெய்வம் இவளே. ஸ்ரீலலிதாவின் சேனைத் தலைவியான தண்டநாதையும் இவளும் ஒருவரே. பிரும்மத்தின் வெளிப்பாடான வராஹரின் உட்சக்தியான வாராஹியை பிரும்மத்திலிருந்து பிரித்துக் காண இயலாது. ஆதி வாராஹி ஸஹஸ்ர நாமத்தில் 'ஹிரண்யாக்ஷநிபாதின்யை நம: ''விஷ்ணு வல்லபாயை நம:'' ''சக்ர தாரிண்யை நம: விஷ்ணுக்ராந்தாயை நம: விஷ்ணு விக்ரமாயை நம: நாராயண்யை நம:'' போன்ற பல நாமாக்கள் வாராஹியின் வைணவ நெருக்கத்தை உணர்த்தும். திருமாலின் வாகனமான கருடனைத் தனக்குப் பிரியமான வாகனங்களில் ஒன்றாக வாராஹி ஏற்றிருப்பதும் இந்த நெருங்கிய சம்பந்தத்தை ஊர்ஜிதப்படுத்துகிறது அல்லவா? ''கிருஷ்ண வல்லபாயை நம:'' திருமாலின் சங்கு சக்கரங்களைப் பிரியமுடன் ஏற்றுக் காட்சியளிப்பவள். இவளே விஷ்ணு துர்கை. தேவர்கள் ''யாதேவி ஸர்வபூதேஷூ விஷ்ணுமாயேன ஸம்ஸ்திதா நமஸ்தஸ்மை நமஸ்தஸ்மை நமோ நம:'' துதிக்கிறார்கள். ஆகவே வேதகாலத்தில் 'வாக்தேவியாகவும்' 'சரஸ்வதியாகவும்' வழிபடப்பட்ட தேவியே - வராகரின் துணை சக்தியான - ஸ்ரீ வாராஹிதேவி; திருப்பதி அலர்மேல் மங்கையின் சேனைத் தலைவியாக வாராஹி விளங்குவதாக தேவி மகாத்மியம் கூறுகிறது. அலர்மேல் மங்கை ஸஹஸ்ரநாமத்தில் வாராஹியின்

பெயர் வருவது இதை ஊர்ஜிதம் செய்யும். திருப்பதியின் ஆதி முதல் தெய்வம் ஸ்ரீ வராகமூர்த்தி என்றும், அவருக்கே முதல் பூஜை என்பதும் அவரது அனுமதியுடன்தான் ஸ்ரீநிவாசப் பெருமாள் இங்கே கோயில் கொண்டுள்ளார் என்பதும் நோக்க, வராஹர், வராஹி, திருமால், லக்ஷ்மி ஆகியோரின் ஒன்றுக்கு ஒன்று உடனாகிய நெருங்கிய சம்பந்தமும் தொடர்பும் நன்கு புலனாகும்.

திருமாலின் தசாவதாரமும் தேவியின் நகக் கணுவிலிருந்து தோன்றியவை என்று லலிதா ஸஹஸ்ரநாமம் கூறுவது நாராயணன்-நாராயணியின் தெய்விகத் தொடர்பைப் பறை சாற்றும். (கராங்குலி நகோத்பந்த நாராயண தசாக்ருதி:)

ஹிரண்யாக்ஷனைக் கொன்று வேதங்களை மீட்டதில் வராஹருக்கு ஸ்ரீ வராஹியின் பங்கு கணிசமானது. அவரது மூக்கு நுனிப் பகுதியில் உறுதியாக அமர்ந்து சக்தியும், மூர்க்கத்தனமும் தந்து அசுரனை அழிக்க அவள் உதவுகிறாள். வாராஹியின் தாமச குணம் திருமாலையும் தொத்திக் கொள்ள, பூமிதேவியைச் சுமந்து மேல் வரும்போது அங்கு நரகாசுரன் தோன்றினான். (இவன் பெயரில் தீபாவளி 'நரக சதுர்த்தியாக'க் கொண்டாடப்படுவது ஜகப் பிரசித்தம்) பலருக்கு அதிகமாகத் தெரியாத விஷயம், அஸ்ஸாமிலுள்ள நீலமலையில் காமாக்யா கோயிலைக் கட்டி யோனி பீடத்தை நிறுவி அம்பிகையை தாந்திரிகமாக வழிபடச் செய்தவன் 'நரகாசுரனே' ஆகும்! அம்பாளின் பரம பக்தனாக இருந்தும், அசுர குணத்தால் அதர்ம வழியில் சென்று உலக மக்களுக்கு சகிக்க முடியாத துன்பங்களைத் தந்தபோது அன்னை பராசக்தியான யோகமாயை, திருமாலின் அவதாரமான ஸ்ரீ கிருஷ்ணன் மூலம் அவனை சம்ஹரிக்கச் செய்கிறாள். அசுரனின் வேண்டுகோளின்படி அதை மக்கள், தீபாவளித் திருநாளாகக் கொண்டாடும்படி செய்ததில் திருமால்-அம்பிகை இருவருக்கும் சம பங்குண்டு. திருமாலின் எல்லா இயக்கங்களும், இயக்கமின்மையும் விஷ்ணுமாயையின் வழிகாட்டுதல் மற்றும் விருப்பப்படியே செய்யப்படுவன என்பதைப் புராணங்களை

ஊன்றி, படித்துணர்ந்தோர்க்கு வாராஹர்-வாராஹியின் நெருங்கிய தொடர்பு வியப்பளிக்காது, இயல்பானது என்றும் தெளிவாகும்.

இதனை தேவி மகாத்ம்யம் பின்னும் உறுதிப்படுத்தும். சண்ட முண்டனைக் காளி வதைத்தபின் சாமுண்டி எனப் பெயர் பெற்றாள். சும்ப நிசும்பர்களுடனும் ரக்த பீஜனுடன் அவள் போரிடும்போதும் வாராஹி துணைக்கு வந்தாள் என்பதை தேவி மகாத்மியம் தெரிவிக்கிறது.

''யக்ஞ வராஹமதுலம்ரூபம் யா பிப்ரதோ ஹரே:
சக்தி: ஸாப்யாயயௌ தத்ர வாராஹீம் பிப்ரதீம்தனும்''

ஹரியின் ஒப்புயவற்ற யக்ஞ வராஹ வடிவத்தை எடுத்துக்கொண்ட சக்தி எவளோ, அவளும் அங்கு வாராஹீ வடிவு தாங்கி வந்து சேர்ந்தாள்.

(19/458) எட்டாம் அத்தியாயம் தேவி மகாத்மியம்



# சாக்தத்தில் வாராஹி

**சா**க்த நெறியில் வாராஹி மூன்று வித நிலைகளில் பணியாற்றுகிறாள். சக்தி சேனைகளின் தலைமைப் பொறுப்பை ஏற்று தண்டநாதை என்று அதன் சேனாதிபதியாக இருப்பது ஒன்று. சப்தமாதர்களில் வாராஹியெனும் சக்தியாக உலகைப் புரப்பது மற்றொன்று. இது தவிர குண்டலினி யோக முறையில், நம் உடலின் புருவ மத்தியில் இருக்கும் ஆக்ஞா சக்கரத்திலும் பஞ்சமியாக அவள் இருந்து சாதகனின் யோக சாதனைக்கு உதவுகிறாள். அவளுக்குப் பல பெயர்கள்; தந்திர ராஜ தந்திரம் என்ற சக்தி தந்திர நூல் தரும் ஐந்து நாமாக்கள் வாராஹி, பஞ்சமி, விஸ்வ விஜயா, பத்ர கௌமுதி மற்றும் வார்தாளி. ஸ்ரீ லலிதா உபாக்யானத்தில் ஹயக்ரீவர் தெரிவிக்கும் நாமாக்கள் பன்னிரண்டு. பஞ்சமி, தண்டநாதா, ஸங்கேதா, சமயேஸ்வரி, சமய சங்கேதா, வாராஹி, போத்ரிணி, சிவா, வார்தாளி, மகாசேனா, ஆக்ஞா சக்ரேஸ்வரி, அரிக்னி. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் எழுபதாவது நாமாவளி வாராஹியை ''கிரிசக்ர ரதாரூடா தண்டநாதா புரஸ்கிருதா'' என்று குறிக்கிறது. கிரிசக்கர்ம் என்கிற ஐந்து தட்டுகள் கொண்ட தேரிலமர்ந்து தண்டநாதை ஸ்ரீ லலிதா பரமேஸ்வரியின் சமூகத்தில் சேனைத் தலைவியாக முன்னிற்கிறாள். தனது செயல்பாடுகளுக்குத் துணையாக பரமேஸ்வரியே சிருஷ்டித்த தேவிகளில் மந்திரிணியும், வாராஹியும் அம்பாளுக்கு அடுத்த இடத்தில் இருந்து கொண்டு சேவை புரிகின்றனர். அம்பாளின் பலிதேவதை வாராஹியே! அதாவது அன்னையின் நைவேத்யங்கள், அன்னைக்காக ஆகுதி செய்யப்படும் பொருள்களை பட்டாரிகாவுக்காகப் பெற்றுக் கொள்ளும் உரிமை பெற்றவள். லலிதா தேவியின் உணர்வுகளை சங்கேதமாகப் புரிந்து கொண்டு

அதற்கேற்ப அன்னையிடம் உரையாடுபவள் என்பதால் **'சங்கேதா'** எனப் பெயர் பெறுகிறாள். அதேபோல் அன்னையின் ஆணைகளை உடனுக்குடன் நிறைவேற்றுபவள் என்பதால் **'ஆக்ஞா சக்ரேஸ்வரி'**. வேறொரு பொருளில் நம் உடலில் 'ஆக்ஞா சக்கரத்தில்' (புருவ மத்தி) வீற்றிருந்து சாதகனை மேல்நிலைக்கு வழி நடத்துவதாலும் ஆக்ஞாசக்ரேஸ்வரி! (கிரி) சக்கரத்தில் கிரி காட்டுப் பன்றி இழுக்கும் தேர். இன்னொரு உட்பொருள் கிரி என்பது அவளது ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், லயம் முதலான கிரியைகளைக் குறிப்பதாகும். வாராஹியிடம் யமன் நெருங்குவதில்லை. அதாவது அவனது ஆணை செல்லாத இடமாகும். ஆகவே வாராஹியின் அடிகளைத் தொழும் பக்தர்களுக்கும் 'யமபயம்' இல்லை. (கிரிசக்ரரதாரூட **தண்டநாதஅபுரஸ்** (யமனின் ஆளுகைக்குக் கட்டுப்படாதவள்) **கிருதா.**

வாராஹி அண்ட சராசரங்களுக்கும் ஆணை செல்லக்கூடிய அதிகாரம் படைத்தவளாக உலக மக்கள் கீழ் நிலையிலிருந்து உயரிய முக்தி நிலைக்கு 'ஆத்ம விசாரம்' செய்யும் நெறிக்குச் செல்ல உதவுகிறாள். லௌகீக வாழ்க்கையிலிருந்து விடுபட்டு, மேதகு ஞானமார்க்கத்தை அடைந்து உதவுகிற சக்தியாக விளங்குகிறாள். உலகமனைத்தும் அவளது மூக்கு முனையிலே அவள் தங்கியிருக்கிறாள். பிரளய காலத்தில் இயக்கமற்ற நிலையில் திருமால், யோக நித்திரையில் முடங்கியிருக்கும் போது அண்டங்கள் அனைத்தையும் விழுங்கி அசைவற்றிருந்து மீண்டும் படைப்பவள் வராஹியே!

**த்வயைதத் பால்யதே தேவி தவமத்ஸ்யந்தே ச ஸர்வதா**
**விஸ்ருஷ்டௌ ஸ்ருஷ்டிரூபா த்வம் ஸ்திதிரூபா பாலனே!**

தேவி இது உன்னாலே பாலிக்கப்படுகிறது. முடிவில் எப்போதும் நீயே (இதை) உண்டு விடுகிறாய். சிருஷ்டியில் உற்பத்தி வடிவமாகவும், பாலனத்தில் ஸ்திர வடிவாகவும் உள்ளவள் (நீயே) உலக வடிவினளே! (தேவி மகாத்மியம் முதல் அத்தியாயம் 76)

பிரளயத்திற்கும் படைப்பிற்கும் இடைப்பட்ட 'பாழ்' என்ற காலத்திற்கு உரிய தூமவதியும் இவள் என்பதால் ''தூம்ர வாராஹி'' எனவும் பெயர் பெறுகிறாள்!

பன்றி முகமும், கழுத்திற்குக் கீழ் அழகிய வனிதையின் உடலும் கொண்டு விளங்கும் பஞ்சமி, வலம்புரி சங்கு, சக்கரம், உலக்கை, ஏர் உழும் கலப்பை, கத்தி, கேடயம், அபயம், வரதம் ஆகியவற்றுடன் கூடியவள். இவள் கரத்தில் மிளிரும் உலக்கையும், கலப்பையும், பூமியின் உணவுத் தத்துவத்தின் ஆதார தெய்வம் இவள் என்பதை உணர்த்த (கலப்பை - உழுது பயிரிடவும், உலக்கை, பயிரிட்டு விளைந்த தானியங்களைக் குத்தி உணவுக்காகப் பதப்படுத்தவும் பயன்படுவது) வலம்புரி சங்கு இதன் ஒலி அவித்தையை இல்லாமற் செய்வது சக்கரம். துஷ்டர்களை அழித்து சிஷ்டபரிபாலனம் செய்வது. கேடயம் - சாதகனுக்கு ஏற்படும் அகங்கார, மமகார, காம, லோபாதி துர்க்குணங்கள் வராமல் தடுப்பது; கத்தி-உடலைப் பீடிக்கும் நோய்களை இல்லாமற் செய்தல்; ஆத்யாத்மிகம். பாம்பு, தேள்கள், துஷ்ட மிருகங்கள் ஆகியவற்றின் ஆபத்திலிருந்து காத்தல், ஆதிபௌதிகம். இயற்கை உற்பாதங்களான இடி, மின்னல், பூகம்பம் போன்றவை - ஆதிதைவீகம்; இவற்றினின்று ரக்ஷித்தல் என்று இவற்றை ஆத்யாத்மிகம், ஆதி பௌதிகம், ஆதி தைவிகம்'' என்று மூன்று பெயரிட்டும் அழைப்பார்கள்! இவை மூன்றையும் அளிப்பது சக்தி.

ஜீவப்ரும்ம ஐக்கிய ஸ்வரூபிணி, கால ஸ்வரூபிணி, லயகாரிணி, ப்ரளயகாரிணி, மந்திரார்த்த ஸ்வரூபிணி இப்படி பல நாமாக்களில் அவளை தந்திர சாஸ்திரங்கள் குறிப்பிடும்! பூமியை அழிவிலிருந்து காத்து மீண்டும் புத்துயிர் கொண்டு வாழ, வாராஹி ஒரு தாயாக, தெய்வமாக, காவல் காப்பவளாக இருந்து கண்ணிமை போல் காக்கிறாள். மூலப்ரகிருதியின் ஆணையை ஏற்று யுக முடிவில் அழிக்கிறாள். தன் வயிற்றில் அண்டங்களை அடக்கி வைக்கிறாள். (அவளது பெரிய வயிற்றுக்கு அதுவே காரணம்) மீண்டும் அண்டங்களின் சிருஷ்டியில் ஈடுபட்டு, உலக

உயிர்களைப் படைத்து உய்விக்கிறாள். பஞ்சகிருத்தியங்களை அவள் செய்வதால் அவள் - **பஞ்சாஸ்யா** மற்றும் பஞ்சகிருத்திய பராயணா. படைப்புக்கு முன்னும், படைத்த பின்னும், எப்போதும் நிலை பெற்றிருப்பது தூம்ர வாராஹியே. ''காலராத்ரியாகவும், மகாராத்ரியாகவும் (மரண ராத்திரி, பிரளய கால ராத்திரி) மோஹ ராத்ரியாகவும், பயங்கர வடிவினனாகவும் இருக்கின்றாய். நீயே ஸ்ரீ, நீயே ஈஸ்வரி, நீயே ஹரி, நீயே நிச்சய வடிவான புத்தி'' என்று தேவி மகாத்மியம் தூமவதியைக் குறிக்கிறது.

**காலராத்ரிர் - மஹாராத்ரிர் - மோஹராத்ரிச்ச தாருணா |**
**த்வம் ஸ்ரீஸ் - த்வமீச்வரி த்வம் ஹ்ரீஸ்த்வம் புத்திர்**
**போத லக்ஷணா ||**

(தேவி மகா - அத் 1/79)

அந்த முறையில் உலகைக் காத்து உய்வித்து முடிவில் தன் வயிற்றில் அடக்கி மீண்டும் அதை உயிர்ப்பித்து

**''ஸ்ருஷ்டி கர்த்ரீ ப்ரஹ்மரூபா கோப்தரீ கோவிந்த ரூபிணி**
**ஸம்ஹாரிணி ருத்ரரூபா, திரோதானகரீஸ்வரீ |**
**ஸதாசிவானுக்ரஹதா பஞ்ச கிருத்யபராயணா'' ||**

(ஸப்தஸதி/ஸப்தஸதி ஸர்வஸ்வம்)

எனப் பஞ்ச கிருத்தியங்களைச் செய்வதால் வாராஹி தசமகா வித்யைகளில் இடம் பெற்றுள்ள தூமவதி சக்தியாகவே கருதப்பட்டு **'தூம்ர வாராஹி'** என்றழைக்கப்படுகிறாள்.

தவிர சப்தமாத்ருகணங்களில் ஒருவராக இருக்கும் இவள் அந்த காசுரனை அழிக்க சிவனுக்குத் துணை போனதாகவும் மார்க்கண்டேய புராணம் தெரிவிக்கிறது. மேலும் ஏற்கெனவே குறிப்பிட்டது போல் சண்டி, சும்ப நிசும்பர்களுடன் போரிடும் போது 'யக்ஞவராஹர் உடலிலிருந்து' வாராஹி என்னும் சக்தியாக இவள் ஆவிர்ப்பவித்ததை தேவி மகாத்மியம் குறிப்பிடுவதை ஏற்கெனவே அறிந்தோம்!

அடிப்படையில் பிரும்மத்தின் பிரகிருதியாக மகாமாயா கருதப்பட்டு வருகிறாள். வேத காலத்தில் வாக்தேவியாகவும்,

* ''தரணியில் முரணிய இரணியனுடல்தனை
நகநுதி கொடு - சாடோங்கு நெடுங்கரி
ஓடேந்து பயங்கரி!''

(திருப்புகழ்-அருணகிரி)

புராண காலங்களில் சரஸ்வதியாகவும் விஷ்ணுவின் அவதாரமான யஞ்ஞ வராஹருக்கு வராஹியாகவும் நரசிம்ம அவதாரத்தில் நரசிம்மராகவும்* உடன் தோன்றி, அவர்கள் இயக்கத்திற்கு பெரிதும் துணை போகும் உட்சக்தியாகவும், ஏன் மூலச் சக்தியாகவும் போற்றப்படும் பராசக்தியின் மிக உயரிய பரிமாணமே **வாராஹி.** சாக்தத்தில் ஸ்ரீலலிதா பரமேஸ்வரியிடமிருந்து தோன்றியவளாய் தியானிக்கப்பட்டு,

தேவீ ப்ருஷ்ட ஸமுத்பவாம் ஸ்மிதமுகீம்
வாராஹ சக்திம் பராம்
ஹஸ்தாப் ஜைர்முஸலம் ததைவநிசிதம்
கட்கம் ஹலம் கேடகம்
பிப்ராணாம் அஸிதத்யுதிம் மஹிஷகாம்
பக்தேஷ்ட ஸந்தாயினீம்
வாராஹி மபி மாதரந்து ஜகதாம்
பத்ரப்ர தாம் பாவயே ||

அவளது படைத்தலைமை ஏற்கும் நம்பிக்கைக்குரிய தேவியாக **தண்டினி** விளங்குகிறாள்.

ஆனால் தந்திர சாஸ்திர நூல்களான ''தந்திர ராஜ தந்திரமும்'' ''பாவனோபநிஷத்தும்'' வாராஹியை ஒரு புதிய கோணத்தில் நமக்கு அறிமுகப்படுத்துகின்றன. அதை அடுத்த பகுதியில் காண்போம்!



# தந்த்ர சாஸ்திரத்தில் வாராஹி

தந்த்ர சாஸ்திரத்தில் வாராஹி மிகவும் முக்கியமான இடத்தில் வைக்கப்பட்டு வணங்கப்படுகிறாள். தந்திர ராஜ தந்திரத்தில் **வாராஹி, பஞ்சமி, விஸ்வ விஜயா, பத்ரகௌமுதி, வார்தாளி** ஆகிய பெயர்களில் தண்டநாதை அழைக்கப்படுகிறாள். ஸ்ரீ லலிதா தேவியின் தந்தையாக வாராஹியும், தாயாகக் குருகுல்லா தேவியும் குறிக்கப்படுகிறார்கள்.

''வாராஹி, பஞ்சமீ, விஸ்வவிஜயா பத்ரகௌமுதி
வார்தாளி சேதி விக்யாதா ஸ்தம்பனா தாகி
லேஷ்டா''

(தந்த்ர ராஜதந்த்ரம் - III-88-89)

''பலிதேவ்ய ஸ்வமாயாஸ்யு: பஞ்சமி ஜனகாத்மிகா
குருகுல்லா பவேன் மாதா புருஷார்த்தஸ்து ஸாகர''

இதன்படி வாராஹி பஞ்சமியாக, பஞ்சகிருத்தியங்கள் செய்பவளாக ''ஜனகாத்மிகா''வாக அதாவது ஸ்ரீ லலிதாவுக்குப் பிதாவாகச் சொல்லப்படுகிறாள். வாராஹியின் செயல்பாடு களிலுள்ள ஆண்மைத் தன்மையினால் உயிர்ப் படைப்பின் எலும்புப் பகுதியாகவும், குருகுல்லா சதைப் பகுதியாகவும் கருதப்படுகிறார்கள். படைத்தலுக்குக் காரணமாக வாராஹியும், காரியமாக குருகுல்லாவும் விளங்குவதை தந்திர சாஸ்திரங்கள் தெரிவிக்கின்றன. இந்த நிலையை ''பாவனோப நிஷத்தும்'' ஊர்ஜிதப்படுத்துகிறது.

''வாராஹி பித்ரூபா குருகுல்லா பலிதேவதா மாதா''

வாராஹி ஒரு பெண் தெய்வமாக இருப்பினும் ''பாவனோபனிஷத்'' அவளை ஓர் ஆண் தெய்வமாக வர்ணிக்கிறது. அவள் ஒரு தந்தையாக இருந்து நமக்கு வரும்

துன்பங்களைத் தடுத்துக் காக்கிறாள்; குருகுல்லா ஒரு தாயாக இருந்து கொண்டு நமக்கு நன்மையானவற்றைத் தருவதில் முன்னிற்கிறாள். பராபட்டாரிகாவின் பலிதேவதையாகவும் வாராஹி இயங்குகிறாள். அதே போல குருகுல்லா 16 நித்யா தேவிகளின் பலி தேவதையாக இயங்குகிறாள். வாராஹியின் மூல மந்திரம் 110 அட்சரங்கள் கொண்டதாகும், குருகுல்லாவினுடைய மந்திரம் 25 அட்சரங்களை உடையதாகும். (தாராவின் மந்திரத்தை ஒத்ததாக இது இருக்கிறது) பாவனோபநிஷத் இந்த இரண்டு தெய்வ சக்திகளைப் பற்றி மட்டும்தான் குறிப்பிடுகிறது. உலகின் படைப்புத் தொழிலை இவர்கள் இருவருமே இணைந்து செய்வதனால் உலகின் முதல் ஆதிபெற்றோராகப் பாராட்டப் பெறுகின்றனர்.

''தந்திர ராஜ தந்திரம்'' தியான ஸ்லோகத்தில் வாராஹியை வர்ணிக்கும்போது, ''உருக்கி வார்த்த பொன்னைப் போன்ற சுவர்ண நிறமுடைய பெண் வடிவத்துடன், கழுத்திற்கு மேல் பன்றியின் முகமும் கொண்டவளாய், பழுப்பு நிற பிடரி மயிர் துலங்கிட, மூன்று நேத்திரங்களுடன், எட்டு கரத்தில் அபய வரத ஹஸ்தத்துடன், சங்கம், சக்கரம், தாமரை, பாசம், உலக்கை, கலப்பை ஆகியவற்றை ஏந்தியவளாய் கருடாசனத்தில் சுகமாக வீற்றிருக்கிறவளை மனத்தில் தியானிக்கிறேன்'' என உள்ளது.

''த்யாயேச்ச தேவீம் கோலாஸ்யாம் தப்தகாஞ்சன
ஸன்னிபாம் ।
ஆகண்டம் வனிதாரூபாம் ஜ்வலத்பிங்க சிரோருஹாம் ।
த்ரிநேத்ரா மஷ்டஹஸ்தாஞ்ச சக்ரசங்க மதாம்புஜம் ।
பாசஞ்ச முசலம் சௌரமபய வரதம் ததா
த தானாம் கருடஸ்கந்தே சுகாசீனாம் விசிந்தயேத் ॥

(தந். ரா. தந். அத் 23)

வாராஹியின் பல்வேறு ரூபங்களைப் பார்ப்போமேயானால், விஷ்ணு அம்சமான சங்கு, சக்கரம், கதை, தாமரை மலர் ஆகியவற்றுடன் கருடன் மற்றும் வாகனங்களை உடையவளாய்,

ஒரு 'காக்கும்-தெய்வமாக' காணப்படுகிறாள். அவளே வேறு ரூபங்களில் உலக்கை, கலப்பை, கோடாலி ஆகியவற்றுடன் உயிர்களைப் போஷிக்கும் (சாகம்பரி போல்) ஒரு விவசாயப் படைப்புக் கடவுளை ஒத்துத் தோற்றம் கொள்கிறாள். வேறு சிலவற்றில் பராசக்தியின் சேனைத் தலைவியாக கத்தி, கேடயம், சக்தி ஆயுதம், தண்டம் ஆகியவற்றுடன் ஒரு சம்ஹார தேவியாகக் காட்சி தருகிறாள். பிறிதொரு ரூபத்தில் மரணத்தின் தேவியாக கருமையான நிறத்துடன் உக்கிரமாக, கரங்களில் பாசம், சூலம், அங்குசம் ஆகியவற்றுடன் எருமை அல்லது பிரேத வாகனத்தில் தென்திசையில் இருப்பவளாகவும் வாராஹி ஆவிர்ப்பவித்து அச்சமூட்டுகிறாள். **வாக்ஸதம்பனகாரி** என்பதால் இவளைப் பற்றி விவாதமிடுவதோ, பூஜா முறையினாற் கட்டுப்படுத்துவதோ இயலாத செயலாகும். பணிந்து பக்தியுடன் வழிபட வேண்டிய மகாசக்தி இவள், என்பதை உணர வேண்டும்.

'ஸ்ரீதத்வநிதி' சப்தமாதர்களில் ஒரு தேவியாக வாராஹியைக் கீழ்வருமாறு குறிப்பிடுகிறது -

''வாராஹி கருமைநிறமுடையவள்; பெரிய வயிறுடையவள்; எருமை மாட்டை வாகனமாக உடையவள்; ஆறு கரங்களை உடையவள். தனது வலப் புறமுள்ள இரு கரங்களில் தண்டமும் கத்தியும் ஏந்தியவள். மூன்றாவது கரம் வரத முத்திரையில், அதே போல் இடப் புறமுள்ள மூன்று கரங்கள் முறையே கேடயத்தையும் பாத்திரத்தையும் அபய முத்திரையையும் தாங்கியவாறு உள்ளன'' என்றும் தெரிவிக்கும்.

> **கிருஷ்ணவர்ணாது வாராஹி மகிஷஸ்தா மகோதரி**
> **வரதா தண்டினி கட்கம், பிப்ரதி தக்ஷிணே கரே**
> **கேடபாத்ராபயான் வாமே சுகராஸ்யால ஸமுத்புஜா**
>
> (தத்வநிதி)

கரியநிறம் - ஸ்ரீ கிருஷ்ணனைப் போல; மரணத்தை நினைவுபடுத்தும் எருமையை வாகனமாகக் கொண்டவள்; உலகையே தன் வயிற்றில் அடக்கி வைப்பதால் 'மகா-உதரி'; தென்

திசைக்குரியவள்; காத்தலுக்குரிய திருமாலின் ஆயுதங்களைத் தாங்கி காத்தல் தொழில் செய்பவள்; வேளாண்மை உற்பத்திக்குரிய கலப்பை முதலான கருவிகளைத் தாங்கி உணவளித்து உலகைப் புரப்பவள்; பாசம், சூலமாதி ஆயுதங்களை ஏந்தி மரண தேவியாக மாறி இறுதியில் உலகை அழிப்பவள்; இப்படி சதாசிவனின் பஞ்ச கிருத்தியங்களை லயத்துடன் செய்யும் பஞ்சமீ! தந்திர சாஸ்திரத்தில் இவள் **ப்ருஹத் வாராஹி, மூல வாராஹி, ஸ்வப்ன வாராஹி** போன்று 9 வகையாகப் போற்றப்படுகிறாள்''

பஞ்ச பூதங்களும் இவள் கட்டுக்குள் அடங்கும். வாராஹியை பஞ்சமியில் பூஜிக்க வேண்டும் என்று சொல்வதன் நோக்கம், அவளே பஞ்சமியாக விளங்குவதால் தான், **'பஞ்சமி பஞ்சபூதேசி'** என்று போற்றப்படுபவள். இவளை ஞானசாலினி என்றும் ஞானேஸ்வரீ என்றும் தந்திர சாஸ்திரங்கள் போற்றும்!''

**''பஞ்சமீ, பஞ்சபூதேசி, பஞ்ச சங்க்யோப சாரிணி சாஸ்வதி, சாஸ்வதைஸ்வர்யா, சர்மதா, சம்பு மோகினி''** என்று லலிதா ஸஹஸ்ரநாமம் இவள் பெருமையைக் கூறுகிறது. பிராம்மி முதலான எட்டு சக்திகளில் ஐந்தாவதாக விளங்குபவள்; ஆதி வராஹரின் உட்சக்தி; ஐந்தொழில் புரியும் சதாசிவர் பத்தினி; துரியாதீதநாயகி; ஐந்து மகார வழிபாட்டை ஏற்றவள் **(வாமகேஸ்வரி);** பஞ்சபூதங்களின் தேவி; பஞ்ச உபசாரங்களால் பூஜிக்கப்படுபவள்; என்றைக்கும் நிலைத்திருப்பவள்; நிலைத்த செல்வத்தைத் தருபவள்; சுகமளிப்பவள்; சிவனையே மயங்கச் செய்பவள்'' என்று பலபடப் போற்றும் தெய்வப் பொருளாக வாராஹி 'தந்திர சாஸ்திரங்களில்' மிளிர்கிறாள்.

☆☆☆☆☆☆

# தாந்திரிக வழிபாட்டில் வாராஹி

அன்னை பராசக்தியின் வழிபாட்டை பொதுப்படையில் ஸ்ரீவித்யா தந்திரம் என்று குறிப்பிடுவது வழக்கம். இது வேதம், ஸ்ரீ லலிதா உபாக்யானம், தேவி மகாத்மியம் என்கிற, துர்கா சப்த சதி, ஸ்ரீ தந்திர ராஜ தந்திரம், ஸ்ரீதத்வநிதி, ஸ்ரீவித்யாமந்திர மகோததி, பாவனோபநிஷத், வரிவஸ்யா ரகஸ்யம், ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமம், பரசுராம கல்ப சூத்திரம் போன்ற சாஸ்திர நூல்கள், வராஹ மத்ஸ்ய, மார்க்கண்டேய, அக்னி, தேவி பாகவதம் போன்ற பல்வேறு புராணங்கள், பாகவதம், பாரதம், ஆகியவற்றின் வழி விளக்கப்பெறும் வழிபாட்டின் **சமயாச்சார நெறி** அனைத்துமே ஸ்ரீவித்யா தந்திரங்களில் அடங்கும். ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதாள் நெறிப்படுத்திய ஷண்மதங்களிலும், பஞ்சாயதன பூஜைகளில் அங்கம் பெறும் ஸ்ரீமாதாவின் பூஜைகள் சதாச்சார நெறிகளுக்கு உதாரணமானவை. ஆகவே முதலில், ஸ்ரீ வித்யா தந்திர சாஸ்திரம் வேறு, சக்தியின் தாந்த்ரீக வழிபாடு வேறு என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். இரண்டையும் ஒன்றாக்கிக் குழப்பிக் கொள்ளக்கூடாது. சதாச்சாரம் என்று சொல்லக்கூடிய வேதமார்க்கத்தின் படி, சாஸ்திரப்படி புராணங்கள் மற்றும் வேதகால முனிவர்களின் வழிபாட்டு முறையில், வெளிப்படையாக அமைந்த சக்தி வழிபாடு ஸ்ரீவித்யா தந்திரமாகும். மாறாக, பஞ்சமகாரங்களின் சேர்க்கையோடு ரகசியமாகச் செய்யப்படும் வாமாச்சார முறை தாந்திரிக வழிபாடாகும். மிகச் சக்தி வாய்ந்த வாராஹி, காளி, சண்டி, பகளாமுகி, தூமவதி, காலராத்ரி, பைரவி போன்ற போர்த் தெய்வங்களை சமயாச்சாரமல்லாத, வாமாசார முறையில் - பஞ்சமகாரங்களைக் கொண்டு வசப்படுத்தி வழிபடுபவது

**'கௌலமார்க்கம்'** என்றும் 'தாந்ரீக முறை வழிபாடு' என்றும் கூறப்படுவது. **'காபாலிகம்'** என்ற நெறியும் கூட இதைச் சேர்ந்தது தான். மிருக பலி முதல் நரபலி வரை கொடுப்பது இந்த பூஜைகளில் அவசியமானதாகக் கருதப்பட்டது. மது, மாமிசம், மத்ஸ்யம், மைதுனம், முத்ரா ஆகிய பஞ்சமகாரங்கள் பூஜையில் பயன்படுத்தப்பட்டன. பூர்வத்தில் சதாச்சாரம் ஆக (சத்+ஆசாரம் = நல்ல நெறிமுறை) இருந்த இந்துமத வழிபாட்டில் தந்திர நெறி வெளியிலிருந்து வந்து புகுந்தது என்றும் தெரிய வருகிறது. வேத வழிபாட்டிற்கு மாறாக இந்த 'தந்திர' வழிபாடு வெளிநாடுகளிலிருந்து இந்தியாவிற்கு வந்ததோடு, ஆரிய திராவிடக் கலாச்சாரங்களுடன் கலந்தது என்றும் ஆய்வாளர்கள் கூறுகிறார்கள். அதன்படி மது, மாமிசம், மதுப் பாத்திரம் ஆகியவற்றைக் கையில் ஏந்திய பெண் சக்தியாக, இந்து சமய உக்கிர தெய்வங்கள், பிரேதம் அல்லது எருமை மாட்டின் மீது ஏறி நிற்பவர்களாக, கபால குண்டலங்களை கழுத்தில் மாலையாகப் போட்டிருப்பவர்களாக கையில் பயங்கர ஆயுதங்களுடனும் பயங்கரமாகவும் சித்திரிக்கப்பட்டனர். தாந்திரிக வழிபாட்டில் ஆண் பெண் சேர்க்கையும் ஒரு முக்கிய அங்கமாக ஆக்கப்பட்டது. ஆண் பெண் இணைப்பின் மூலம் தான் இறுதியான ஆன்மிக விடுதலை கிடைக்கும் என்பதுதான் தாந்திரிக வழிபாட்டின் அடிப்படைக் கோட்பாடு. அந்த முறையில் வாராஹி பெரிய வயிறுடனும், திரண்ட மார்பகங்களுடனும், மாமிசமும், மதுக் கோப்பையை ஏந்தியவளாகவும், பெரிய மீனை வாயில் கவ்வியிருப்பது போலவும் உள்ள சிலாரூபங்கள் உருவம் வைத்து வழிபடப்பட்டன. முதல் நூற்றாண்டின் பிற்பகுதியில் தாந்திரிக முறை வழிபாடு புத்த சமயத்தவர் மூலம் பரவி பாரதம் புகுந்த இந்த நெறிமுறை வடக்கே முதலில் ஜாலந்திர, பூர்ணகிரி, ஸ்ரீபர்வதம், உத்யான, காமாக்யா பீடங்களில் வேரூன்றியபின், இதர பாகங்களுக்கும் மெதுவாகப் பரவத் தொடங்கின. வாமாசார வழிபாட்டின் பிரதான நோக்கம் அஷ்டமாசித்திகளை அடைவதுதான். வாழ்க்கையில் வெற்றி, பணம், மகிழ்ச்சி சத்ரு

அழிப்பு, பிறரை வசப்படுத்துதல், காம இச்சையைப் பூர்த்தி செய்து கொள்ளுதல் ஆகிய பல அடாத தீய காரியங்களுக்கும் இந்த தெய்வீக சக்திகளைப் பயன்படுத்திப் பலனடையும் பேராசை, மன பலவீனம் இவற்றால் இந்த வாமாசார தாந்திரீக முறை ஒரு பக்கம் ரகசியமாக வளர்ந்தது. வைணவத்திற்கும் சாக்தத்திற்கும் பாலமாகப் பொதுவில் இருப்பவள்-வாராஹி. அத்துடன் உலகின் படைப்பு, காத்தல், அழிப்பு ஆகிய முச்செயல்களையும் செய்யும் ஆற்றல் படைத்த மாபெரும் தேவியாக, மூதறிவுடைய ஞானேச்வரியாகவும், ஆக்ரோஷமான துணிவு கொண்ட படைத்தலைவியாகவும் வாராஹி விளங்கியதால் ''தாந்த்ரிக நெறியாளர்கள்'' பஞ்சமியைத் தம் வழிபடு தெய்வமாக பிரதானமாக வரித்து உபாசனை செய்ய முற்பட்டார்கள் என்று ஆராய்ச்சி வல்லோர் தெரிவிப்பதாக சிறந்த வாராஹி ஆராய்ச்சி வல்லுநரான திருமதி ஹரிப்ரியா ரங்கராஜன் தம் ஒப்பற்ற 'இமேஜஸ் ஆஃப் வாராஹி'' என்று நூலில் (பக் 57, 58) குறிப்பிடுவதும் நம் கவனத்திற்குரியது.

மேலும் இந்த அரிய ஆய்வு நூலில் நமது ''தாந்திரிக வாராஹி''யின் பல சிற்பங்களின் புகைப்படங்கள் பிரசுரிக்கப் பட்டுள்ளது இந்தக் கருத்துக்கு வலிமை சேர்க்கும். மேற்படி சிற்பங்களில் மதுப்பாத்திரம், மீன் சகிதமாக வாராஹி உள்ளதும், பானை போன்ற வயிறும், பெரிய மார்பகங்களும், பெண் எருமை அல்லது பிரேத வாகனமும் கொண்டு விளங்குவதும் குறிப்பிடத்தக்கதாகும். ஒரிசாவில் **'சௌரசி'** கோயிலில் காமக் கலையை விளக்கும் வாமாசார நெறிச் சிற்பங்கள் காணப்படுவதும் அங்கு தாந்திரிக வழிபாடு பரவலாக முன்னாளில் நிலை பெற்றிருந்த உண்மையைக் கூறும்.



# புத்த மதத்தில்
# வாராஹி தாந்திரிக வழிபாடு

புத்த மதத்தில் வாராஹி வழிபாடு இந்துசமய நெறிக்கு அப்பாற்பட்டு வித்தியாசமாக விளங்குவது. அவர்கள் இந்த தேவியை ''வஜ்ர வாராஹி'' என்ற பெயரில் வணங்குகிறார்கள். புத்தமதம் ஹீனயானம், மஹாயானம் என்ற இரண்டு பிரிவுகள் கொண்டது. அதில் ஹீனயானப் பிரிவு நமது சதாச்சாரத்தைப் போல், நன்னெறியைப் போதிப்பது. உணவுக் கட்டுப்பாடு, உபவாசம், மது மாது-விலக்கல், கடுமையான தவ வாழ்க்கை ஆகியவற்றை புத்தர் போதித்த வழியில் கடைப்பிடிப்பது. ஆனால் மகாயானப் பிரிவில் இவை தளர்த்தப்பட்டு, ருசிமிக்க உணவுகள், மது மாது ஆகியவற்றின் சேர்க்கைகளும் அனுமதிக்கப்பட்டு, கிட்டத்தட்ட வாமாச்சார மார்க்கம் போலிருப்பது. மேற்படி வஜ்ராயன புத்த நெறியில் வஜ்ர வாராஹி தாந்த்ரீக முறையில் வழிபடப்படுகிறாள். பஞ்சமகாரங்களின் அனுமதியினால் தாந்த்ரீக புத்த மதம் சிறிது சிறிதாக நாளடைவில் பொலிவிழந்து நலிவடைந்த நிலையில் இன்று உள்ளது. வைரோசனர் என்கிற தியானி புத்தரின் முன்னோடியாகவும் ஹெருகா என்கிற தெய்வத்தின் துணைச் சக்தியாகவும் இவள் வழிபடப்படுவதை 'வஜ்ர வாராஹி தந்திரம்' போன்ற புத்த மதங்கள் தெரிவிக்கின்றன. வஜ்ர வாராஹியின் உருவம் இரண்டு கரங்களுடனும், சிலவற்றில் நான்கு கரங்களுடனும், நெற்றிக் கண்களுடனும், நிர்வாணத் தோற்றத்தில், பிரேதத்தின் மீது ஏறி நடமிடும் தோற்றத்தில்

காணப்படும். அவளைச் சுற்றி நான்கு தேவதைகள் **டாகினி, லாமா, கண்டரோஹா** மற்றும் **ரூபிணி** சூழ்ந்து இருப்பார்கள். வேறு சில ரூபங்களில் **வார்தாளி, வாதாலி, வராலி, வராஹமுகி** என்ற நான்கு பரிவார தெய்வங்களுடன் 'மரீசி' என்ற பெயரில் பன்றி முகத்துடன் ஏழு வராகங்கள் பூட்டிய தேரில் ஆரோஹணிப்பவள். மற்றொரு சுவையான செய்தி புத்த மதத்தில் உள்ள ஒரு பெண் தெய்வம் அதன் பெயர் **க்வான்-இன்.** கடல் பயணங்களில் யாத்திரைகளில் ஏற்படும் தடங்கல்களை போக்கிட, சுகமான பிரயாணமாக அமைய க்வான்-இன் எனும் கருணைத் தெய்வத்தை பௌத்தர்கள் வணங்குகிறார்கள். இவளை இந்தியாவிலிருந்து வந்த கடவுள் என்று புத்த பிக்குகள் கூறுவார்கள். ஒரு கரத்தில் கத்தரியும் மற்றொரு கரத்தில் ரத்தம் நிரம்பிய கபாலமும் சடலத்தை மிதித்தபடி இருக்கும் இவளை **வஜ்ர வாராஹி** என்றும் திபெத், நேபாளம் போன்ற நாடுகளில் வணங்குவர். இவள் வேறு யாருமல்லர். இவள் தசமகாவித்யை வருகின்ற **தாரா தேவியே!** மகாபத்ம அடவியில் குருகுல்லாவின் தோழியாக ஓடக்காரியாக 'தாரிணி'யாக இருந்து, வாராஹியின் ஆணைப்படி ஏவல் செய்பவள். இப்படியாக புத்த மதத்திலும் வாராஹி வழிபாடு ஊடுருவி, பெயரும் உருவும் சிறிது மாறி விளங்குகிறது எனத் தெளியலாம்.

தசமகாவித்யையில் இவள் **நீல சரஸ்வதி, உக்ரதாரா, சுக்ல தாரா, நீல தாரா, சித்ர தாரா** என ஐந்து பெயர்கள் கொண்டவள். இவளை இராமபிரானின் அம்சமாகக் கூறுவர். **வாக்தேவி - சரஸ்வதியாக** வேத காலத்தில் பரிணமித்து, பின்னர் புராணங்களில் சப்தமாதர்களில் ஒருவராகவும், தசமகா வித்யாக்களில் இரண்டாவது இடத்திலும் விளங்கி, பரதேவதையின் சக்தி சைன்யத்தில் சேனாநாயகியாய் ஒரு பாதுகாப்புத் தெய்வமாகத் திகழ்ந்து, வைணவத்திலும் சாக்தத்திலும் பூமாதேவியைக் காத்து ரட்சிப்பவளாக பரிணாமம் பெற்று, ஹிந்து மதத்திலும், புத்த மதத்திலும் தாந்திரிக வழிபாட்டு முறைகளிலும் ஆழங்கால்பட்டு இந்தியப் பேரரசர்களின் காப்பு தெய்வமாக இருந்து காத்து, கீழை

நாடுகள் முழுவதும் வணங்கி வழிபடப்பட்ட **ஸ்ரீ வாராஹி அன்னை, ஆதி வாராஹி, பிருஹத் வாராஹி, லகு வாராஹி, பஞ்சமி, அஸ்வாரூடா, சுத்த வாராஹி, தண்டநாத வாராஹி, தூம்ர வாராஹி, ஸ்வப்ன வாராஹி, வார்தாளி** போன்ற பல ரூபங்களில் நவமாகக் காட்சி தந்து நானிலத்தை ரட்சிக்கிறாள். அவளது வழிபாட்டிற்குரிய பல மிக முக்கியமான ருபங்கள், அவற்றுக்குரிய மூல மந்திரங்கள், தியானச் சுலோகங்கள், வழிபடுபலன் ஆகியவற்றை விளக்கமாக வரும் அத்தியாயத்தில் இனி காண்போம்.

☆☆☆☆☆☆

# வாராஹியின்

# பல வழிபாட்டு வடிவங்கள்

## 1. ஸ்ரீ மகா வாராஹி (ஸ்ரீ ஆதி வாராஹி)

ஸ்ரீவித்யா மகார்ணவத்தில் வாராஹி கவசமும் தியானமும் கொடுக்கப்பட்டுள்ளன. ''ஆதி வாராஹி மாதா நீலக்கல் போல் ஒளிரும் நீல நிறமுடையவள் என்றும், சந்திரன், சூரியன், அக்னி ஆகியவற்றாலமைந்த த்ரிநேத்ரங்கள் உடையவள் என்றும், பிரும்மா, விஷ்ணு, இந்திராதி தேவர்களால் பணிவிடை செய்யப்படுபவள் என்றும்,மாத்ருகாக்களும் பைரவர்களும் சேவை செய்து காத்துக் கிடக்கிறார்கள் என்றும், கழுத்தில் நெக்லஸ், காதுகளில் குண்டலங்கள், கரங்களில் வளையல்களும், மற்றும் இதர ஆபரணங்களும் பொலிய பல இரத்தினங்கள் இழைத்த முடியும், கொண்டு கவினுற விளங்குபவள். மானுட இனத்தின் நோய்களைத் தீர்க்கும் சாஸ்திரங்களையும் - அஸ்திரங்களையும் உடையவளாய், கலப்பையும், உலக்கையும் கைக் கொண்டு திகழ்பவள்.

த்யத்வேந்திர நீலவர்ணாபாம் சந்திர சூர்யாக்னி லோசனாம்
விதி விஷ்ணுசுரேந்திராதி மாத்ரு பைரவ சேவிதாம்
ஹாரநூபுர கேயூர வலயே ரூப சோபிதாம்
ஜ்வலன்மணிகண ப்ரோத முகுடோஜ்வல ஸோபிதாம்
ஸாஸ்த்ராண்யஸ்த்ராணி சர்வாணி ஸ்வகார்ய கரணானிச
கரை: ஸமஸ்தைர் விவிதைர் பிப்ரதீம் முசலம் ஹலம்''

(ஸ்ரீவித்யா மஹார்ணவ ஆதி வராஹ கவசம்)

மேலும் அவள் கார்மேகத்தைப் போல் ஒளிரும் மேனி கொண்டவளாய், அழகிய மார்பகங்கள் பொருந்திடக் காண்கிறாள். மூன்று கண்களும் (பன்றி) கேழலின் முகமும், முடியில் சந்திர

கலையும், உறுதியான பற்களும் திகழச் சோபிக்கிறாள். அரவிந்தம் நிகழ்த்த அவள் கரங்களில் கத்தியும், கேடயமும், பாசக்கயிறும், அரிவாளும் தாங்கி மங்கலகரமான அணிகள் பூண்டு, அழகிய அஸ்வத்தில் ஆரோஹணித்து சௌபாக்கியத்துடன் பொலிகிறாள்!

மந்திரம் :

''ஓம் நமோ பகவதி வார்த்தாளி, வார்த்தாளி வாராஹி,

வாராஹி, வராஹமுகி வராஹமுகி, அந்தே அந்தினி நம:
ருந்தேருந்தினி நம:

ஜம்பே ஜம்பினி நம: மோஹே மோஹினி நம: ஸ்தம்பே
ஸ்தம்பினி நம:

ஸர்வதுஷ்ட ப்ரதுஷ்டானாம், ஸர்வேஷாம் ஸர்வ வாக்சித்த
சக்ஷுர் முக கதி

ஜிஹ்வா ஸ்தம்பனம் குருகுருசீக்ரம் வச்யம் குரு குரு

ஐம் க்லௌம் ட்ட: ட்ட: ட்ட: ட்ட: ஹூம் பட் ஸ்வாஹா''

(ஸ்ரீவித்யா மஹார்ணவ ஆதி வராஹ கவசம்)

தந்த்ராஜ தந்திரத்தில் அத்தியாயம் 73-87 முதல் 110 அட்சரங்கள் கொண்ட வாராஹி மந்திர விளக்கமும், அத்தியாயம் 23ல் 16-18 வரை வாராஹியை எந்தக் காரணத்துக்கு எவ்வாறு தியானிக்க வேண்டும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஏற்கெனவே ''தியாயேஸ்சதேவீம்'' என்பது முதல் ''சுகாசீனாம் விசிந்தயேத்'' என்கிற அந்த தியான ஸ்லோகம் முன்னரே வேறு அத்தியாயத்தில் குறிப்பிட்டுள்ளது காண்க. மேற்கொண்டு என்ன காரணத்திற்காக வழிபடுகிறோமோ, அதற்கேற்றபடி சிம்மம், புலி, யானை, அஸ்வம், கருடன் இப்படி வாராகியை அந்தந்த வாகனங்களுடன் தியானிக்க வேண்டும். தவிர சாதகனின் குறிக்கோள், வேண்டுதலுக்கேற்ப தேவியை கரும்பச்சை, சிவப்பு, மஞ்சள், கறுப்பு அல்லது புகை வண்ணம் ஆகிய நிறங்களில் தியானம் செய்ய வேண்டும் என்று தந்த்ர ராஜ தந்திரம் விளக்கமாகக் கூறுகிறது.

த்யான சுலோகம்

ப்ரத்யக்ராருண ஸங்காஸ பத்மாந்தர்கத வாஸிநீம்
இந்த்ர நீல மஹாதேஜ: ப்ரகாசாம் விச்வமாதரம்
ருண்டம்ச முண்ட மாலாட்ய நவரத்ன விபூஷிதாம்
அனர்க்ய ரத்னகடித முகுடஸ்ரீவிராஜிதாம்
கௌசேயார் கோருகாம் சாருப்ரவாள மணிபூஷணாம்
ஹலேன முஸலேநாபி வரதேனாபயேன ச
விராஜித சதுர்பாஹுூம் கபிலாக்ஷிம் சுமத்யமாம்
நிதம்பினீ உத்பலாபாம் கடோரகன ஸத்குசாம்''



## 2. லகு வாராஹி (உன்மத்த பைரவி)

சப்த சமுத்திரங்களைத் தன் இருப்பிடமாகக் கொண்டவள். பக்தர்களின் துன்பங்களைப் போக்கி அவர்களின் அச்சத்தைப் போக்குபவள். எதிரிகளின் திமிரையடக்கி அறிவை உன்மத்தமாக்குபவள். வாராகியின் அங்க தேவி; கிரி சக்ர ரதத்தில் வசித்து தண்டநாதைக்குப் பணிபுரிபவள். மகாவிஷ்ணுவின் வராஹ ரூபத்திற்கு ஆத்மசக்தியாக இயங்கி, பூவுலகைத் தமது மூக்கின் நுனியில் சுமந்து மேற்கொணர்ந்த மாசக்தி; அவளைத் தியானிக்கும்போது மிகப்பெரிய கொம்புகளும், சரீரமும் உடையவளாய் தியானிக்க வேண்டும்.

சில நேரங்களில் அமைச்சரையே நேரில் பார்க்காமல் ஆனால் அமைச்சருக்கு வேண்டிய சக்தி வாய்ந்தவர் என்ற முறையில் அவரது தனிச் செயலரே காரியத்தை நமக்கு முடித்துக் கொடுப்பது போல், வாராஹியிடம் பக்தியுள்ள நல்லோர்க்கு கருணையுடன் உன்மத்த பைரவியே காரியங்களை எளிதாக முடித்துக் கொடுப்பதால் அவளை 'லகு வாராஹி' என்று அழைப்பர். மேலும் பிரதான தெய்வத்திற்கு 110 அட்சரம் என்றால் இவளுக்கு லகுவாக 17 அட்சரங்கள்தான். ஆயினும் அதிசயமான வியக்க வைக்கும் அருளும் சக்தி கொண்டவள் உன்மத்த பைரவி. இவளது பெருமை,

தன்மைகளை ஸ்ரீ வாராஹி ஸ்தவம்'' ''ஸ்ரீ வித்யா ரத்னாகரா'' பின்வருமாறு கூறுகிறது.

**மஹார்ணவே நிபதிதா உத்கரந்தீம் வசுந்தராம்**
**மஹாதம்ஷ்ராம் மஹாகாயாம் நமாம்யுன் மத்த பைரவீம்**

உன்மத்த பைரவி, மகாவாராஹியுடன் மகாபத்ம அடவியில் கிரிசக்ர ரதத்தில் வசிப்பவள். வாராஹியின் அபிமான ஸ்தலமான-மரகதக் கோட்டையில் ஸ்வப்ன வாராஹி, திரஸ்கரிணி, பஞ்சமீ ஆகியோருடனும் இவள் வசிக்கிறாள் எனறு 'லலிதோபாக்யானம்' கூறும்.



## 3. பஞ்சமி

பஞ்சப்ரும்மாக்களில் ஐந்தாவதான சதாசிவனின் பத்தினியே ப்ஞ்சமி. அவருடன் இணைந்து ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதனம், அனுக்ரஹம் (படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளுதல்), ஆகிய பஞ்ச க்ருத்யங்களை இயற்றுவதோடு சாலோக்யம், சாமிப்யம், சாருப்யம், சாயுஜ்யம் மற்றும் கைவல்யம் ஆகிய ஐந்து மோக்ஷ நிலைகளில் முடிவானதாகிய கைவல்ய நிலையையும் அருள்பவள் பஞ்சமியே.

**''ஸ்ருஷ்டிகார்த்ரீ ப்ரம்மரூபா, கோப்த்ரீ கோவிந்தரூபிணி,**
**ஸம்ஹாரிணி ருத்ரரூபா,**
**திரோதானகரீஸ்வரி, ஸதாசிவா**
**னுக்ரஹதா பஞ்ச-க்ருத்ய-பராயணா!''**

(ஸப்தசதி ஸர்வஸ்வம் - தேவி மகாத்மியம்)

பஞ்சமியை ஜனகாத்மிகா என்று ஸ்ரீ லலிதாவின் தந்தையாக தந்த்ர ராஜ தந்த்ரம் கூறுவதை ஏற்கெனவே எடுத்துக் காட்டியுள்ளோம். தீய சக்திகள் நம்மை அணுகாமல் ஒரு தந்தையைப் போல் நம்மை ரக்ஷிப்பவள் பஞ்சமி! மனித ஸ்ருஷ்டியின் எலும்பாக பஞ்சமி இயங்குகிறாள். சதையாகவும்,

தோலாகவும், குருதியாகவும் தாய்மையுடைய குருகுல்லா விளங்குகிறாள் என தந்திர சாஸ்திரங்கள் தெரிவிக்கும். **வாராஹி 'பித்ருரூபா' குருகுல்லா 'பலிதேவதா மாதா'** என்று பாவனோபநிஷத்தும் இதை வலியுறுத்தும். எலும்பு வலிமையாக இருந்தால் தானே அதைச் சுற்றிச் சதையும் குருதியும் நிலைபெற முடியும்? அந்த முறையில் பிரபஞ்ச சிருஷ்டியில் அம்பிகையின் ஆணழகியாக வாராஹியான பஞ்சமி விளங்கி, பூமிக்கு வலிமை கூட்டுகிறாள். 'பஞ்சமி பஞ்சபூதேசி' என்று லலிதா ஸஹஸ்ரநாமம் கூறும். (இவள் பஞ்சபூதங்களுக்கும் ஈஸ்வரி)

''பஞ்சமி பைரவி, பாசாங்குசை பஞ்சபாணி
வஞ்சர், உயிர்அவி உண்ணும் உயர்சண்டி காளி
ஒளிரும்கலா
வயிரவி மண்டலி மாலினி சூலி வாராஹி என்றே
செயிரவி நான்மறை சேர்திரு நாமங்கள் செப்புவரே!''

என்று இவளை அபிராமி அந்தாதி போற்றும்.



## 4. அஸ்வாரூடா வாராஹி

**ஸ்ரீ** லலிதா பராபட்டாரிகாவின் குதிரைப் படைக்குத் தலைமை வகிப்பவள் அஸ்வாரூடா. வெல்ல முடியாத இவளது குதிரையின் பெயர் 'அபராஜிதா'. அன்னையின் பாசக் கயிற்றிலிருந்து தோன்றியவள் அஸ்வாரூடை. இவள் எப்போதும் தன் அஸ்வத்தை விட்டுக் கீழே இறங்காதவள்; இறக்க வேண்டிய அவசியமில்லாமல் கோடிக்கணக்கான உபதேவிகள் குதிரைகளில் இவளை எப்போதும் சூழ்ந்திருப்பர். **அஸ்வாரூடா திஷ்டிதாஸ்வ கோடி கோடி பிராவ்ருதா** (ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்) இவளது அபராஜிதம் என்கிற பரியினைப் பூஜித்து விட்டு இவளை வழிபடுவது சகல காரியங்களும் வெற்றியடையச் சுலபமான வழியாகும். இவளை,

''தனித்தீபம் ஏற்றி வைத்துக்கொண்டு அதில் ஏகமுகமாய் ப்ரகாசிக்கச் செய்து, தேவி சிவப்புக் குதிரையில் வருபவளாகவும்

பூரண அலங்காரத்துடன் இருப்பவளாகவும், ஸகல பொன்னா பரணங்களை அணிந்தவளாகவும், எல்லா ஜனங்களையும் வசீகரணம் செய்பவளாகவும், தக்ஷிணா தேவியாகவும், யௌவ னத்தின் ஆரம்ப நிலையில் இருப்பவளாகவும், நீலக் கண்களுடை யவளாகவும், எப்போதும் உபாசகர்களுக்கு ப்ரசன்ன முகத்தோடு விளங்கி இருப்பவளாகவும் தியானம் செய்து ஜபிக்க வேண்டும் என்று வாராஹி உபாசகர்கள் கூறுவர்.

அஸ்வாரூடா வாராஹி நம் ஐம்புலன்களையும் ஆள்பவள். நம்முடைய மனத்தின் மூலம் இந்தப் புலன்களை அடக்கி நெறிப்படுத்துவாள். இங்கு ஐம்புலன்களே - ஐந்து குதிரைகளாகவும், அதை அடக்கும் சாரதியாக மனத்தில் புகுந்து நம்மை ஆட்கொள்பவள் அச்வாரூடா அன்னை. சப்த சதியில் ''எல்லா உயிர்களிடத்தும் எந்த தேவி இந்திரியங்களை ஆள்பவளாய் எங்கும் எல்லாப் பொருள்களிடத்தும் வியாபித்து நிற்கின்றாளோ அந்த தேவிக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்'' என்று கூறுவது இதனைத்தானே!

''இந்திரியாணாமதிஷ்டாத்ரி பூதானாஞ்சாகிலேஷுயா

பூதேஷு ஸததம் தஸ்யே வியாப்திதேவ்யை நமோ நம:

(தேவி மகாத்மியம் (77-356) பக் 150)

இவளது தியான ஸ்லோகம் :

''அஸ்வாரூடே கராக்ரே நவகனகமயிம் வேத்ரயக்ஷீம்
ததான
தக்ஷிணே னானாயந்தீ ஸ்புரிததனுலதா பாசபத்தான்
ஸ்வஸாத்யான்
தேவீ நித்யப்ரசன்னா சசிகலதரா ஸா த் ரிநேத்ராபி ராமா
தத்யாதா த்யாநவத்யா ஸகல சுகவர ப்ராப்தி ஹ்ருத்யாம்
ஸ்ரீயம் நம:

**மூல மந்திரம் :**

''ஆம் ஹ்ரீம் க்ரோம்
ஏஹியேஹி பரமேஸ்வரி ஸ்வாஹா''

''ஓம் ஏஹி பரமேஸ்வரிஸ்வாஹா'' (தசாக்ஷரி)
''ஓம் ஹ்ரீம் ஏஹி பரமேஸ்வரி ஸ்வாஹா''
(ஏகாதசாக்ஷரி)

போன்று பல்வேறு அக்ஷரக் கணக்குகள் உடைய வாராஹி-அஸ்வாரூடா மந்திரங்கள் உள்ளன. தக்க குருவிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளவும்.



## 5. தண்டநாத வாராஹி

''தத்வ நிதியில் உள்ள பல வாராஹி ரூபங்களில் 'தண்டநாதை- ஒரு முக்கிய இடத்தை வகிக்கிறாள். ''நூற்றுக்கால் மண்டபத்தினுள்ளே ஒரு தங்கத் தாமரையினுள் நின்ற திருக்கோலத்தில் சுவர்ணமயமான ஒளிதரும் மேனியுடன், அந்திச் சூரியனின் ஒளியைப் பிரதிபலிக்கும் செவ்வாடை புனைந்து, பல ஆபரணங்கள் புனைந்தவளாய், சங்கு, சக்கரம், கலப்பை, உலக்கை, பாசம், அங்குசம், அபய வரத முத்திரைகளும் தாங்கிய அஷ்ட கரங்களுடன், பிறைச் சந்திரனை முடியில் தாங்கி, வராஹ முகத்தோடு காட்சி தருகிறாள் தண்டினி தேவி''

''தண்டநாதா தத்ர தேவீ சதஸ்தம்பாட்ய மண்டபே
கார்த்தஸ்வரமயாம், போஜகர்ணிகா மத்ய ஸம்ஸ்த்திதாம்
பிந்து திரிகோண விருத்தாட்யம் ஷட்தலம்
விருத்தயுக்மகம்
சக்ரம் விராஜதே தத்ர, தப்தகாஞ்சன ஸன்னிபா
ஸந்த்யாருண லஸச்சேலா, ஸர்வாபரண மண்டிதா
சங்கசக்ராபயவரான், ஹலம்சமுசலம் ததா
பாசாஞ்குசௌ தததி சந்த்ரரேகாவதம்ஸினி
வராஹவக்த்ரஸம்யுக்தா, தண்டினி தத்ர வர்த்ததே''

(ஸ்ரீதத்வநிதி சுலோகம் 75)



## 6. தூம்ர வாராஹி

பிரளயத்திற்கும் படைப்பிற்கும் இடையே 'பாழ்' ஆக உள்ள வெற்றிடத்திற்கு உரியவள் தூமவதி. வேகம் இவளுக்குப் பகை. தசமகா வித்யையில் இவளே மூத்தவளும் அமங்கலியுமாவாள். 'சீர் செய்யப்படாத கூந்தலுடன், அழுக்கடைந்த உடைகளும் அணிந்து. கையில் முறமேந்தியவள்; காக்கையின் கொடியுடையாள்; புகை வடிவினள்; விஷ்ணுவின் யோக மாயையே தூமவதி. காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் ஆகிய துர்க்குணங்கள் இவள் உபாசனைக்குப் பகை. பக்தியின் ஆழங்கால் பட்டவர்க்கே உரியது இவள் வழிபாடு!

**''கிளியே! கிளைஞர் மனத்தே கிடந்து கிளர்ந்தொளிரும்**
**ஒளியே! ஒளிரும் ஒளிக்கிடமே! எண்ணில் ஒன்றுமில்லா**
**வெளியே! வெளிமுதற் பூதங்களாகி விரிந்த அம்மே!**
**அளியேன் அறிவளவிற்கு அளவானது அதிசயமே''**

(அபிராமி அந்தாதி)

என்று பட்டர் பரவிடுவார்.

இவளே தூம்ர வாராஹி! கால ரூபிணி, ப்ரளய ரூபிணி, அண்டசராசரங்களும் ப்ரளயத்தினாலழிந்து வெறும் புகையாக விளங்கும்போதும், மீண்டும் புத்துயிர் கொண்டு புதிய பூமி உருவாகும் போதும் நிலைபெற்று இருப்பவள் என்பதால் மூத்தவள் என்கிற 'ஜேஷ்டா' எனும் திருநாமம் தாங்குபவள்!

**''பூத்தவளே புவனம் பதினான்கையும் பூத்தவண்ணம்**
**காத்தவளே! பின்கரந்தவளே! கறைக்கண்டனுக்கு**
**மூத்தவளே! என்றும் மூவா முகுந்தற்கு இளையவளே!**
**மாத்தவளே! உன்னையன்றி மற்றோர் தெய்வம்**
**வந்திப்பதே!''**

என்ற (அபிராமி அந்தாதி) வரிகளும் காண்க.

**இவளுடைய த்யான ஸ்லோகம் :**

**''சந்த்ரார்த்த சூடாம் த்விபுஜாம் புஜாப்யாம்**
**சூலாங்குசௌ ஸ்யாமமுகிம் வஹந்தீம்**

சூரியாக்னி சந்திரீகிருத நேத்ரபத்மாம்
த்யாயே ஹ்ருதப்ஜே விமலாம் வாராஹீம்''

(தேவி ரஹஸ்யம்)

**மூல மந்திரம்**

சந்த்ர வாஹ லீகமோஹார்ண சந்த்ரா மத்யோமிதம் ந்யஸேத்
சந்த்ரோ மடம் பத்மயுக்மம் ஹரம் நீரமயம் மனு:
வாரபா மோஹபீஜேன பூஜ்யேத் பரிவாரகாந்

''ஐம், க்லெளம், லம், ஐம், நமோ பகவதி வார்தாளி வார்தாளி
வாராஹி தேவதே வராஹமுகீ ஐம் க்லெளம் ட: ட: பட் ஸ்வாஹா''



## 7. ப்ருஹத் வாராஹி (வார்தாளி)

சம்ஸ்கிருதத்தில் 'வார்த்த' என்ற சொல்லுக்கு ஆரோக்கியம், நல்வாழ்வு என்றும், 'வார்த்தா' என்ற பதத்திற்குச் 'சொல்', 'செய்தி' 'விவசாயம்' என்ற பொருள்களும் வருகின்றன. மனித இனத்திற்கு ஆரோக்கியமும், நல்வாழ்வும் தருபவளாகவும், பூமியைக் காப்பாற்றி மேலே கொணர்ந்து அதில் பயிர் பச்சைகளை உண்டாக்கி உய்விக்கும் தாயாக இருப்பவளாகவும், வாக்கு தேவியாக சொல்லை அளிப்பவளாகவும், வாக்கு ஸ்தம்பனம் செய்பவளாகவும் திகழும் வாராஹிக்கு 'வார்த்தா' என்ற பெயர் மிகப் பொருத்தம் தானே! இந்த வார்த்தாளியின் பீஜ மந்திரமும், ப்ருஹத் வாராஹியின் பீஜ மந்திரங்களும் ஒன்றாகவே - இருப்பதனால் இரண்டுமே ஒரே வழிபாடுதான் எனக் கொள்ளலாம்! 'பிருஹத் குசாம்பாள்' அன்னையின் ஒரு பெயர். 'ப்ருஹத்' என்ற சொல்லுக்கு - பெரிய, சக்தி வாய்ந்த, உயரிய, முழுமையான, மேதகு, தெய்வீக சக்தி என்றெல்லாம் பொருள் ஆகும். இராஜராஜ

சோழன் மிகப்பெரிய சிவலிங்கம், பெரிய நந்திகேஸ்வரர், மிக உயரிய கம்பீரமான கோபுரம் இவற்றுடன் கட்டிய பிரும்மாண்டமான ஈஸ்வரன் கோயிலுக்கு 'பிருகதீஸ்வரர்' என்பது காரணப் பெயரே! 'தஞ்சை பெரிய கோயில்' என்றே மக்களும் அதை அழைத்தனர்.

அந்த முறையில் பராபட்டாரிகாவின் துணைச் சக்திகளில் மிகவும் வலிமையும் சக்தியும் வாய்ந்த வார்தாளி என்னும் 'ப்ருகத் வாராஹி', ''முக்கண்ணுடையவள், பன்றி முகம் கொண்டவள்; நீலநிற மேனியள்; வனப்பான மார்பகங்கள் உள்ளவள்; செவ்வாடை புனைந்தவளாய், கபால மாலைகள் தரித்தவளாய், உலக்கையும், கலப்பையும், அபய வரத முத்திரையும் தாங்கிய நான்கு கரங்கள் பொருந்தியவளாய், நியமத்துடன் ஜபிப்போர்க்கு 'சத்ரு நாசனம்' செய்ய துணைபோகும் தேவியாகவும் திகழ்கிறாள்'' என்று மந்திர மகோததி கூறுகிறது.

''ரக்தாம் போருஹ கர்ணகோபரிகதே ச்ாவாசனே
ஸம்ஸ்திதாம்
முண்டஸ்ரக்பரிராஜமான ஹ்ருதயாம் -
நீலாஸ்மஸத்ரோசிஷம்
ஹஸ்தாப்ஜைர் முஸலம் ஹலாபயவரான் ஸம்பிப்ரதீம்
ஸத்குசாம்
வார்தாளி மருணாம்பராம் த்ரிநயநாம் வந்தே
வராஹானனாம்''

(மந்த்ரமகோததி)

மேலும் சில்ப சாஸ்திரப்படி வார்தாளி வாராஹிக்கு ஸத்புத்ரஹன சண்டோசண்டன் மடியில் அமர்ந்திருப்பதாகக் கூறப்படுகிறது. இவனுக்கும் சாதகர்கள் முதலில் பூஜை செய்து வழிபட வேண்டும் என்றும் 'மந்திர மகோததி' கூறுகிறது.

**தியான ஸ்லோகம்**

ரக்தாம்புஜே ப்ரேத வராஸனஸ் தாமர் தோருகா மார்படிகா
ஸனஸ்தாம்

தம்ட்ரோல்லஸத் போத்ரி, முகாரவிந்தாம் கோடீர
சஞ்சின்ன ஹிமான் ஸுரேகாம்
ஹலம், கபாலம், தததீம் கராப்யாம் வாமே தராப்யாம்
முஸலேஷ்டதௌச
ரக்தாம்பராம் ரக்தபடோத்தரீயாம் ப்ரவாள கர்ணாபரணாம்
த்ரிநேத்ராம்
ச்யாமாம் ஸமஸ்தாபரணஸ்ர காட்யாம்
வாராஹி ஸஞ்யாம் ப்ரணதோஸ்மிநித்யம்

**மந்த்ரம் :**

"ஐம் க்லௌம் ஐம் ஓம் நமோ பகவதி
வார்த்தாளி வார்த்தாளி வாராஹி
வாராஹி வராஹமுகி, வராஹமுகி ஐம் க்லௌம் ஐம்
அந்தே அந்தினி நம:ருந்தேருந்தினி நம:ஜம்பே ஜம்பினி நம:
மோஹே மோஹினி நம:
ஸ்தம்பே ஸ்தம்பினி நம: ஐம் க்லௌம் ஐம் ஸர்வ துஷ்ட
ப்ரதுஷ்டானாம்
ஸர்வேஷாம் ஸர்வ வாக்சித்த சக்ஷுர்முக கதி ஜிஹ்வா
ஸ்தம்பனம்
குரு குரு, சீக்ரம் வச்யம் புக புக ஐம் க்லௌம் ஐம்
ட்ட: ட்ட: ட்ட: ட்ட: ஹும் பட் ஸ்வாஹா"



## 8. ஸ்வப்ந வாராஹி

தமக்கு மிகவும் பிடித்தமான பலகாரத்தை அது காரமோ, இனிப்போ எதுவாக இருந்தாலும் அதைச் சிறுவர்கள் கடைசியிலே சாப்பிடுவார்கள். அல்லது கையிலே எடுத்துக்கொண்டு சென்று சாவகாசமாக ருசித்து உண்டு மகிழ்வார்கள். அதுபோல, நாம் நமக்கு மிகவும் அனுகூலமான, ப்ரியத்துக்குகந்த 'ஸ்வப்ந' வாராஹியைக் கடைசியாக எடுத்துக் கொண்டுள்ளோம் என்பதே உண்மை. ஆனால் பலனளிப்பதில் இவளே முதன்மை ஸ்தானம் பெறுகிறாள் என்பதையும் உணர வேண்டும்.

சூல்கொண்ட மேகத்தின் நிறம் கொண்டவளாய், மூன்று கண்களும் வராஹ முகமும் விளங்க, சிரசில் சந்திரன் ஒளிர, பல் இடுக்கில் பூமியைத் தாங்குபவளாய், கரங்களில் கத்தி, கேடயம், பாசம், அங்குசம் ஏந்தியவளாய் அழகிய ஆபரணங்கள் மேனியில் ஜ்வலிக்க, புன்னகை பூத்த முகத்தினளாய், மிகச்சிறந்த அழகிய குதிரையில் ஏறி, உலகை உய்விக்க வருபவளாக இவளது தியான ஸ்லோகம் தெரிவிக்கிறது. மிகச்சிறிய வித்தியாசத்துடன் ஒன்றுபோல் தத்வநிதியிலும், மந்திர மகோததியிலும் அவளது மேற்படி வர்ணனை காணப்படுகிறது.

''ஓம்... மேகச்யாமருசிம் மனோஹரகுசாம்
நேத்ரயோத்பாஸிதாம்
கோலாஸ்யாம் சசிசேகரா அசலயா தம்ஷ்ட்ராப்ரபா
சோபிதாம்
பிப்ராணாம் ஸ்வகராம்புஜை ரஸிலதாம்
சர்மாபிபாஸாம் ஸ்ருணிம்
வாராஹி மனு சிந்தயேத்ஹய வராரூடாம்
சுபாலங்க்ருதீம்''

(ஸ்ரீதத்வநிதி)

**மூலமந்திரம் :**

''ஓம் ஹ்ரீம் நமோ வாராஹி கோரே ஸ்வப்னம் ட்ட: ட்ட:
ஸ்வாஹா''

**வேறொரு மந்திரம் :**

''ஓம் ஹ்ரீம் நமோ வாராஹி அகோரே
ஸ்வப்னம் தர்சய ட்ட: ட்ட: ஸ்வாஹா''

''இந்த மந்திரத்தை 11 நாட்கள் 1100 முறை உறங்குவதற்கு முன் ஜபித்தால் 11 நாட்களுள் அன்னை ஸ்வப்னத்தில் எழுந்தருளி நமது விருப்பங்களையோ அல்லது சந்தேகங்களையோ தீர்த்து நலமுறச் செய்வாள்''

பதினாறு நித்யா தேவிகளில் **த்வரிதா:** இதுபோல் பக்தர்களின் கனவில் தோன்றி ஹிதம் செய்பவள்.

**பிரார்த்தனைக்குரிய சுலோகம் :**

**நமஸ்தே ஸ்வப்ன வாராஹி ஸ்வப்னே கதயமே ரிபோ:
மஹாபயம் ச ஜயை பக்தே மயி க்ருபாம் குரு
ப்ரஸஹ்ய பீடயேத் க்ஷிப்ரம் யோ யதா ஸாத்யதே மயா
பாசபத்தம் நுத க்ஷிப்ரம் சித்தமாகர்ஷயாங்குசாத்
துக்கம் வாரய கேடேன மதீய மதி துஸ்தரம்
ச்சிந்தி : ந:கட்கதோ ம்ருத்யும் கதயஸ்வ சுபாசுபம்
ஸ்வயமாகத்ய ந: ஸாத்ய: ப்ரணம் யாக்ஞாம் கரோத்வயம்**

**சில பூஜா விதிகள் :**

பூஜை செய்யும்போது நல்ல எள்ளினாலும், முழுத் தாமரைப் புஷ்பத்தாலும் (இதழ்களை எடுக்காமல்) பயன்படுத்த வேண்டும்.

யந்திர பூஜை செய்யும்போது கீழ்க்காணும் உபாங்க தேவிகளைப் பூஜித்த பிறகே சொப்பன வாராஹியை வழிபட வேண்டுமென்பதும் பூஜா விதி. அவர்கள் 16 பேர் :

1. உச்சாடணி
2. உச்சாடனேஸ்வரி
3. சோஷணி
4. சோஷனேஸ்வரி
5. மாரணி
6. மாரணேஸ்வரி
7. பீஷணி
8. பீஷணேஸ்வரி
9. தாராசினி
10. தாராசனேஸ்வரி
11. காம்பினி
12. காம்பனேஸ்வரி
13. அர்ஜிநாவிவர்த்தினி
14. அர்ஜினா விவர்தனேஸ்வரி
15. வஸ்து ஜடஜேஸ்வரி
16. ஸர்வ ஸம்பத் தனேஸ்வரி

ஸ்வப்ன வாராஹி சித்தியாகச் செய்யும் தர்ப்பணத்தை இளநீரால் செய்ய வேண்டும். தேங்காய்த் தண்ணீர் வேண்டாம். இளநீரை மட்டுமே பயன்படுத்த வேண்டும் என்பது நியதி சுவாசினி பூஜை, வாராஹி ஜெபம் சித்தி பெற அவசியமான ஒன்று.

மாதுளமும், முழு உளுந்து வடை, தேன், இளநீர், சர்க்கரை வள்ளிக் கிழங்கு, ஆள்வள்ளிக் கிழங்கு ஆகியவற்றை நைவேத்தியத்தில் சிறப்புடன் சேர்த்துக்கொள்ள வேண்டும். மேலும் பூஜை முறைகளை அவரவர்களின் ஆசார்யனிடம் (குரு) கேட்டுத் தெளிந்து, அவர்கள் வழிகாட்டுதலுடன் செய்வதுதான் உசிதமானது. தொலைக்காட்சியில் சமையல் செய்வதைப் பார்த்து வீட்டில் சமைத்தால் என்னென்ன விளைவுகள் வருமோ அதனிலும் அதிகமாக, புத்தகங்களைப் படித்து அவற்றின் துணை மட்டும் கொண்டு நாமாகப் பூஜை செய்வது! தக்க குருவிடம் மந்திர உபதேசம் பெற்று பூஜா மந்திரங்கள், மற்றும் வழிபாட்டு முறைகளை குருவிடமே ஐயம் தீரக் கற்று, அவரது அன்பான வழிகாட்டுதலோடு எந்த தெய்வ வழிபாடோ, அதற்குரிய நாள்கள், பொழுது ஆகியவற்றுடன் சொல்லப்பட்டுள்ள பழங்களும், நைவேத்யம் புஷ்பங்கள் யந்திரங்கள் மற்றும் இதர உபசாரப் பொருள்களுடன் தூய்மையுடன் (அகம்+புறம்) பக்தி சிரத்தையுடன் செய்யப்படும் வழிபாடும் பூஜையும் மிகச்சிறந்த பலனைத் தரும். என்னென்ன வகையான வழிபாடுகளுள்ளன? அவற்றிற்கு என்னென்ன யந்திர ரூபங்கள், மந்திரங்கள் உள்ளன? வழிபடும் நியதிகள் மற்றும் வழிபடும் பலன் ஆகியவற்றை அறிந்து நன்கு அவற்றை நடைமுறைப்படுத்தவே தக்க குருவின் துணை மிக அவசியம் என்பதை சாதகன் உணர வேண்டும். இதில் அசிரத்தையாக இருக்கக்கூடாது என்பதற்காகத்தான் இவ்வளவு விரிவாக விளக்கமும் எச்சரிக்கையும் தர வேண்டியிருக்கிறது. அதுவும் வாராஹி போன்ற உக்ரதேவிகளுக்கு பூஜை செய்யும் போது எல்லா விதிகளையும் நன்கு கடைப்பிடிக்காவிட்டால் எதிர் விளைவுகளும் ஏற்படக்கூடும் என்பதால்தான் இந்த முன்னெச் சரிக்கை தர வேண்டியிருக்கிறது. சக்தி வாய்ந்த ஓர் இயந்திரக் கருவியை இயக்குவதற்கு முன் அதைப் பற்றி அனைத்தும் அறிந்து கொள்வது போல்தான் இது. வேறு அச்சம் வேண்டாம்! மெய்யான பக்தர்களுக்கு வாராஹி மிகக் கருணை உள்ளவள்.



# ஆஷாட நவராத்திரியும் வாராஹி வழிபாடும்

### ஆடி மாதச் சிறப்பு

ஆடிமாதமே ஆஷாட மாதமாகும். கோடை காலத்திற்கும் மாரிக் காலத்திற்கும் இடைப்பட்டு வரும் ஆடிமாதம், கிராமத்து காவல் தெய்வங்களான துர்கா, பிடாரி, வாராஹி, மாரியம்மன் போன்ற தேவதா ஸ்வரூபங்களுக்கு மிகவும் உகந்த மாதம். நல்ல விளைச்சல் கிடைக்க வேண்டியும், பருவமழை பெய்ய வேண்டியும், மக்கள்-நோய் நொடியின் பாதிப்படையாமல் இருக்கவும் குறிப்பாக, குழந்தைகள் வியாதிப் பாதிப்பும் காற்று கருப்பு சேஷ்டைகள் இல்லாமல் நலமாக வாழவும் ஆடி மாதங்களில் இந்தத் தெய்வங்களுக்குப் பூஜை செய்வது, நமது நாட்டில் தொன்றுதொட்டு இருந்துவரும் பழக்கம். கூர்ந்து பார்த்தால் ஆடி மாதத்தில் நோய் மற்றும் அதனால் வரும் நலிவுகள் மிக அதிகம். லௌகீக வாழ்க்கையில் சோதனைகள் மிகுந்த மாதம். நோயைப் பரப்பும் ஈக்கள் இனவிருத்தி செய்து பெருகிடும் தொல்லைக் காலம். பெருங்காற்று வீசி மனைகளும், தண்ணீர் நிலைகளும் மாசு படிந்து, வாந்தி பேதி, உஷ்ணாதிக்கமான அம்மை போன்ற நோய்கள் தலையெடுத்து ஜனங்களைப் பீடிக்கும் காலம். ஆகவே இவற்றைச் சமாளித்து - வெற்றி கொள்ள தெய்வத்தின் துணை தேவை என்பதோடு, மேற்படி குறிப்பிட்ட கிராம தேவதைகளுக்கும் பூஜையிட்டு அவற்றின் சினத்தைத் தடுத்து நன்மையடைய வேண்டும் என்கிற ஒரே காரணத்தால், ஆடி மாதத்தை சொந்தக் காரியங்களைச் செய்வதிலிருந்து விலக்கி தெய்வ காரியங்களுக்காக மக்களால் ஒதுக்கி வைக்கப்பட்டது என்றறியலாம். **மாரியம்மனுக்கு** ஆடி ஞாயிறும், **பிடாரி, துர்க்கை** ஆகிய தெய்வங்களுக்கு ஆடிச் செவ்வாயும், முருகனுக்கு ஆடிக்

கிருத்திகையும், அம்பாளுக்கு ஆடி வெள்ளியும், **அஸ்வாருடாவுக்கு** சுக்ல அஷ்டமியும், பஞ்சமியும், **வாராஹிக்கு** ஆஷாட சுக்ல பஞ்சமியும் ஏற்றம் மிகுந்த வழிபடு நாள்கள். ஆடிப்பூரம் மகாலட்சுமி அம்சமான **ஆண்டாளின்** அவதார தினம். இப்படி ஆடிமாதம் பலவித தெய்விக வழிபாட்டுச் சிறப்பிற்குரிய சிறந்த மாதம். திருமணம் ஆகாத பெண்கள் ஆடிச் செவ்வாயில் விரதமிருந்து எண்ணெய் தேய்த்து மங்கள ஸ்நானம் செய்வர். ஈரத்துணியுடன் கன்னியம்மன் கோயில்களில் மஞ்சள் பொங்கல் செய்து அன்னைக்கு நைவேத்யம் செய்து உண்டு 'ஒருபோது' விரதம் இருப்பர். இதற்கு **மங்கள சண்டிகை** வழிபாடு என்று பெயர். இந்த மங்கள வார வழிபாடு திருமணமாகாத பெண்களுக்கு நல்ல கணவன்மார்களைப் பெற்றுத் தருவதோடு, குடும்பத்தில் நீண்ட காலமாக உள்ள கடன்களையும் தீர்த்து வைக்கும் என்பர். துர்கா தேவியின் அருளால் அனைவரும் நலம் பெறுவர்.ஸ்ரீ கிருஷ்ண பகவானை வரித்த ருக்மிணியும் இந்த துர்கா விரதமிருந்து அன்னையை வழிபட்டு தன் மனம் போல மாங்கல்யம் அடைந்தாள் என்பதைப் புராணங்கள் மூலம் அறியலாம்.

**மாரியம்மன் பண்டிகை**

வெப்பு நோய்களுக்கு மருந்தாகவும், கொடிய விஷ நோய்களைப் போக்குபவளாகவும் சிவப்பு சேலை கட்டி சூலத்தைக் கையிலேந்தி வேப்பிலையாலும் திருநீறாலும் மக்களின் பிணியைத் தீர்க்கிறாள் மகமாயி! அவள் கருணையால் மழை பொழிகிறது. வெம்மை குறைகிறது. பிணி அகலுகிறது. ஏழை மக்கள் படைக்கும் எளிய கூழிலே அன்னை மகிழ்ந்து அவர் துயரமெல்லாம் களைகிறாள். அவள் திருச்சந்நிதி முன் பெண்கள் எல்லாம் கூடி கூழிட்டுப் படைத்து அவளைப் பாடிப் பரவுகிறார்கள்.

**மாரியாத்தா வழிபாடு :**

''செக்கச் சிவந்த சேலையுடுத்தி
மிக்க மணக்கும் மாலை தரித்தே

திக்கெட்டும் சுழலும் விழிகளை யிட்டே
மக்களைக் காத்திடும் மாரியே! கொட்டு''

''கொட்டிடும் மேளங்கள் தாளங்களோட
விட்டிடும் பாவங்கள் வினைகளும் ஓட
இட்டிடும் அன்னங்கள் பொங்கி வழிந்திட
முட்டிடும் தீமைகள் மூலை முடங்கிட''

''துலங்கிடும் மேனியில் மஞ்சள் மணக்க
இலங்கிடும் கைதனில் சூலமே மின்ன
கலங்கிடும் உள்ளமுன் கருணையில் மலர
நலங்கிடும் சரணங்கள் நற்பதம் தந்திட'' (செக்)

## ஆடிப்பெருக்கு :

ஆடி மாதம் ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து வரத் தொடங்குகிறது. ஆடிப் பதினெட்டை மக்கள் எல்லாரும் ஆற்றங் கரையில் கூடிக் கொண்டாடுவர். அருகிலிருக்கும் கோயில்களி லிருந்து தெய்வச் சிலைகள் ஆற்றங்கரைக்கு வந்து வழிபாடு செய்து திரும்புவதும் ஒரு சம்பிரதாயம். ''ஆடிச் செவ்வாய் தேடிக் குளி'', ''ஆடிப்பட்டம் தேடி விதை'' போன்ற பழமொழிகள் இந்தத் தண்ணீர் வரவையும், மங்கல நீராடலையும், விதை விதைப்பு நிகழ்ச்சியையும் நமது கண்முன்னே நிறுத்தும். இத்தகைய மேன்மை மிகுந்த ஆடிமாதம், ஆற்றலும் வீரமும் செறிந்த பெண் தெய்வங்களின் அருளைப் பெறுவதற்கேற்ற மாதமாகும்.

## ஆஷாட நவராத்திரி காலம் :

இந்த மாதத்தில் சுக்லபக்ஷ ப்ரதமையிலிருந்து தசமி வரை 'ஆஷாட நவராத்திரி' கொண்டாடப்படுகிறது. ஆனி மாதம் பௌர்ணமி முதல் ஆடி மாதம் பௌர்ணமி வரையிலும், அதேபோல் ஆனி பௌர்ணமியிலிருந்து ஆடி மாதம் தசமியுடன் பூஜை செய்யும் பழக்கங்களும் உள்ளன. ஆடி மாதத்து பிரதமை முதல் தசமி வரை உள்ள நாள்களே மிக விசேஷமானதாகக் கருதப்பட்டு அனைவராலும் பூஜிக்கப்படுகிறது.

### பஞ்சபூத நவராத்திரிகள் :

பஞ்ச பூதங்களாகிய பிருத்வி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் ஆகியவற்றின் அடிப்படையில் சாரதா நவராத்திரி, வசந்த நவராத்திரி, ஆஷாட நவராத்திரி, மாக நவராத்திரி மற்றும் வன்னி நவராத்திரி என்பதாக ஐந்துவிதமான நவராத்திரிகள் கொண்டாடப்படுவது வழக்கம். சாரதா நவராத்திரியாக மகா நவராத்திரியை - ஆலமரத்தடியிலும், வஸந்த நவராத்திரியை - புன்னை மரத்தடியிலும், ஆஷாட நவராத்திரியை - வில்வ மரத்தடியிலும், மாக நவராத்திரியை - நெல்லி மரத்தடியிலும், வன்னி நவராத்திரியை - வன்னி மரத்தடியிலும் கொண்டாட வேண்டும் என்றும் தந்த்ர சாஸ்திரங்கள் வரையறை செய்துள்ளன.

### ஆஷாட நவராத்திரி :

இவ்வளவு சிறப்புகள் பொருந்திய பஞ்சபூத நவராத்திரிகளுள் ஆஷாட நவராத்திரிக்கு உரிய தெய்வமே, சர்வ வல்லமை பொருந்திய ஸ்ரீ வாராஹி தேவி! பன்றியின் தலையும், பெண்ணின் உடலும் கொண்டு ஒளி வீசித் திகழும் தேவியிவள். எட்டு கரங்களில் கலப்பையும், உலக்கையும், சங்கமும், சக்கரமும், கத்தியும், கேடயமும், அபய வரத முத்திரைகளும் தாங்கியவளாய், அடியவர்களின் தாபத்தைத் தீர்க்கும் ரட்சகியாய், கொடியவர் களின் உயிரைப் போக்கும் தூமவதியாய் சேவை சாதிப்பவள். இவள் சிம்மத்தில் வரும்போது வாராஹி; அஸ்வத்தில் வரும்போது அஸ்வாரூடா.

### ராத்ரி பூஜை :

நமது பாபங்களைப் போக்கி மீண்டும் பிறவா நிலைக்கு உயர்த்த வல்லது ராத்ரி பூஜையே; அதற்குரிய நாயகி - ஸ்ரீ வாராஹியே! ஏற்கெனவே கூறியபடி நோயும் நலிவும், வியாதியும், வெக்கையும் இணைந்து கூட்டணியாக நம்மைத் தாக்க வரும் கொடிய மாதம் ஆடி. யமனுக்கு விருந்து கிடைக்கும் ஏற்றம்மிகு 'ஆஷாடம்'. முள்ளை முள்ளால் எடுப்பதுபோல் இந்த மாதத்தின் கொடிய

கடுமையான தாக்குதலிலிருந்து விடுபட, விடுதலை பெற நமக்கு யாரிருக்கிறார்கள், மகா வல்லமை பொருந்திய - வாராஹி தேவி துணையைத் தவிர?

## வாராஹி தோத்திரங்கள் :

வாராஹியை வழிபட பல தோத்திரங்கள், பாடல்கள் உள்ளன. வாராஹி கவசம், வாராஹி அனுக்கிரக, நிக்ரகாஷ்டகங்கள், வாராஹி மாலை, வாராஹி மாலா மந்திரங்கள், பூஜை செய்வதற்குரிய யந்திரங்கள், அதன் உச்சாடன மந்திரங்கள், அஷ்டோத்திரம் மற்றும் ஸஹஸ்ரநாமம் போன்றவை நமக்குதவும்.

## பூஜை நேரம் :

வாராஹி பூஜையில் கால நேரங்கள் கண்டிப்பாக அனுஷ்டிக்கப் படவேண்டும். நவராத்திரி காலங்களில் காலை மாலை இரண்டு வேளையும் பூஜிக்கலாம். காலை பூஜையை விட, இரவு பூஜைக்கு நூறு பங்கு பலன் அதிகம் என பெரியவர்கள் கூறுவர். காலையில் 6 மணி முதல் 9 மணி வரை ஹோமம் செய்யலாம். அதேபோல மாலை 6 மணிக்கு சந்த்யா காலத்தில் தொடங்கி சொப்பன வாராகியை இரவு, உச்சி (நிசி) வரை பூஜிக்க வேண்டும். பஞ்சமியை இரவு 11 மணி வரையிலும், வாராஹியை 9 மணி வரையிலும் பூஜித்தல் முறையாகும். பூஜை செய்யும் இடத்தை மாற்றக்கூடாது. நேரத்திலும் அப்படியே. இரவில் எப்போது தொடங்கி எந்த நேரத்தில் முடித்தீர்களோ, அதே போல் காலையிலும் நேரம் எடுத்துக்கொள்ள வேண்டும். ஆத்மார்த்த பூஜையாக சித்திகள் பெறச் செய்யும் பூஜைகளை ஏகாந்தமானதாகவும் பொதுவான வழிபாட்டை அனைவரும் காண வெளிப்படையாகவும் செய்தல் வேண்டும்.

## பூஜா தினங்கள் :

சதுர்த்தி, சஷ்டி, அஷ்டமி, தசமி, துவாதசி, அமாவாசை ஆகியன சிறப்பான நாள்கள். நவராத்திரியில் பஞ்சமி, அஷ்டமி, நவமி சிறப்பானவை. ஒற்றைப் படையில் தொடங்கி நடுவில்

இரட்டைப் படை வர முடிவில் ஒற்றைப் படை நாளில் நவராத்திரி பூஜையை தொடங்கி முடிக்க வேண்டும் என்பது விசேஷமாகக் கவனிக்க வேண்டிய விஷயமாகும்.

### ஆசனங்கள் :

ரத்ன கம்பளம், கம்பளி ஆசனம், அத்திப் பலகை (மான்தோல் கூடாது) புலித்தோல், சிம்மத்தோல், தர்ப்பாசனம்.

### அணிய வேண்டிய மாலைகள் :

ருத்ராக்ஷம், நவகண்டி, பவளம், மாணிக்கம், முத்து மாலைகள் ஏற்புடையன.

### நைவேத்தியம் :

சர்க்கரை வள்ளிக்கிழங்கு, உளுந்து சாதம் (மாஷான்னம்), எள்ளு பாயசம், எள்ளு சாதம், எருமைப்பால், தயிர், மொச்சைச் சுண்டல், ஆமை வடை, மிளகு சீரக தோசை, சர்க்கரைப் பொங்கல், வடை, சாக மூலங்களில் - வேக வைக்காமல் சாப்பிடக்கூடியதை அப்படியே நிவேதனம் செய்யலாம்.

### தீபம் 2 - (தீபம் + ப்ரதீபம்)

ஒருமுகம் அல்லது பஞ்ச முகம்

### தீபம் எண்ணெய் :

எள் எண்ணெய், பசு நெய். நிம்ப நெய்யும் (வேப்பெண்ணெய்) மகிழ நெய்யும், (எருமை நெய்) சாதாரண பூஜைக்குரியவை அல்ல (பிரயோகங்களுக்கே உரியவை)

### திரி வகை :

தாமரை, வாழைத்தண்டு, பஞ்சுத்திரிகள் - சிறப்பானவை. (சொல்லிய வரிசைப்படி) தீபத்தின் ஐந்து முகங்களிலும் அவ்வாறே ப்ரதீபத்திலும் ஒரேவிதமான திரியையே பயன்படுத்த வேண்டும்.

**சிறப்பு நைவேத்யம் : (பஞ்சமஹா நைவேத்யம்)**

தேன், உளுந்துவடை, அப்பம், செவ்வாழை, இனிய பதப்படுத்திய பானம் (பானகம்)

**பூஜை செய்வது (வடிவம்) :**

சித்திரம், யந்திரம், கடம் அல்லது தீபம்

**பூஜா தெய்வம் :**

வாராஹி அல்லது அஸ்வாரூடா. உபாசனையாளர்கள் தம் உபாசனா தெய்வத்தை முதலில் வழிபட்டு பிறகு வாராஹி பூஜை செய்ய வேண்டும்.

**தசமகா தூபங்கள் :**

குங்கிலியம், சாம்பிராணி, வெட்டிவேர், குறுவேர், கஸ்தூரி மஞ்சள், மட்டிப்பால், செங்காலி, கருங்காலி, வசம்பு, தேவதாரு ஆகிய தசமகா தூபங்கள்.

**பஞ்ச கந்த மூலங்கள் :**

தாமரைக் கிழங்கு, அல்லிக் கிழங்கு, தண்ணீர் விட்டான் கிழங்கு, மாகாளிக் கிழங்கு, பனங்கிழங்கு (பஞ்ச கந்த மூலங்கள்)

**ஏற்ற வேர்கள் :**

வெட்டி வேர், விளாமிச்சை, குரு, அச்வகந்தி, அல்லி, மல்லி, முசுகுந்தம், சிறு நன்னாரி, பெரு நன்னாரி, அமிர்த வல்லி வேர் ஆகியவை உகந்தவை.

**ஏற்ற புஷ்ப மாலை :**

செவ்வரளி சிறப்புடையது. மல்லிகை, முல்லை, இருவாட்சி, நீலசங்கு புஷ்பம், கருந்துளசி, வில்வம் ஆகியவையும் அணிவிக்க ஏற்றவையே.

**மலரிட்டு வழிபட ஏற்ற பூக்கள் :**

செந்தாமரையும் வெண்டாமரையும், அன்றலர்ந்த மாதுளம் பூ, நீல அல்லி, செம்பருத்தி, நீலசங்கு புஷ்பம் மற்றும் அரளி, தெத்திப்பூ, செம்பருத்தி, செவ்வரளி, மல்லி, பிச்சி, காட்டு மல்லிகை, நீல, வெள்ளை ஊமத்தை மலர்கள்.

**ஹோம பட்சணங்கள் :**

உன்னியப்பம், சன்னம், மண்டையப்பம், கறுப்பு உளுந்து வடை, லாஜ உருண்டை, முந்திரி உருண்டை, சந்திர கண்டம், தான்ய மிச்ரபூபம், பாதாம் கேசரி, ரஸகண்டம் ஆகியவை.

**ஹோம திரவியங்கள் :**

நைவேத்தியத்திற்குப் பயன்படும் அனைத்துமே ஹோமத்திற்கும் ஆகுதியாக்கலாம். ஹோமத்தில் கிழங்குகளை நெய்யிலோ அல்லது தேனிலோ தோய்த்து ஆகுதி செய்ய வேண்டும். அரசு, ஆல் இரண்டின் சமித்துகளும் சிறப்பானவை. ஊமத்தைப் பூவையும் சில காரியங்களுக்காக ஹோமத்தில் சேர்ப்பார்கள். தச ஹோமப் பொருள்களை கீழே தருகிறோம்.

**தச ஹோம திரவியங்கள் :**

கருங்காலி, அரசு, ஆல், ஊமத்தை, எருக்கு, தேவதாரு, சந்தனம், குங்கிலியம், பால் சாம்பிராணி, அமிர்த வேர் ஆகிய பத்து.

**ஹோம் திரவியங்களும் அதற்கேற்ற பலன்களும் :**

கருப்பு மொச்சை சுண்டலை ஹோமத்தில் பயன்படுத்தினால் எதிரிகளின் தொல்லை குறையும்.

வெள்ளை மொச்சை ஹோமத்தில் பயன்படுத்தினால் தனலாபம் தரும்.

சர்க்கரைப் பொங்கல் ஹோமத்தில் பயன்படுத்தினால் காரியத்தடை நீங்கும், தனம் சேரும்.

முழு உளுந்து வடை ஹோமத்தில் பயன்படுத்தினால் வாராஹி அருள் பெருகும். மந்திர சித்தி ஏற்படும்.

வெல்லப் பாயசம், கறுப்பு எள், நெய் ஹோமத்தில் பயன்படுத்தினால் பித்ருக்களுக்கு நன்மை ஏற்படும், தடங்கல்களை முறியடித்து காரிய சித்தியைத் தரும்.

எல்லாப் பருப்பும் கலந்த ஆமைவடை (நெய்யில் கலந்தது) ஹோமத்தில் பயன்படுத்தினால் சத்துருவை விரட்டும்.

தாமரைப் பூ, எள்ளு ஹோமத்தில் பயன்படுத்தினால் நிறைந்த செல்வம் பெறலாம்.

சந்தனத்தால் ஹோமம் செய்தால் வாக்கு வன்மை பெருகும்.

உருண்டை மஞ்சள் ஹோமத்திற்கு பயன்படுத்தினால் எதிரியின் ஏச்சு மறையும்.

மாதுளம் பூ, எள், தேன் ஹோமத்தில் பயன்படுத்தினால் அன்பை வளர்க்கும்.



# வாராஹி மாலை

ஸ்ரீ லலிதா திரிபுரசுந்தரி அன்னையை, துணையும், தொழும் தெய்வமும், பெற்ற தாயுமாகக் கொண்டு உபாசித்துப் பரவிய அருட்சித்தர் அபிராமி பட்டரின் 'அபிராமி அந்தாதி', 'திராவிட சாக்தவேத தந்திரமாக' விளங்கி ஸ்ரீ லலிதா தேவியின் பிரும்ம ஸ்வரூபத்தையும், லீலா விபூதிகளையும் பாமரரும் அறியக் காட்டும் ஒப்பற்ற கிரந்தம். அதேபோல ஸ்ரீ லலிதாவின் தண்டநாதையாக விளங்கும் ஸ்ரீ வாராஹிக்குச் சூட்டப்பட்ட பாமாலை ஸ்ரீ வாராஹி மாலையாகும். பட்டர் தம் அந்தாதியில் கூறியபடி இந்த வாராகி மாலையைப் பக்தியுடன் பாராயணம் செய்வோர்க்கு ''தனம் தரும் கல்வி தரும்; ஒருநாளும் தளர்வறியா மனம் தரும்; தெய்வ வடிவும் தரும்; நெஞ்சில் வஞ்சமிலா இனம் தரும்; நல்லன எல்லாம் தரும் - அன்பரென்பவர்க்கே'' என்பது - முற்றிலும் அனுபவித்து உணர்ந்து கொள்ளக்கூடிய உண்மையாகும்.

பேராற்றலும், திட சித்தமும் கொண்ட படைத்தலைவியான பஞ்சமிக்கு, அதேபோலப் பேராற்றலும் திடசித்தமும் பக்தியும் கொண்ட சோழர் படைத்தளபதியான சுந்தரேசர் என்பவர் மன நெகிழ்ச்சியும் வீர உணர்ச்சியும் விரவி வரும் ஸ்ரீ வாராஹி மாலையைத் தான் வழிபடும் அந்த மாதாவிற்குச் சமர்ப்பித்தார். அறியாமையிருளைப் போக்க வரும் ஒளி ஞாயிறாக இந்தப் பனுவல் திகழ்கிறது. முதலாம் குலோத்துங்க சோழனுக்கும், சாளுக்கிய மன்னன் ஆறாவது விக்கிரமாதித்யனுக்கும் கர்நாடக தேசத்தில் நடந்த போரில் பல வீர சாகசங்கள் புரிந்து சாளுக்கியரின் கொடியைக் கைப்பற்றி வெற்றி வாகை சூடியதாகவும், அதற்குப் பரிசாக பாண்டிய நாட்டில் ஒரு நிலப்பரப்பை தானமாக சோழ மன்னன் அருட்கவி சுந்தரேசருக்கு அளித்ததாகவும் கூறப்படுகிறது. 'வீர சோழன்' என்ற அந்த கிராமத்தில் தங்கி ஸ்ரீ வாராஹி

மாலையையும் இயற்றி, தெய்வீக நிலையில் ஒரு மகானாக வாழந்து மறைந்த இந்த வாராஹி பக்தரின் புகழுடல் இன்றும் நின்று நிலவுகிறது. இவர் சோழர் சேனைப்படையில் குதிரைப் படையில் இருந்த காரணத்தால், இயல்பாக இவருக்கு வாராஹியின் முக்கிய ஸ்வரூபமான - அஸ்வாரூடாவின் மீது தணியாத பக்திப் பரவசம் ஏற்பட்டது என்பதையும் நாம் மகிழ்ச்சியுடன் கருதலாம். இனி மாலையை உள் நுழைந்து பார்ப்போம்.

1. ''இரு குழை கோமளம் தாள் புஷ்பராகம்
இரண்டுகண்ணும்
குருமணி நீலம் கை கோமேதகம் நகம் கூர்வயிரம்
திருநகை முத்துக் கனிவாய் பவளம் சிறந்த வல்லி
மரகத நாமம் திருமேனியும் பச்சை மாணிக்கமே!''

ஸ்ரீ வாராஹி தேவியின் ரூபத்தை நெஞ்சில் கொணர்ந்து தியானிக்கிறார் நூலாசிரியர்.

''கோமளமாய் ஆடுகின்ற இரு குழைகளும், நீலம் போல் பளிச்சிடும் இரு விழிகளும், கோமேதகம் நிகர்த்த இரண்டு கரங்களும், முத்துப்பல் வரிசையும், பவள வாயும், வயிரம் போல் உறுதியான விரல் நகங்களும், மரகதமாய் ஒளி சிதறும் இடையும், புஷ்ப ராகங்களாய் இணையடிகள் திகழும் ''பச்சை மாணிக்க மேனியள்'' என மனத்தில் தியானிக்கிறார். ''மணியே! மணியின் ஒளியே! ஒளிரும் மணி புனைந்த அணியே! அணுகாதவர்க்குப் பிணியே! பிணிக்கு மருந்தே! அமரர் தம் பெருவிருந்தே!'' என்று பட்டர் அனுபவித்தது போல இங்கே சுந்தரர் வார்த்தாளியின் ஸ்வரூபத்தை நவரத்தினங்களில் அலங்கரித்து மகிழ்கிறார். நீல விழிகளுடன் அன்னை எப்படியிருப்பாள் என்று நேரில் பார்க்க மயிலை கோல விழியம்மன் கோயிலுக்குச் செல்லுங்கள். கோல விழி அவள் நீலவிழி! அவள் கோயிலிலே சரணாகதி'' என ஒரு கவிஞர் இவளைப் பாடியதும் நினைவுக்கு வரும். இப்படி ஒவ்வொரு ரத்தினத்தின் அமைப்பு, நிறம், உறுதிப்பாடு ஆகிய தன்மைக்கேற்ப அவற்றை அன்னை அணிவித்திருக்கும் அழகே

அழகு! பல்வரிசை முத்துகள் பவளம் - அதரம். உறுதிக்குப் பேர் போன வயிரங்களால் ஆன நகங்கள் (சத்ருக்களை குத்திக் கிழிக்க வேண்டுமல்லவா) கண்ணுக்கு குளிர்ச்சி தரும் பச்சை மாணிக்க நிறம் திகழும் மேனி. 'எழுதரிய சாமள மேனி' என்பது இதுதானே! இப்படித் தண்டநாதையை தியானிப்பவர்க்கு அவள் தண்ணளி தாராதிருப்பாளா?

2. ''தோராத வட்டம் முக்கோணம் ஷட்கோணம் துலங்கு வட்டத்து

ஈராறிதழ் இட்டு, ரீங்காரம் உள்ளிட்டது நடுவே
ஆராதனை செய்து அருச்சித்துப் பூஜித்தடி பணிந்தால்
வாராதிராள் அல்ல வோலை ஞான வாராஹியுமே''

''ஒளி நின்ற கோணங்கள் ஒன்பதும் மேவி உறைபவளே!'' என்று தேவியைப் பரவுவார் பட்டர். கோடுகள் மொழிகளுக்கு அப்பாற்பட்ட 'தெய்வீக' மொழி. அவற்றைக் குறிப்பிட்ட எழுத்தாக வளைக்கும் போது மொழியாகிறது. இங்கே, வாராஹி அன்னை அறுகோணமும் அதைச் சுற்றியிருக்கும் வட்டமும், அதனைச் சுற்றி எட்டு இதழ் கொண்ட தாமரையும் உள்ள யந்திரத்தின் மையத்தில் ஈ என்ற ரீங்கார ஒலி சூழ அமர்ந்திருக்கிறாள். இது ஆக்ஞா சக்கரம் என்ற புருவ மத்தியாகும். மனஸ்தத்துவமாக விளங்கும் இந்தப் பஞ்சமி தேவியை மனோ, வாக்கு, காய, ஒருமைப்பாட்டுடன், ஆராதனை செய்து, அர்ச்சனை செய்து பூஜித்து அடி பணிந்தால், பக்தருக்கருள ஞானேஸ்வரியான அன்னை வாராதிருப்பாளா? அதுவும் எப்படி வருவாள்? சர்வ சித்திகளும் தரும் 'வாலையாக' அல்லவோ வருவாள்?

### துஷ்டநிக்கிரகம்

3. ''மெய்சிறத்தாற் பணியார் மனம் காயம் மிக வெகுண்டு

கைச் சிரத்தேந்திப் புலால் நிணம் நாறக் கடித்துதறி
வச்சிரத் தந்த முகப்பணியாற் குத்தி வாய் கடித்துப்
பச்சிரத்தம் குடிப்பாளே வாராகி பகைஞரையே!

துஷ்ட நிக்கிரகம் செய்தால் தானே, சிஷ்டர்களுக்கு அது அனுக்கிரகமாக ஆகும்! களையெடுத்தால் தானே பயிர் தழைக்கும்? குற்றங்களைக் கடுகளவும் பொறுத்துக்கொள்ளாத பண்புடையவள் வார்த்தாளி. மெய்யான அன்புடன் தன்னைப் பணியாது தவறான வழிகளிற் செல்லுவோரை சினத்துடன் தமது வைர நகமுடைய கரங்களால் கிழித்து அவர்களது தேகத்தின் சதையை முகத்திலுள்ள கூர் கொம்புகளால் பிளந்து அவர்கள் குருதியையும் குடிப்பாள் என்று கூறுவார் நூலாசிரியர். ஞானேஸ்வரியாக இருந்து சகல சித்திகளையும் அருளும் அன்னை சினந்தால் என்ன ஆகும் என இங்கே கூறுவது, தீயோருக்கு ஓர் எச்சரிக்கையாக! அபிராமி பட்டரும் அன்னையை வழிபட்டு வணங்காதவர் தெருவில் பிச்சையெடுத்துத் திரிவார்' என்று கூறியதை இங்கே ஓர்க!*

4. ''படிக்கும் பெரும்புகழ்ப் பஞ்சமி அன்பர் பகைஞர்தமை
அடிக்கும் இரும்புத் தடிகொண்டு, பேய்கள் அவர் குருதி
குடிக்கும், குடர் கொண்டு தோள்மாலையிட்டுக் குலாவிமன்றில்
நடிக்கும், வாராஹி பதினாலுலகம் நடுங்கிடவே!''

சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் ஆகிய பஞ்சகிருத்தியங்களை விளையாட்டாக, தான் அதில் எவ்விதமும் சம்பந்தப்படாமல் விருப்பு வெறுப்பற்ற முறையில் செயல்படுவது அன்னையின் சுபாவம் என்பதால் 'குலாவி மன்றில் நடிக்கும்'. வாராஹி தன்னை மெய்யன்போடு பக்தி செய்யும் அடியார்களைத் துன்புறுத்தும் பகைவர்களை, தண்டத்தால் ஒறுத்து அவரை சம்ஹாரம் செய்து,

* (தோத்திரம் செய்து தொழுது, மின்போலும் நின்தோற்றம் ஒரு மாத்திரைப் போதும் மனத்தில் வையாதவர் வண்மை, குலம், கோத்திரம், கல்வி, குணம் குன்றி நாளும் குடில்கள் தொறும் பாத்திரம் கொண்டு பலிக்குழலா நிற்பர் பாரெங்குமே!)

மகிழ்ச்சியுடன் பதினாலு உலகங்களும் நடுங்கிடவே தனது கிரி சக்கரத்தில் உலவுவாள்' என்கிறார்.

5. ''நடுங்கா வகை அன்பர் நெஞ்சினிற் புக்கவர் நண்ணலரைக்
கொடும்காளி உண்ணக் கொடுக்கும், குருதிகள் கொப்பளித்
திடும் பாரக் கொங்கையின் மீதே இரத்தத் திலகமிடும்
தொடும்கார் மனோன்மணி, வாராஹி நீலி-தொழிலிதுவே!''

'வருந்தா வகை என் மனத்தாமரை வந்து புகுந்து இருந்தாள்' என்பார் அபிராமி பட்டர். அப்படி 'ஸமய ஸங்கேதாவான' அன்னை அன்பர் தம் நெஞ்சில் புகுந்து அவர் தம் அச்சத்தைப் போக்கித் தனது துணைச் சக்திகளான காளி, மனோன்மணி மூலம் அந்தப் பக்தர்களின் பகைவர்களை அழித்து இரத்தத் திலகம் இடும்படி செய்துவிடுவாள்! தேவியின் தாந்திரிக பஞ்சாயதன பூஜையில் இடம் பெறும் தேவியர் காளியும், மனோன்மணியும் என்பதும், அஞ்சாமல் பகை முடிப்பவள் (அந்தரி, நீலி, அழியாத கன்னிகை') நீலி என்பதும் நினைவிற் கொள்க.

6. ''வேய்க்குலம் அன்ன திண்தோளாள் வாராஹிதன் மெய்யன்பரை
நோய்க்குலம் என்ன இடும்பு செய்வார்தலை நொய்தழித்துப்
பேய்க்குலம் உண்ணப் பலிகொண்டு போட்டுப் பிணக்குடரை
நாய்க்குலம் கௌவக் கொடுப்பாள் வாராஹி என் நாரணியே!

மூங்கிலைப் போல் உறுதியான அழகு பொருந்திய தோள்களை உடைய அன்னை வாராஹி, தன் மெய்யன்பர்களுக்குத் தலைவலியாக இருக்கும் கொடியவர் சிரங்களை (செடியை ஒடிப்பது போல்) சிரமம் இன்றிக் கொய்து, பசியுடன் காத்துக்

கொண்டிருக்கும் பேய்க் கணங்களுக்கு விருந்தாக அளிப்பதோடு, மிகுதியான எலும்பு போன்ற பகுதிகளை அருகிலிருக்கும் நாய்களும் கௌவிடக் கொடுத்திடுவாள். நொய்து அழித்து - சிரமமின்றிக் கொய்து (நொய்தின் நொய்ய சொல் நூற்கலுற்றேன்' - கம்பன்) அரங்கனின் அடியாரல்லாத ''மிண்டர் பாய்ந்து உண்ணும் சோற்றை விலக்கி நாய்க்கிடுமின்'' என்றார் தொண்டரடிப்பொடி. அதுபோல் தீயவர்களின் உடலைப் பேயுணக் கொடுத்து எலும்புகளையும் நாய்கள் கடித்திடக் கொடுப்பாள் வராஹமுகி என்கிறார்.

7. ''நாசப்படுவர், நடுங்கப்படுவர், நமன் கயிற்றால்
வீசப்படுவர், வினையும் படுவர் இம் மேதினியோர்
ஏசப்படுவர், இழுக்கும் படுவர் என் ஏழைநெஞ்சே
வாசப் புதுமலர்த் தேனாள் வாராஹியை
வாழ்த்திலரே!''

மணம் பொருந்திய புத்தம் புது மலரின் தேனைப் போல் இனிமையான போத்ரிணியை உளம் நிறுத்தி தியானித்து வாழ்த்தி வணங்காமல், உலகில் சிலர் தாமே நாசத்தைத் தேடிக் கொள்கின்றனர். அனாவசியமாக அச்சத்திற்கு ஆட்படுகின்றனர்; காலனின் கொடிய பாசக்கயிற்றால் கவரப்படுகின்றனர்; சொல்ல முடியாத துன்பங்களை அனுபவிக்கின்றனர்; அது மட்டுமன்றி இப்படியும் ஒரு மனிதன் வாழ்கிறானே என்று மக்களால் ஏசிப் பரிகாசம் செய்தற்குரியவராகவும் கெட்ட பெயர் எடுக்கும்படியாக வாழ்கின்றாரே! இதற்கெல்லாம் அவர்களது மூடத்தனம் நிறைந்திருக்கும் மனதுதானே காரணம், பாவம்! என்று நூலாசிரியர் அவர்களுக்காகப் பச்சாதாபத்துடன் இரக்கப்படுகிறார். ''எத்தினால் இடர்க்கடல் உகுத்தி ஏழை நெஞ்சமே!'' என்று கேட்கும் சிவ வாக்கியர் பாடல் வரிகள் இங்கே நினைவுக்கு வரும்!

8. ''வாலை புவனை திரிபுரை மூன்றும் இவ்வையகத்தில்
காலையும் மாலையும் உச்சியும் ஆக எக்காலத்துமே
ஆலயம் எய்தி வாராஹிதன் பாதத்தை அன்பில் உன்னி
மாலயன் தேவர் முதலான பேர்களும் வாழ்த்துவரே!''

ஆக்ஞா சக்ரேஸ்வரியான அன்னை காலைப்பொழுதில் அஷ்டமா சித்திகளை நல்கும் பாலாதிரிபுர சுந்தரி தேவியாகவும், மாலையிலே புவனேஸ்வரியாக அனைத்து செல்வங்களையும் மங்களங்களையும் அருள்பவளாகவும், உச்சிப் பொழுதில் திரிபுர பைரவியாக ஸம்ஹாரிகையாக சத்துரு நாசனம் செய்து வெற்றி தருபவளாகவும் இருக்கிறாள். இவளது திருவோலக்கத்திற்குச் சென்று திருமாலொடு நான்முகனும் தேவர்களும் இவளது பாதம் அன்பினால் பணிந்து வாழ்த்தி நிற்பர்! ஞானசித்தி, செல்வம், வெற்றி ஆகிய மூன்று புருஷார்த்தங்களையும் தரவல்லவள். வாராஹிதேவி அனைத்துலகமும் இவளைப் பரவி உய்கின்றனர்.

**''ஆதித்தன் அம்புலி, அங்கி, குபேரன், அமரர்தம் கோன்**
**போதிற் பிரமன், புராரி, முராரி, பொதியமுனி**
**காதிப்பொரு படைக்கந்தன், கணபதி, காமன் முதல்**
**சாதித்த புண்ணியர் எண்ணிலர் போற்றுவர்**
**தையலையே!**

என்ற அபிராமி அந்தாதிப் பாடல் இங்கே ஒப்பு நோக்கி மகிழத்தக்கது!

**9. '' வருத்திப் பகைத்தீர் என்னோடறியாமல்,**
**முன்வானவர்க்காச்**
**சிரித்துப் புரம் எரித்தோன் வாமபாகத்துத் தேவி**
**எங்கள்**
**கருத்திற் பயிலும் வாராஹி என் பஞ்சமி கண்**
**சிவந்தாற்**
**பருத்திப் பொதிக்கிட்ட தீப்பொறி காணும்**
**பகைத்தவர்க்கே!''**

நூலாசிரியர் சிறந்த வாராஹி உபாசகர். சோழர்களின் படையின் தளபதியாக சாளுக்கியர்களுடன் போரிட்டு வெற்றிவாகை தேடித் தந்தவர். இந்த நூலும் அந்தச் சமயத்தில் சோழர்கள் வெற்றியடைய வேண்டிப் பாடிய ஒரு 'நிக்கிரகாஷ்டகம்' எனத் தோன்றுகிறது. 'நான் யாரென்றுணராமல் வீணாக என்னைப் பகைத்துக்

கொண்டவர்களை திரிபுரங்களைச் சிரித்தே எரி மூட்டிய ஈஸ்வரனின் வாமபாகத் துறையும் தேவி வாராஹி கொஞ்சம் கண் சிவந்தாலும் நீங்கள் எல்லாம் தீப்பொறிபட்ட பஞ்சு மூட்டைபோல் எரிந்து விடுவீர்கள்' என்கிறார். வாமபாகத்துத் தேவி என்றது அந்தகாசுரனை அழிக்க சிவபெருமானுக்கு வாராஹி துணை போனது புராணப் பிரசித்தம். அதற்குப் பரிசாக ஈஸ்வரனின் வாமபாகத்தை அடைந்ததாக சமஷ்டி தத்துவத்திற் கொள்ளலாம்.

'எங்கள் கருத்திற் பயிலும் வாராஹி', 'என் பஞ்சமி' என்ற அடைமொழிகள் கவிஞரின் உபாசனா அன்பையும் நெருக்கத்தையும் வெளிப்படுத்தும். ஒரு யானை மதங் கொண்டு தாக்கவந்தபோது கம்பர் பாடியதாக ஒரு பாடல். அதில்,

''வெங்கண் சிவந்து வெடி வால் முறுக்கி
வெகுண்டெழுந்து என்
அங்கம் பிளக்க வரும் களிறே! அன்று இரணியனைப்
பங்கம் படர வுரங்கீண்டே யுதிரம் பருகு நர-
சிங்கம் இருக்குதுகாண், கெடுவாய், உந்தன்
சிந்தையிலே!''

அதேபோல், வாராஹிஅன்னை என் நெஞ்சில் நீங்காது நிறைந்திருக்கிறாள். அது தெரியாமல் மோதும் நீங்கள் நொடிப் பொழுதில் காணாமற் போவீர்கள்! என எச்சரிக்கிறார் கவிஞர்.

10\. ''பாப்பட்ட செந்தமிழ்ப் பாவாணர் நின்மலர்ப் பாதம்
தன்னில்
பூப்பட்டதுவும், பொறிபட்டதோ? நின்னையே
புகழ்ந்து
கூப்பிட்டதுன் செவி கேட்கிலையோ, அண்ட கோள
மட்டும்
தீப்பட்டதோ? பட்டதோ நிந்தையாளர்
தெருவெங்குமே!''

பொய்யாமொழி, காளமேகம், காளிதாசன், கம்பன், அபிராமி பட்டர், சம்பந்தப் பெருமான், அப்பர், வள்ளலார் போன்ற பல

அருட்கவி இயற்றிய சான்றோரின் பண்பட்டதால் செந்தமிழ் பாப்பட்டது எனக் கூறுவர். நிர்மலமான, தூய்மையான; நினது மலர் போன்ற பாதங்களிலே என இரு பொருள் கொள்ளலாம். நினது மலரடிகளிலே இந்தச் செந்தமிழ்ப் பாவாணர்கள் பாக்கள் என்னும் பூக்களை அர்ச்சித்தார்களே! அவை சுற்றியிருக்கும் தீ ஜ்வாலையில் பட்டுக் காணாமற் போய்விட்டதோ? அல்லது உனது சலனமற்ற துரிய நிலையில் அவர்களது வாயுரை வாழ்த்துகள் உனது செவியில் கேட்காமல் போய்விட்டனவோ? அண்டகோளமனைத்தும் பொசுங்கிட எரியுண்டதோ? எம்மை நிந்தை செய்தாரும் இதில் அழிந்தனரோ? என்று கேட்கிறார் கவி. எப்பொழுதும் கூப்பிட்ட குரலுக்கு ஓடி வருபவள் தாய். சில நேரம் அந்தத் தாய் தனது சேய்களிடம் சிறிது விளையாடி மகிழும் தருணத்தில், கண்ணாமூச்சி ஆடுவதுண்டு. அது போல் சிவையின் மவுனம் காண்கிறது. விரகதாபமுற்ற தலைவி பகல் வராமல் இரவினால் இடருற்றுத் தோழியிடம் கேட்டாள் (''எப்பொழுதும் சரியாகக் குறிப்பிட்ட நேரத்திற்கு வரும் இந்தச் சூரியனுக்கு என்ன ஆயிற்று? இராகு அவளை மறைத்துவிட்டானா? அவன் வருகின்ற தேரின் அச்சு முறிந்து குதிரைகள் தறிகெட்டு ஓடிவிட்டனவா? இல்லை ரவியே வேறு வழி சென்று பாதை மாறிப் போனானா?'' என்றெல்லாம் சினத்தோடும் தாபத்தோடும் கேட்கிறாள்.

''அரவங்கரந்ததோ? அச்சுமரமிற்றுப்
புரவி கயிறுருவிப் போச்சோ? இரவிதான்....
வேறு வழி சென்றானோ? எத்தால் விடியும் இரா?''

அதுபோல் பக்தரின் ஆற்றாமை ஒருபுறம் வெளிப்பட, நிச்சயம் நமது பகைவரை அவள் அழித்திருப்பாள் என்கிற நம்பிக்கையும் இப்பாடலில் தொனிக்கிறது. அதன் எதிரொலியாக அடுத்த பாடல் சீறி வருகிறது.

11. ''எங்கும் எரியக் கிரிகள் பொடிபட, எம்பகைஞர்
அங்கம் பிளந்திட விண்மண் கிழிந்திட
ஆர்த்தெழுந்து

பொங்கும் கடல்கள் சுவறிடச் சூலத்தைப்
போகவிட்டுச்
சிங்கத்தின் மீது வருவாள் வாராஹி சிவசக்தியே!''

'தூம்ர வாராஹி' என்கிற அம்சத்தில் தூமவதி தேவியாக உலகத்தை அழிப்பதும், பின் புதிதாகப் படைப்பதும் வாராஹியின் வேலையாயிற்று. இவளே காலராத்ரி. யுகப்பிரளயம் ஏற்படும் போது, புவனம் எரிபட, மலைகள் பொடியாக, விண் மண்ணோடு நடுக்குற்று இடைவெளி விட, கடல் பொங்கி வழிந்து அனைத்தையும் விழுங்கிட இப்படி அனைத்து உத்பாதங்களையும் இயக்குபவள் இந்த 'ஸமயேஸ்வரி'. இடி, மின்னல், பூகம்பம் ஆகிய எல்லா அதீதங்களும் இவளது ஏவலுக்கு உட்பட்டவை. இவள் இந்தப் பேரழிவினைப் பார்வையிட 'ரண கோலாஹலம்' என்கிற தனது சிங்கத்தின் மீது ஏறிப் பவனி வருகிறாள். இத்தனை அசாத்தியமான அழிவுச் செயல்களை அவளது சூலாயுதம் ஒன்றே செய்து முடித்து இவள் வரவைப் பார்த்துக் காத்திருக்கிறது என்ற பொருளில், சூலத்தைப் போகவிட்டு சிங்கத்தின் மீது வருவாள் என்பது. இவற்றை ஏதோ இச்சா மாத்திரம் செய்யவில்லை, ஒரு நியதிக்குட்பட்டே செய்கிறாள் இந்த ஊழி முதல்வி.

இந்த இடத்தில் நூலாசிரியரைப் பற்றி ஒரு சிறு குறிப்பு. வாராகி மாலையைப் படிக்குந்தோறும், அதனுள் விரவி வரும் சொற்கள் மற்றும் போர் ஆவேச உணர்வுகள், இவர் கவிச்சக்கரவர்த்தி கம்பனை முற்றோதியவர் என்பதை உணர்த்துகிறது. ஏற்கெனவே 'நொய்து' என்ற வார்த்தையைக் குறிப்பிட்டோம். அங்கம் பிளந்திட' 'விண்மலர் கிழிந்து' 'கிரிகள் பொடிபட' போன்ற சொற் பிரயோகங்களை ''திசை திரிந்து அண்டம் சீறிச் சிரித்தது அச்செங்கட்சீயம், கிளர்ந்தது ககனமுட்டை கிழிந்தது கீழும் மேலும்'' போன்ற கம்பன் வாக்கொடு ஒப்பிட்டு சுவை தேறலாம்.

12. ''சக்தி கவுரி மகமாயி ஆயி என் சத்துருவைக்
குத்தி இரணக்குடரைப் பிடுங்கிக் குலாவி நின்றே

இத்திசை எங்கும் நடுங்கக் கிரிகள் இடிபடவே
நித்தம் நடித்து வருவாள் வாராஹியென்
நெஞ்சகத்தே!''

அன்பின் மிகுதியினால் குழந்தையைப் பல பேரிட்டு அழைப்பது போல, தாயைப் பல நாமங்களிட்டு அழைக்கிறார் கவிஞர். உலகமகா சக்தியாக விளங்குவதால் சக்தி, கிரிராஜன் தனயை என்பதால் கௌரி, மஹாமாயையாக விளங்குவதால் மகமாயி, உலகிற்கே தாயாக திகழ்வதால் 'ஆயி' என்று ('ஆத்தாளை' என்று அழைத்தார் அல்லவா அபிராமி பட்டர்?) இப்படி ஒருருவம் அற்றவளுக்குப் பல உருவம், பல நாமம். தன் அடியாரின் சத்துருகளைக் குத்திக் குடர் பிடுங்கி, மலைகள் எல்லாம் நடுங்கிடவே மகிழ்வுடன் குலாவி நடை பயில்வாள் என்று கூறி 'வாராஹி என் நெஞ்சகத்தே' என்று முத்தாய்ப்பு வைக்கிறார். நமக்கு எதிரிகள் புறத்தே மட்டுமன்றி, அகத்தேயும் விளங்குகின்றனர். காமம், குரோதம், வஞ்சம், மாயை, அழுக்காறு போன்ற உட்பகைவர்களையும் அன்னை சம்ஹரித்து நம்மிடம் மிக்க விளங்கும் ஆணவம், கன்மம், செருக்கு ஆகிய மாமலைகளும் நடுக்குறும்படி இடித்துத் தள்ளி, நமது நெஞ்சமெனும் வீட்டைச் சுத்தப்படுத்துகிறாள் என்று பொருள் உணர்வதும் பொருத்தமுடையது.

13. ''நெஞ்சகம் தன்னில் நிறைந்திருக்கின்றவள்
நிர்க்குணத்தி
நஞ்சணி கண்டத்தி, நாராயணிதனை நம்புதற்கு
வஞ்சனை பண்ணி மதியாதபேரை வாழ்நாளை
யுண்ணக்
கொஞ்சி நடந்து வருவாள் வாராஹி குல தெய்வமே!''

நெஞ்சத்தில் என்றைக்கும் நிறைந்திருக்கும் ஈஸ்வரனின் நிர்க்குண ஸ்வரூபமான (வேண்டுதல், வேண்டாமையில்லாத) பத்தினி; நீலகண்டனின் இன்துணைவியான நாராயணி; இவளை நம்பாமல் வஞ்சனை செய்து மதிக்காமல் திரிபவரை முடித்திட விளையாட்டாக வருவாள் நம் குலதெய்வமான வாராஹி!

'வஞ்சகர் நெஞ்சடையாளை' என்பார் பட்டர். பக்தர்களைக் காக்கிறோம் என்றும் துன்மார்க்கரை அழிக்கிறோம் என்றும் இரட்டிப்பு மகிழ்ச்சியில், அவள் 'கொஞ்சி நடந்து வருவாள்'' என்பது புலப்படுகிறது.

14. ''மதுமாமிசம் தனைத்தின் பாள் இவளென்று
மாமறையோர்
அதுவே உதாசினம் செய்திடுவார்! அந்த அற்பர்கள்தம்
கதிர்வாய் அடைத்திட உள்ளம் கலங்கக் கடித்தடித்து
விதிர்வானில் வெட்டியெறிவாள், வாராஹி என்
மெய்த்தெய்வமே!''

ஸ்ரீ லலிதா பராபட்டாரிகாவின் படைத்தளபதியான தண்டநாதை தனது தொழிலுக்கேற்றபடி உணவுப் பழக்கங்கள் உள்ளவள். இதன் காரணமாக இவளைப் பழிக்கவோ, உதாசீனம் செய்யவோ - மறைவல்லோர் முயன்றால், அத்தகைய இழிகுணம் கொண்ட அற்பர்களை அவர்களது வெம்மை மிகும் சொற்கள் வெளிவரும் வாயடைத்திட, உள்ளம் கலங்க, தனது கைவாளால் வெட்டி எறியவும் தயங்கமாட்டாள், மெய்யான தெய்வமான பஞ்சமி என்பது பொருள். இருக்கும் இடம், செய்யும் தொழில், அமைந்த சூழ்நிலை, மன உணர்வு, இயற்கைத்தேவை ஆகியவற்றை அனுசரித்தே உணவுப் பழக்கங்கள் அமைகின்றன. பாலைவனத்தில் வசிப்போர் பேரீச்சைப்பழம், ஒட்டகப் பால் மற்றும் ஒட்டக இறைச்சி உண்பவராகவும், பனிப் பிரதேசங்களில் இருப்போர் மீனுணவை ஏற்பவர்களாகவும், மருத வளம் மிக்க வளமான பூமியில் வாழ்வோர் - தானிய உணவும், பாலும், பருப்பும் உண்டு மகிழ்வோராகவும் இருப்பதை நுணுகி, ஆய்வோர், சைவ, அசைவ உணவு பேதங்களைப் பெரிதாக எண்ண மாட்டார்கள். அவரவர்களுக்கு உரியது அவரவர் ஆச்சாரம்!

போர்த் தெய்வமான வாராஹியின் அசைவப் பழக்கத்தைக் கண்டிப்பதும் மற்றையோருக்கு தேவையில்லாத தவறான நிலைப்பாடு என்று குறிக்கிறார் - கவிஞர்.

15. ''ஐயும் கிலியும் எனத் தொண்டர் போற்ற அரிய பச்சை
மெய்யும் கருணை வழிந்தோடுகின்ற விழியும் மலர்க்
கையும், பிரம்பும், கபாலமும், சூலமும் கண் எதிரே
வையம் துதிக்க வருவாள் வாராஹி மலர்க்கொடியே!''

கவிஞரின் வாராஹி தெய்வ தரிசனத்தை இது பகர்கிறது.

ஓம்-'ஐம் க்லெளம்' என்பது வாராஹியின் பீஜாட்சரங்கள். இந்த பீஜாட்சரங்களைக் கூறிப் போற்றிடும் தொண்டருக்கு கண்ணுக்குக் குளுமையான பச்சை வண்ண மேனியுடன், கருணையும் கனவும் மிகுந்து வெளிப்படும் விழிகளுடன், மென்மையான மலர்க் கரங்களில் பிரம்பும், கபாலமும், சூலமும் முறையே தாங்கி, மேன்மக்கள் எல்லாம் துதிக்கப் பிரசன்னமாவாள். பக்தர்களின் அச்சத்தைப் போக்கி அன்புருவமாக விளங்குகிறாள் அன்னை என்பது தெளிவாகும்.

சீர்கொண்ட தெய்வ வதனங்களாறும் திகழ்கடம்பந்
தார் கொண்ட பன்னிரு தோள்களும் தாமரைத் தாள்களும் ஓர்
கூர்கொண்ட வேலும் மயிலும் நற்கோழிக் கொடியும் அருள்
கார்கொண்ட வண்மைத் தணிகாசலமும் என் கண்ணுற்றதே!'' (திருஅருட்பா)

என்கிற வள்ளலாரின் முருக தரிசனப் பனுவலுடன் இதனை ஒப்பிட்டு மகிழலாம்.

16. ''தாளும், மனமும், தலையும், குலையத் தரியலர்கள்
மாளும் படிக்கு வரம் தருவாய்; உன்னை வாழ்த்தும் அன்பர்
கோளும் பகையும், குறியார்கள், வெற்றிகுறித்த சங்கும்
வாளும் கடகமும், சூலமும் ஏந்திவரும் துணையே!''

நவகிரக நாயகியாக விளங்குபவள் வாராஹி! அவளை வணங்குவோர்க்கு நவகோள்களினால் வரும் நலிவில்லை. அமைதியான நமது வாழ்விற்குக் குந்தகம் விளைவிக்கும் பகைவர்கள் துண்டும் துணியும் வீழ்ந்திட நிலைகுலைந்து ஓடி மறைந்திட வரம் தருவாய்! எனக் கேட்டு நீயே எம்மோடு என்றும் வரும் வழித்துணை நாயகி; நீயிருக்கையில் எமக்கு நவகோள்களிடம் அச்சமில்லை; சத்ருக்களிடமும் பயமில்லை. வெற்றிச் சங்கும், வீரவாளும், திரிசூலமும் ஏந்தி வரும் மாதேவி அல்லவா நீ? என்று மனத்திண்மையுடன் கூறுகிறார் நூலாசிரியர்.

''நாளென் செயும், வினைதானென் செயும், எனை நாடி வந்த
கோளென் செயும், கொடுங்கூற் றென்செயும், குமரேசரிரு
தாளும் சிலம்பும், சலங்கையும் தண்டையும், சண்முகமும்
தோளும், கடம்பும், எனக்குமுன்னே வந்து தோன்றிடினே!''

(கந்-அலங். அருண)

என்றபடி, நீ எம்மோடிருக்கையில் நமக்கு அச்சமேதுமில்லை.

17. ''வரும்துணை என்று வாராஹி என்றன் அன்னையை வாழ்த்திநிதம்
பொருந்தும் தகைமையைப் பூணாதவர் புலால் உடலைப்
பருந்தும் கழுகும்வெம் பூதமும் வெய்ய பிசாசுகளும்
விருந்துண்ணப் பட்டுக் கிடப்பர் கண்டீர், உடல் வேறுபட்டே!''

''தாயிற் சிறந்ததோர் கோயிலில்லை!'' ''தாயு நீயே, சாயை தந்து உகத்தலின்'' போன்ற ஆன்றோர் வாக்குகள் நம்மை ஈன்ற ஜகன்மாதாவை நாம் மறக்கலாகாது என்பதைச் சுட்டும். குபுத்ரோ ஜாயதி, க்வசிதபி குமாதா ந பவதி' என்றார் சங்கரரும். இத்தகைய மகிமை பொருந்திய அன்னையை லோகமாதாவை, அன்றாடம்

பணிந்து பரவாதவர் நன்றி கொன்றவர்கள். அன்பில்லாத இவர்களின் உடல் 'என்புதோல் போர்த்த உடம்பு'. அதனைப் பருந்தும் கழுகினமும், பேய் பூதங்களும் பங்கு போட்டு உண்ணும் நிலையுடையவர்' என்பது. ('பருந்துணப் பாட்டி யாக்கை படுத்த நாள்' - கம்பன் வாக்கு)

18. ''வேறாக்கும் நெஞ்சும் வினையும் வெவ்வேறு வெகுண்டுடலம்
கூறாக்கும், நெஞ்சத்திற் செந்நிறம் ஆன குருதி பொங்கச்
சேறாக்கும், குங்குமக் கொங்கையிற் பூசும் திலகமிடும்
மாறாக்கும் நேமிப் படையாள் தலை வணங்காதவர்க்கே!''

திகிரியைக் கரமேந்தும் தண்டநாதையைத் தலை வணங்காதவர்களுக்குத் தரப்படும் தண்டனை, அவர்களது உடலைச் சக்கரத்தால் துணித்து துண்டாக்கி, பொங்கும் குருதியைப் பேய்கள் குடிக்கக் கொடுத்தும், அதிலும் எஞ்சி மிகுந்ததை அவர்கள் மார்பில் சந்தனம் போல் பூசியும், குங்குமம் போல் நெற்றியில் திலகமிட்டும் தனது சீற்றத்தை வெளிப்படுத்தி அவள் அமைவாள். 'அச்சமே கீழ்களது ஆசாரம்' என்றார் வள்ளுவர். மேன்மக்கள் 'ஸமய ஸங்கேதா' எனப் புத்தியினால் தெளிந்து போற்றிப் பணிவர். அறிவற்ற மற்றையோருக்கு பஞ்சமியின் வல்லமையை எடுத்துக் கூறுமுகமாக அவள் தரும் தண்டனைகளை விவரித்து, அச்சமூட்டி, அவரை நெறிப்படுத்த வேண்டும் என்கிற நல்நோக்கமே - வாராஹி மாலையின் உள்ளீடான, தெய்விக லட்சியம். அதில் கவிஞர் வெற்றி பெற்றுள்ளார்.

19. ''பாடகச் சீறடிப் பஞ்சமி அன்பர் பகைஞர் தமை
ஓடவிட்டேகை உலக்கை கொண்டெற்றி உதிரமெல்லாம்
கோடகத்திட்டு வடித்தெடுத்துத் தூற்றிக் குடிக்குமெங்கள்

ஆடகக் கும்ப இணைக் கொங்கையாள் எங்கள்
அம்பிகையே

தங்கக் கலசம் போன்று ஒளிருமிரு மார்பகங்கள் மேனியிற் பொருந்தியவளும், மலரைப்போல் மென்மையான அழகிய பாதங்களையும் உடைய பஞ்சமியாகிய எங்கள் அன்பிற்குரிய அம்பிகை, தன் அடியாரின் பகைவர்தமை விரட்டி ஓடவிட்டு கை உலக்கையால் தடிந்து அவர்களது குருதியையும் கோபத்தால் குடித்திடுவாள்' என்பது பொருள்.

20. ''தாமக்குழலும், குழையும், பொன்ஓலையும்,
தாமரைப்பூஞ்
சேமக்கழலும், துதிக்க வந்தோர்க்கு ஜெகமதனில்
வாமக்கரள களத்தம்மை ஆதிவாராஹி வந்து
தீமைப்பவத்தைக் கெடுத்தாண்டு கொள்வாள்
சிவசக்தியே''

நீண்ட அழகிய வார்குழலும், பொன் காதணியும், குழையும் தாமரை போன்ற அழகிய நலம் தரும் கழல்களும் மனத்தில் எண்ணித் துதிப்போர்க்கு இவ்வுலகினில் அவருக்கு எஞ்சியுள்ள பாபங்களையும் ஒழித்து ஆட்கொள்வாள் ஈஸ்வரனின் வாம பாகத்தில் உறைகின்ற சிவசக்தி ஐக்கிய ஸ்வரூபிணியான வாராஹியே!

21.''ஆராகிலும் நமக்கே வினைசெய்யின், அவர்
உடலும்
கூராகும் வாளுக்கிரையிடுவாள்; கொன்றை
வேணியரன்
சீரார் மகுடத்தடி யிணை சேர்க்கும் திரிபுரையாள்
வாராஹி வந்து குடியிருந்தாள் என்னை வாழ்விக்கவே!

கொன்றைப் பூவை அணிந்த மகேஸ்வரனின் சிவசாயுஜ்யத்தைத் தரவல்ல திரிபுர பைரவியாம் தேவி வாராஹி, யாராவது நமக்குத் தீமை செய்தால் (நாம் சொல்லாமலே) அவர்

தமைத் தனது கூர்வாளுக்கிரையாக்கி, நாம் நலமுடன் என்றும் வாழ நமது நெஞ்சம் ஆகிய கோயிலில் வந்து குடியிருப்பாள் என்கிறார். (வருந்தாவகை என் மனத்தாமரை வந்து புகுந்து இருந்தாள் பழைய இருப்பிடமாக' என்ற அபிராமி அந்தாதி வரிகளை இங்கே எண்ணுக). எந்தவித இடையூறும் இல்லாமல் இகத்தில் காத்து பரத்தில் சிவசாயுஜ்யமும் அளிக்கும் பேராற்றலும் பெருங் கருணையும் உடையவள் இவள் என்பதை இதனால் உணர்கிறோம். அடியவர்கள் தமக்கேற்பட்ட தீமையை எடுத்தியம்பக் கூடக் காத்திராமல் ஒன்னலரை ஒறுக்கும் தன்மையள் தண்டநாதை என இதனால் அறியலாகும்.

22. "தரிப்பாள் கலப்பை என் அம்மை வாராஹி; என் சத்ருவை
பொரிப்பாள், பொறி எழச் செந்தீயில் இட்டுப் பொரிந்த தலை
நெரிப்பாள்; தலை மண்டை மூளையைத் தின்றுபின் நெட்டுடலை
உரிப்பாள்; படுக்க விரிப்பாள்; சுக்காக உலர்த்துவளே!

உயிர் வாழ்வதற்குரிய உணவைப் பயிரிட உதவுவது கலப்பை; உயிரை அழிப்பதற்கு உதவுவது உலக்கை. இப்படி பிறப்பு இறப்பு என்கிற இரண்டிற்குமே ஆதாரமான தெய்வமாக விளங்குபவள் - வாராஹி. ஒரு பக்கம் சம்ஹாரம் செய்பவள்; இன்னொரு பக்கம் சம்ரக்ஷணை செய்பவள். அவளது உக்கிர நிலையில், அவளை பிரேதாசனத்தில் இருப்பவளாகத் தியானித்தல் வழக்கம். சத்ருக்களை அவள் என்ன செய்கிறாள்? பொரித்தெடுக்கிறாள்; பொறி கிளம்ப நெருப்பிலே இட்டுத் தலையை நெரிப்பாள்; தீமைகளையே சிந்தனை செய்த அவர் தம் மூளையையும் இல்லாதாக்கி உண்கிறாள். அவர் தம் நீண்ட உடலையும், உரித்து படுக்கை போல் தரையில் விரித்து, சுக்கு போல் காய வைத்து உலர்த்துவாள். ஆம் தென்திசைக்குரிய 'யமி' அல்லவா அவள்!

23. "ஊராகிலும் உடன் நாடாகிலும் அவர் குற்றவரோடு
யாராகிலும் நமக்காற்றுவரோ? அடல் ஆழியுண்டு

காரார் கருத்த உலக்கையும் உண்டு, கலப்பை உண்டு
வாராஹி என்னும் மெய்ச் சண்டபிரசண்ட வடிவி
உண்டே!

போராற்றல் மிக்க சக்கரமும், கரியமேகம் போன்ற நிறம் கொண்ட உலக்கையும், கலப்பையும் ஆயுதமாகக் கொண்ட சண்ட-பிரசண்ட வடிவமான சத்திய ஸ்வரூபமான தேவி வாராஹி நம்மோடு இருக்கும்போது, எந்த ஊர், எந்த நாடு, எந்த மக்களாக இருந்தால் என்ன, அவர் நமக்கு எப்படி சமானமானவர்கள்? என்று கேட்கிறார் கவிஞர்! இல்லையென்பதே பொருளாகும். உண்டு என்ற சொல்லை அடுத்தடுத்து அழகாக சொல் பின்வரு அணியாக அமைத்த விதம் பாங்குண்டு. ''நீர் உண்டு பொழிகின்ற காருண்டு விளைகின்ற நிலமுண்டு...'' என்று தொடங்கும் வள்ளலாரின் பாடலை ஒப்பிட்டு இங்கு மகிழலாம்.

24. ''உலக்கை கலப்பை ஒளிவிடு வாள்கட காழிசங்கம்
வலக்கை இடக்கையில் வைத்த வாராஹி என்
மாற்றலர்கள்
இலக்கம் இல்லாத எழிற்பெரும் சேனை எதிர்வரினும்
விலக்கவல்லாள் ஒரு மெல்லிதன் பாதம்
விரும்புகவே!''

வாராகிமாலையைப் பாராயணம் செய்யும் பக்தருக்கு ஓர் ஐயம் எழலாம். பகைவர்கள், மாற்றலர், திரியலர் என்று சத்ருக்களைப் பற்றியே வருகிறதே, கவிஞரிவருக்கு இத்தனை பகைவர்களா என்று. அதுவன்று. தன் நாட்டுப் பற்றால் தானேயேற்ற படைப் பொறுப்பினால், தான் வழிபடு தெய்வமாகவும் சோழர்களின் போர்த் தெய்வமாகவும் விளங்கும் வாராஹியிடம் உரிமையுடன் பகை தணிவினைக்காக இப்படிப் பலமுறை முறையிடுகிறார் என்பதே உண்மை! தனது நாடும், நாட்டு மக்களும், பகையரசின் படையெடுப்பால் நலிந்து நாசமடையாதிருக்கவே தண்டநாதையை நயந்து அருள் கேட்கிறார். தனது கரங்களில் உலக்கை, கலப்பை, கத்தி, கேடயம், சங்கம், சக்கரம் ஆகியவற்றைத்

தாங்கியிருக்கும் பஞ்சமி மகாசக்தி வாய்ந்தவள். எண்ணிக்கையே இல்லாதபடி பெரும்சேனையுடன் எதிரிகள் வந்தாலும், அவர்களை ஒரு நொடியில் விலக்கி அழித்து விடக்கூடிய பேராற்றல் மிக்கவள். அதேசமயம் பக்தர்கள் அடிபணிந்து உய்யக்கூடிய வகையில் மென்மலர்ப் பாதங்கள் உடையவளாகையால் 'அறம் செய்ய விரும்பு' என்று ஔவை சொன்னதுபோல் 'மெல்லிதன் பாதம் விரும்புகவே' என்று முடிக்கிறார்.

25. ''தஞ்சம் உன்பாதம் சரணாகதியென்று சார்ந்தவர்மேல்
வஞ்சனை பில்லி கொடிதேவல் சூனியம் வைத்தவரை
நெஞ்சம் பிளந்து நிணக்குடல் வாங்கி
நெருப்பினிலிட்டு
அஞ்சக் கரங்கொண்டறுப்பாள் திரிபுரை
ஆனந்தியே!''

'நன்றே வருகினும் தீதே விளைகினும், நானறிவது ஒன்றேயுமில்லை. உனக்கே பரம் எனக்குள்ளவெல்லாம், அன்றே உனது என்று அளித்துவிட்டேன்' (அபி.அந்) என்றபடி அவளையே சதமாக எண்ணிச் சரணடைந்த பக்தர்களைக் காப்பது அவள் கடமையாகிறது. அவர்களுக்கு ஏற்படும் துன்பங்களை நீக்குவதும் அவள் பொறுப்பாகிறது. அந்த முறையில் அடியவர்களுக்கு வேண்டாத கொடிய கல்நெஞ்சர் ஏவிவிடும் செய்வினைகள், பில்லி, சூனியம் ஆதி அபிசார ப்ரயோகங்களை பயனற்றதாக்கி, அனுப்பியவர்களையே தாக்கி அழித்து விடுமாறு செய்திடுவாள் தண்டநாதை. 'நெஞ்சம் பிளந்து, நிணக்குடல் வாங்கி நெருப்பினிலிட்டு அஞ்சக் கரங்கொண்டறுப்பாள்' யார்? திரிபுர பைரவியாகும். வாராஹி அன்னையே! அவளை ஆனந்தி என்று அழைப்பதன் சூட்சுமம், தன் அடியார்களின் பகை முடித்த ஆனந்தமும், அடியார்களுக்கு நன்மை செய்த ஆனந்தமும், 'சத் சித் ஆனந்தமாக' இருக்கும் பேரானந்தமும் ஆக முப்பெரும் ஆனந்தமுடைய ஆனந்தி. ('ஆனந்தமாய் என் அறிவாய் நிறைந்த அமுதமுமாய்' என்றார் அபிராமி பட்டரும்.)

26. ''அலைபட்டு நெஞ்சம் அலைந்துயிர் சோர அலகைக்
கையால்
கொலைபட்டு டலம் கழுகுகள் சூழக்குருதி பொங்கித்
தலை கெட்டவயவம் வேறாய் பதைப்புற்றுச் சாவர்
கண்டீர்!
நிலைபெற்ற நேமிப் படையாள், தனைநினை
யாதவரே!''

'கற்றதனால் ஆய பயன் என்கொல் வாலறிவன் நற்றாள் தொழார் எனின்' என்றார் வள்ளுவப் பெருந்தகை. நம்மைப் பிறப்பித்த தெய்வத்தை வணங்கி வழிபடவே நமக்கு ஆறறிவைத் தந்திருக்கிறான் இறைவன். தெய்வம் உண்டு என்று அதை நம்பாமல் உள்ளவனையே உலகில் பிசாசு என்று கூறுவார் திருவள்ளுவர். 'உலகத்தார் உண்டு என்பது இல் என்பான், வையத்து அலகையா வைக்கப்படும்'. அப்படிச் சொல்பவனையே பேய் என்று சாடினார். இங்கே நிலைபெற்ற நேமிப்படை (சக்கரம்) உடைய வாராஹியை நினையாமல், வீணே பொழுது போக்குவோரை பேய் அடித்துப்போட, நெஞ்சம் அலைபட்டு உயிர் அலைந்து சோர, கொலைபட்டு, உடலைக் கழுகுகள் கொத்தி சின்னாபின்னமாக்க, ஓர் அவல துர்மரணத்தையல்லவா சந்திக்க வேண்டியிருக்கும்? என எச்சரித்து, 'அவளைப் பணிமின் கண்டீர் அமராவதி ஆளுகைக்கே' என்றபடி தண்ணருள் கூட்டும் தண்டநாதையை தெண்டனிட்டு உய்யுங்கள் என்று பரம கருணையுடன் மொழிகிறார் கவிஞர்.

27. ''சிந்தை தெளிந்துனை வாழ்த்திப் பணிந்து தினம்
துதித்தே
அந்தி, பகல் உன்னை அர்ச்சித்தபேரை அசிங்கியமாய்
நிந்தனை பண்ணி மதியாத உலுத்தர் நிணம் அருந்திப்
புந்தி மகிழ்ந்து வருவாய் வாராஹிநற்
பொற்கொடியே!''

மனோ, வாக்கு, காயம் ஆகிய முக்கரணங்களாலும் தேவியைச் சரணடைதலை இங்கு கூறப்படுகிறது. மனத்தால் தெளிந்து,

வாக்கினால் வாழ்த்திக் காயத்தினால் பணிந்து வாராஹியை அன்றாடம் மறவாமல் துதிப்பவரை, நிந்தனையாகக் கேலி பேசி மதியாதிருக்கக்கூடிய கீழ்மையான இயல்பு கொண்டோரின் உடலை மாய்த்து சதையை உண்டு வயிறு நிறைத்திட வருவாள், ஈசரை விட்டு நீங்காத வாராஹி அன்னை என்பார். பகலில் அர்ச்சிப்பதுடன் அந்தியில் வழிபாடு செய்தல் அவளுக்குப் பிடித்தமானது என்பதால், 'அந்தி, பகல்' அர்ச்சிப்போருக்கு என்றார்.

28. ''பொருப்புக்கு மாறு செய் பாழியும், தோளும்
பொருப்பைவென்ற
மருப்புக்கு நேர் சொலும் கொங்கையும் மேனியும்
வாழ்த்தும் எனது
இருப்புக்கடிய மனதிற் குடிகொண்டு எதிர்த்தவரை
நெருப்புக் குவால் எனக் கொல்வாய் வாராஹியென்
நிர்குணியே!''

மலையைப் போல் திண்ணிய புஜங்களும், அதற்கு மாறாக மிக மெலிந்த இடைக்கு, நேர் செய்வது போன்ற பருத்த மார்பகங்கள் விளங்கும் மேனியும், வாழ்த்திடும் என் இரும்பையொத்த வலிய நெஞ்சிலும் குடிகொண்டு, எனை எதிர்த்தோரை தீக்குளிக்க வைத்துக் கொல்வாள். நிர்க்குண ஸ்வரூபமுடைய எந்தன் வாராஹியே! வராஹரின் உட்சக்தியாக இருந்து இந்த பூமியைப் பாதாளத்திலிருந்து மேலே கொணர்ந்தவள் என்பதால் அந்த ஆற்றலுக்குரிய திண்ணிய புஜமுடையவள். உலகுக்குத் தாயாக இருந்து புரப்பவள் என்பதைக் குறிக்கப் பருத்த ஸ்தன பாரங்கள்; எப்படிப்பட்ட கடினமான இடத்திலும் நுழையக்கூடிய வலிமை படைத்தவள் என்பதால் இரும்பு மனத்திலும் வந்து குடியிருப்பவள்; அக்னி ஸ்வரூபமானவள் என்பதால் தீக்குளிக்க வைத்து பகைவரை அழிப்பாள் என்பதும் பெறப்படும்.

29.''தேறிட்ட நின்மலர்ப்பாதார விந்தத்தைச் சிந்தை
செய்து
நீறிட்டவர்க்கு வினைவருமோ? நின் அடியவர் பால்

மாறிட்டவர் தமை வாள் ஆயுதம் கொண்டு வாட்டியிரு
கூறிட்டெறிய வருவாய், வாராஹி குலதெய்வமே!

'கண்ணியது உன் புகழ், கற்பதுன் நாமம், கசிந்து பக்தி பண்ணியது உன்னிரு பாதாரவிந்தம்' என்றபடி அன்னையின் மலர்ப்பாதங்களே அனைத்திலும் மேலானது என்று தேறி, அதனையே சிந்தை செய்து பணிந்து பரவி மேனியில் திருநீறிட்டவர்க்கு பவவினைகள் எப்படி வரும்? 'மந்திரமாவது நீறு' அல்லவா? விருப்பு வெறுப்பு அற்று பற்றற்றிருப்பவர்கள் நெற்றியில் திருநீறு துலங்கும். அவருக்குப் பிறவிப் பிணியும் இல்லை. அவர்க்கு யாராவது கொடுமை செய்தாலும் அதை எடுத்து முறையிடவும் மாட்டார்கள். பொறுத்துக் கொள்வர். ஆனால் உன்னால் அப்படிப் பொறுக்க முடியாதே? 'நின் அடியவர் பால்' மாறிட்டவர் தமை, கைவாள் கொண்டுசேதித்து இரு கூறாக்கி விடுவாயே! காரணம் நீ அவர்க்குத் தெய்வமன்றோ? என்று கூறுகிறார் கவிஞர்.

30. ''நரிபரி ஆக்கிய சம்புவின் பாகத்தை நண்ணியமான்
அரிஅயன் போற்றும் அபிராமி தன் அடியார்க்கு முன்னே
சரியாக நின்று தருக்கம்செய் மூடர் தலையை வெட்டி
எரியாய் எரித்து விடுவாள் வாராஹியெனும் தெய்வமே!

நரியைப் பரியாக்கித் திருவிளையாடல் புரிந்த சிவபெருமானின் இடப்பாகம் கலந்த பொன்னாகிய தேவி, நாரணனும், நான்முகனும் பரவும் அபிராம வல்லியின் அடியாருடன் விதண்டாவாதமாகப் வாதப் போர் புரியும் மூடர்களின் சிரத்தைக் கொய்து எரித்திடுவாள் வாராஹி என்கிறார். வாராகி அடியாருடன் வாதாடாதே என்று கூறும் பழமொழியை ஞாபகப்படுத்துவதாக இது அமைகிறது. பிரமிக்கத்தக்க அழகுடையவள் என்பதால் அபிராமி.

31. ''வீற்றிருப்பாள் நவகோணத்திலே, நம்மை வேண்டுமென்று
காத்திருப்பாள் கலி வந்தணுகாமல்; என் கண் கலக்கம்

பார்த்திருப்பாள் அல்லள்; எங்கே என்றங்குச பாசம் கையில்

கோர்த்திருப்பாள், இவளே என்னை ஆளும் குலதெய்வமே!''

நவகோணமாகிய ஸ்ரீ சக்கரத்தில் வீற்றிருக்கும் நாயகி இவள்! (ஒளி நின்ற கோணங்கள் ஒன்பதில் மேவி உறைபவளே!'' (அபி.அந்) அவள் நம் குலதெய்வமாக விளங்குவதால் ஒரு கூடுதல் பொறுப்போடு, கலி வந்து நமை அணுகாமல் காத்திருப்பாள்; நமது கண் கலங்கப் பார்த்திருக்க மாட்டாள்; எங்கே எப்பொழுது என்று தயார் நிலையில் கையில் பாசாங்குசங்களைக் கோத்துக் கொண்டிருக்கும் இவள் யார் தெரியுமா? என்று கேட்டு விட்டு இவளே என்னை ஆளும் குலதெய்வம் என்று முத்தாய்ப்பு வைக்கிறார் கவிஞர் சர்மா.

32. ''சிவஞான போதகி செங்கைக் கபாலி, திகம்பரி நல்

தவமாகும் மெய்யன்பர்க்கே இடர் சூழும் தரியலறை

அவமானம் செய்யக் கணங்களை யேவும் அகோரி, இங்கு

நலமாக வந்தெனைக் காக்கும் திரிபுர நாயகியே!''

சிவபெருமானின் சொரூப லக்ஷணங்களை விண்டுரைப்பது **சிவஞான போதம்.** அந்த சிவஞான போதத்தை மக்களுக்கு போதிக்கும் சக்தியாக இருப்பவள் வாராஹி. ஆகையால் சிவஞான போதகி; ஈஸ்வரனைப் போலவே இவளும் உக்கிர ரூபத்திலே பிரம்ம கபாலத்தைத் தன் செங்கரத்திலே ஏற்கிறாள்! நிர்வாண நிலையில் இருப்பவள் என்பதால் திகம்பரி! தன்னையே எண்ணித் துதிக்கும் தவசீலர்களுக்கு துன்பம் தரும் தூர்த்தரை அவமானம் செய்து கர்வபங்கம் செய்யப் பூதகணங்களை ஏவும் கோர ஸ்வரூபமுடையவள்! அடியேன் நலமுற வந்து எனைக் காக்கின்ற திரிபுர சுந்தரி நாயகி இவளே! என்று பாடி அருட்கவி நிறைவு செய்கிறார், இந்த வீரம்செறி **வாராகிமாலையை!**

ஏற்கெனவே சொன்னபடி, அடிப்படையில் ஒரு படைத் தளபதியாக இருந்து செருக்களங்கள் பல கண்டவர் என்பதால், ஒரு பரணியைப் போல் இந்த வாராகி துதியை இயல்பாகவே அமைத்திருக்கிறார். இன்னொரு சிறந்த பொருத்தம், இவர் வழிபடும் நாயகியோ, ஸ்ரீலலிதாவுக்கும் ஸ்ரீசதாசிவனுக்கும் படைகள் நடத்தி வெற்றி வாகை பெற்றுத் தந்த வாராஹிதேவி. கேட்க வேண்டுமா? பக்தனும் தெய்வமும் ஒரே அதிர்வலையில் இருந்தபடியால் இந்த தோத்திரப்பா ஒரு வாராஹி பரணியாகவே அமைந்து அடியவருக்குப் பாராயணம் செய்யும் ஒப்பற்ற கவச நூலாகவே விளங்குவது சத்தியம்!

ஓம் தத் சத்

☆☆☆☆☆☆

# ஸ்ரீ வாராஹி ஆலயங்கள்

**வாரணாசியில் :**

**வா**ராஹிக்கென்று தனியாக ஒரு கோயில் வாரணாசியில் 'த்ரிபுர பைரவி காட்' அருகில் உள்ளது. 'பாதாள பைரவி' அல்லது அதர்வண பத்ரகாளி என்று முன்பு குறிப்பிடப்பட்ட இந்த தேவியைத் தற்சமயம் 'ஆதி வாராஹி' என்றே பிரபலமாக அழைக்கிறார்கள். விடியற்காலை 4 மணிக்கே ஒரு பெண் பூசாரிணி சந்நிதிக்குள் வந்து அன்னைக்கு அபிஷேகம் செய்து ஆடையுடுத்தி அலங்கரித்துச் செல்வதாகவும், பிறகு பூசாரி ஒருவர் வந்து ஸ்ரீவாராஹி தேவிக்கு மலரிட்டு 6 மணிக்குள் பூஜை செய்து முடித்துவிட்டுச் செல்வதும் வழக்கமாக உள்ளது. நிலக்கடலை, தேங்காய், ஏலக்காய் சேர்க்காத இனிப்பு வகைகள், வெற்றிலை பீடா, உளுந்து பலகாரங்கள் போன்ற எளிய நைவேத்யங்கள் தான் அன்னைக்கு. சூரியோதயத்திற்கு முன்பே பூஜை தரிசனம் முடிந்து கோயிலைச் சாத்தி விடுவார்கள். மிக உக்கிரமான தோற்றம் கொண்ட அன்னைக்கு, படமோ, புகைப்படமோ இதுவரை எதுவுமில்லை. ஒரு சிறிய மூடித்துவாரத்தைத் திறந்துதான் அன்னையைத் தரிசிக்க முடியும். 8, 9ஆம்-நூற்றாண்டிலிருந்தே இந்த வாராஹி கோயில் கர்ப்பகிருகத்திற்குள் கடந்த 50 ஆண்டுகளாக பூஜாரிகளைத் தவிர வேறு எவரும் செல்ல அனுமதிக்கப்படுவதில்லை என அறிகிறோம்.

**தஞ்சையில் :**

அடுத்தபடி தஞ்சைப் பெரிய கோயிலில், வாராஹிக்குத் தனிச் சந்நிதி உள்ளது. தஞ்சைப் பெரிய கோயில் கட்டப்படுவதற்கு முன்பே அங்கே இருந்து வருவதாகவும் கூறப்படுகிறது. சோழ அரசர்களின் இஷ்ட தெய்வமாக விளங்கியவள் இந்த வாராஹி.

அவர்களுக்கு மாபெரும் வெற்றியைத் தேடித்தந்த தெய்வமிவள்! இராஜராஜ சோழன் முதல் முதலாம் குலோத்துங்கன், இரண்டாம் இராஜாதிராஜன் வரை, சோழ அரசர்களின் போர் வெற்றிகளுக்கும் வீரம் செறிந்த ஆளுமைக்கும் இவளே பின்புலமாக இருந்து சக்தி தந்தவள். வாராஹியைப் பற்றி மிக நுணுக்கமாகவும், விரிவாகவும் கூறும் ''வாராஹி மாலையை'' இயற்றிய சுந்தரேசர், முதலாம் குலோத்துங்க சோழ அரசனின் படைத்தளபதியாகக் குதிரைப்படைத் தலைமையேற்று, சாளுக்கிய மன்னன் 6வது விக்கிரமாதித்தனை கர்நாடகத்தில் நடந்த போரில் வென்றதாகவும் வரலாற்றின் மூலம் தெரிகிறது. பிரும்ம முகூர்த்தத்தில் இவளுக்குச் சென்ற நூற்றாண்டு வரை பூஜை முன்பு நடந்து வந்ததாகவும், தற்சமயம் காலையில் அது நடைபெறுவதாகவும் கூறுகிறார்கள். மஞ்சள் ஆடை அணிந்த பஞ்சமி தேவியாக இவள் காட்சியளிக்கிறாள்.

**காஞ்சியில் :**

காஞ்சி காமாட்சி கோயிலில், கர்ப்பக்கிரகத்தைச் சுற்றியுள்ள வெளிச்சுவரில் வடக்குப்புறம், ஒரு கோஷ்ட தெய்வமாகவும், பிராகார மண்டபத்தில் உள்ள தூணிலும் வாராஹி காணப்படுகிறாள். இப்போது கோஷ்டத்தில் வடக்குப்புறம் உள்ள தேவி முன்பு (1944 குடமுழுக்குக்கு முன்) காமாட்சி தேவி கர்ப்பக்கிரகத்திலேயே தெற்குச் சுவரில் இருந்ததாகவும், பிறகு வெளிப்புறத்தில் வடக்குப்புறம் மாற்றப்பட்டதாகவும் தெரிய வருகிறது. இவள் முதலில் மிகவும் உக்கிரமாக இருந்ததாகவும், ஸ்ரீ ஆதிசங்கரர் காமாட்சி சந்நிதியில் ஸ்ரீசக்கர ப்ரதிஷ்டை செய்து இவளது ஆக்ரோஷத்தைத் தணித்ததாகவும் கூறப்படுகிறது. நான்கு கரங்களில் சங்கு சக்கரமும், கலப்பையும், உலக்கையும் ஏந்திய வடிவினள். இரண்டாவது, தூணில் அமைந்துள்ள வாராஹி தேவி எட்டு கரங்கள், சங்கு, சக்கரம், உலக்கை, கத்தி, கலப்பை, கேடயம் ஏந்தியவளாய் அபயவரத முத்திரைகளுடன் அருள் கோலத்தில் அமர்ந்து காணப்படுகிறாள்.

**உத்தரகோசமங்கையில் :**

இராமநாதபுரம் நகருக்கு 10 கி.மீ தூரத்தில் உள்ள கோயில் உத்தரகோசமங்கை. உமைக்கு உத்தர ஆகம கோசங்களை சிவன் போதித்த இடம் என்பதால் இப்பெயர் பெற்றது. மங்களேஸ்வரர் கோயிலுக்கு அருகில் வாராஹி கோயில் அமைந்துள்ளது. பிரேதாசனத்தில் நிற்கின்ற தோற்றம். மூக்குப்பகுதி பின்னப்பட்டுள்ளதால் வெள்ளிக் கவசமிட்டிருக்கிறார்கள். மிகச் சக்தி வாய்ந்த வரப்பிரசாதி.

**திருஆனைக்காவலில் :**

ஸ்ரீரங்கம் அருகில் திருவானைக்காவலில் ஜம்புகேஸ்வரர் கோயிலிலுள்ள அகிலாண்டேஸ்வரி, ஸ்ரீவாராஹியின் சக்தி ஸ்வரூபமே! முகம் வராஹ முகம் இல்லாவிட்டாலும், தண்டநாதையின் உக்கிரத்வம் மிக விளங்கியவளாய் நரபலி கொள்பவளாகவும் ஆதிநாளில் விளங்கியதாக நம்பப்படுகிறது. ஸ்ரீ ஆதிசங்கரரின் விஜயத்தின் போது இவளது ஆக்ரோஷமான கோபத்தைத் தணிக்க ஸ்ரீ சக்கர தாடங்கத்தை (தோடுகள்) அவளது செவிகளில் அணிவித்து அவளைச் சாந்தப்படுத்தினார். மேலும் பிள்ளையார் சிலையையும் அவள் சந்நிதிக்கு நேர்முகமாய் பிரதிஷ்டை செய்து அருள்தரக்கூடிய அன்னையாக மாற்றினார். (சப்தமாதர்களின் உக்கிரத்தை ஒரு கட்டுக்குக் கொண்டு வர பிள்ளையாரையும், வீரபத்திரரையும் கூடவே பிரதிஷ்டை செய்யும் வழக்கம் வந்ததை 'சப்தமாதர் பகுதியில்' ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளதும் காண்க.) இரவு அர்த்தஜாம பூஜையின்போது முகம் அகிலாண்டேஸ்வரியின் - வாராஹியின் - முகமாகத் தெரிவதாகவும் பக்தர்கள் கூறுவர்.

**ஸப்தமாதருடன் :**

மேலும் ஸப்தமாதருடன் சேர்ந்த வாராஹி உருவங்கள் பல கோயில்களில் வழிபாட்டில் உள்ளன. உதாரணமாக தஞ்சாவூர் மாவட்டத்தில் -

திருப்பூந்துருத்தி - புஷ்பவனேஸ்வரர் கோயில் மண்டபத்தில் உட்கார்ந்த நிலையில் சதுர்புஜங்களுடன் கூடிய வாராஹி வழிபடப்படுகிறாள். ஆந்திராவில் பிரொடத்தூரில் ராமலிங்கேஸ்வரா கோயிலில் (ஸப்தமாதருடன்) கருட வாகனமுடைய வாராஹி வழிபடப்படுகிறாள். காஞ்சி கயிலாசநாதர் கோயிலில் சப்தமாதருடன் அமர்ந்த நிலையில் வாராஹி காணப்படுகிறாள். வெளி மாநிலங்களில் ஒரிசாவில் 10ஆம் நூற்றாண்டிலேயே வாராஹி வழிபாடு சிறப்புற இருந்தது என்பதற்கு சான்றாகப் பல வாராஹி சிலாரூபங்கள் ஆங்காங்கே கிடைத்துள்ளன. வழிபாட்டில் உள்ளவற்றில் முக்கியமானவை சத்பயா கிராமத்தில் பெண்களால் மட்டுமே பூஜை செய்யப்படும் வாராஹி கோயிலும், சௌராசி கிராமத்தில் உள்ள வாராஹி கோயிலும் பிரசித்தமானவை. தாந்திரிக வழிபாடான வாமாசார முறையில் இங்கே (சௌராசி) வழிபாடுகள் செய்யப்பட்டதாக அறியப்படுகிறது. (சௌராசி கோயிலில் உள்ள சிற்பங்கள் இதற்கு ஆதாரமாய் உள்ளதாக வாராஹி ஆய்வாளர் திருமதி ஹரிப்ரியா ரங்கராஜன் தம் நூலில் தெரிவித்துள்ளார்)

பூரியில் - ஜகன்னாதர் கோயிலுக்குச் சமீபம், 15ஆவது நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு வாராஹி கோயில் உள்ளது. கோயிலிருக்கும் தெருவை வாராஹி தெரு என அழைக்கிறார்கள். மிகவும் பழைமையான ஆலயம். சைத்ர மாத நவராத்திரியில் இங்கு 9 நாள்களுக்குத் திருவிழா கொண்டாடப்படுகிறது. பாவனோப நிஷத் குறிப்பிடும்போது ''வாராஹி பித்ருரூபா, குருகுல்லா மாதா பலிதேவதா'' என்று குறிப்பிடும். குருகுல்லாவிற்கும் வாராஹிக்குமான ஒரே கோயில் புவனேஸ்வர்க்கு 30 கி.மீ தொலைவில் 'கொர கொரா' 'கிராம் பஞ்சாயத்' என்கிற சிற்றூரில் அமைந்துள்ளது. சிறிய கிராமமாக இருந்தாலும் மிகவும் பழைமையானதாகும். வாராஹி தாந்திரீக சக்தி வழிபாட்டின் அதிதேவதையாக வணங்கப்படுவது போல், குருகுல்லா புத்தமதக் கடவுளாக வழிபடப்படுகிறது. குருகுல்லா என்கிற முதற்பெயர் குருகுராவென மாறிப்பின் இப்போது 'கொரகொரா' என

அழைக்கப்படுகிறது. இக்கோயிலில் வாராஹி லலிதாசனத்தில் வீற்றிருக்க வாகனமான மகிஷம் கீழுள்ளது. நான்கு கரத்தினள். மேலுள்ள கரங்களில் கதையும் சக்கரமும், கீழுள்ள கரங்களில் மத்யமும், கபாலமும் ஏந்திய கைகள். பானை போல் பெரிய வயிறும், பருத்த உடலும், வாராஹிக்கு இடப்புறம் குருகுல்லா தேவி; யோகாசனத்தில் அமர்ந்திருக்கிறாள். நான்கு கரமுடையாள். நெற்றிக்கண் தெரிகிறது. ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த பழைமையான கோயில்

(தகவல் : ஹரிப்ரியா ரங்கராஜன் - வாராஹி)

இதுபோல் இந்தியா முழுதும் பலப்பல இடங்களில் ஸ்ரீ வாராஹி தனிக்கோயில்களும், ஸப்தமாதர் கோயில்களில் 5வதாக அங்கம் வகிக்கும் ஆலயங்களுமாக இவள் ஆதியிலிருந்தே அரசர்களாலும், மக்களாலும் பக்தியுடன் வழிபடப்படுவதை தொல்பொருள் ஆராய்ச்சிகளின் மூலம் வரலாற்று ஆசிரியர்கள் வெளிப்படுத்தியிருக்கிறார்கள். வேதநெறி, வைணவ நெறி, சாக்த நெறி, தந்திர நெறி, பௌத்த நெறி ஆகிய அனைத்திற்கும் பொதுவான ஒன்றாய், சதாச்சாரம்; 'கௌலமார்க்கம்' இரண்டிலுமே தொடர்புடையதாய் மக்களால் 'வாராஹி வழிபாடு' ஏற்றுக்கொள்ளப்பட்டு, அன்றிலிருந்து இன்று வரை, ஒரு பயபக்தியுடன் தொழற்குரிய தெய்வ வழியாக விளங்கி வருவதே உண்மை. இவளுக்கு ரூபங்கள் பல. மந்திரங்கள் பல. அமரும் வாகனங்கள் பல. வழிபாடு செய்து வழிகாட்டும் ரிஷிகளும் பலர்; எல்லாவிதத்திலும் வாராஹி தனிச் சிறப்பிற்குரியவள் என்பதால் இவளுடைய வழிபாட்டு வழிகளும் ப்ரத்யேகமானவை; தனிச்சிறப்புக்குரியன. இவளை அன்போடு சௌம்யமாக வணங்க இந்த ஆலயங்கள் நமக்குத் துணை நிற்கும். ஏற்கனவே கூறியபடி வாராஹி மரணத்தின் தெய்வம்; இராத்ரி தேவதை என்னும் காலராத்ரியே இவள்! நெறியான பூஜை முறைகளுடன் நயத்துடனும் பயத்துடனும் வழிபடத்தக்கவள். வாராஹி கவசம், வாராஹி நிக்ரக அனுக்ரகாஷ்டகங்கள்,

அச்வாரூடா, வாராஹி மாலை போன்ற துதிகளால் அவளைப் பரவி அவள் அருளைப் பெறலாம். உபாசனை செய்ய விருப்பமுடையோர் தக்க குருவை தயவுடன் அணுகி முறையுடன் பூஜா முறைகளையும், மந்திரங்களையும் கற்று அவர் வழிகாட்டுதலுடன் ஒரு குறிப்பிட்ட வாராஹி பூஜையை ஏற்றுச் செய்வதே உத்தமமாகும். அப்படி உபாசனை செய்வதற்குரிய சூழ்நிலைகளையும், மனஒருமைப்பாட்டையும் பெற வாராஹியை ஆலயத்தில் சேவித்து வருவது சிறந்த பலனைத் தருவதாகும். அதனால் தான் ஒளவையும், ஆலயம் தொழுவது சாலவும் நன்று என்றாள்.

**''வாராஹி, விஜயா, விந்த்யாவாசினி**
**பைரவி, பிரசன்னா, பிரும்மசாரிணி**
**காரணி, நாரணி, காமசாரிணி**
**கௌமாரி, வரதை, கட்கதாரிணி''**

என்று நாமும் அவளை வழிபட்டு உய்வோமாக.

☆☆☆☆☆☆

# ஸ்ரீ ஆதி வாரர்ஹி கவசம்

(அஸ்யஸ்ரீ வாராஹி கவசமந்த்ரஸ்ய த்ரிலோசன ருஷிகள் அனுஷ்டுப் சந்த: ஸ்ரீ ஆதி வாராஹி தேவதா க்ளெளம் பீஜம், ஸ்வாஹா சக்தி; ஐம் கீலகம் அபீஷ்ட சித்யர்த்தே ஜபே விநியோக:

த்யானம்

த்யாத்வேந்த்ர நீலவர்ணாபாம் சந்த்ர சூர்யாக்னி லோசனாம் ।
விதி விஷ்ணு சுரேந்திராதி மாத்ரு பைரவ ஸேவிதாம் ॥ 1

ஹார நூபுர கேயூர வலயேரூப சோபிதாம் ।
ஜ்வலன்மணிகண ப்ரோதமுகுடோஜ்வல சோபிதாம் ॥ 2

சாஸ்த்ராண்யஸ்த்ராணி ஸர்வாணி ஸ்வகார்யகரணானிச ।
கரை: ஸமஸ்தைர்விவிதைர் பிப்ரதீம் முசலம் ஹலம் ॥ 3

வாராஹி தேவி கவசம் புக்தி முக்தி பலப்ரதம் ।
படேத்ரிசந்த்யாம் ரக்ஷார்த்தம் ரோகசத்ரு நிக்ருந்தயே ॥ 4

மேக ச்யாமருசிம் மனோகரகுசாம் நேத்ரத் ரயோ பாஸிதாம் ।
கோலாஸ்யாம் சசிசேகராம சலிதை: தம் ஷ்ட்ராதலை: சோபிதாம் ॥
பிப்ராணாம் ஸ்வகராம்பு ஜைரஸிலதாம் சர்மாஸிபாசம் ச்ருணிம் ।
வாராஹி மனுசிந்தயே ஹ்வராஹரூடாம் சுபாலங்க்ருதம் ॥ 5

ஓம் வார்த்தாளி மே சிர: பாது வாராஹி பாலமுத்தமம் ।
நேத்ரே வராஹவதனா பாது கர்ணெள ததாந்தினி ॥ 6

ருந்தினி நாசிகா பாது, முகம் பாது ஸுஜம்பினி ।
பாதுமே மோகினி ஜிஹ்வாம், ஸ்தம்பினி கண்டமாதராத் ॥ 7

ஓம் ஐம் க்லெளம் ஜிதகாமாயை நம:
ஓம் ஐம் க்லெளம் காம்ரகயாயை நம:
ஓம் ஐம் க்லெளம் கோலாயை நம:
ஓம் ஐம் க்லெளம் கல்பாங்கிண்யை நம:
ஓம் ஐம் க்லெளம் கலாயை நம:
ஓம் ஐம் க்லெளம் ப்ரதாநாயை நம:
ஓம் ஐம் க்லெளம் தாரகாயை நம:
ஓம் ஐம் க்லெளம் தாராயை நம:
ஓம் ஐம் க்லெளம் ஹதாத்மனே நம:
ஓம் ஐம் க்லெளம் ஹிதபேதின்யை நம: 910

ஓம் ஐம் க்லெளம் துரக்ஷராயை நம:
ஓம் ஐம் க்லெளம் பரப்ருஹ்மணே நம:
ஓம் ஐம் க்லெளம் மஹாதாநாயை நம:
ஓம் ஐம் க்லெளம் மஹாஹவாயை நம:
ஓம் ஐம் க்லெளம் வாருண்யை நம:
ஓம் ஐம் க்லெளம் வ்யருண்யை நம:
ஓம் ஐம் க்லெளம் வாண்யை நம:
ஓம் ஐம் க்லெளம் வீணாயை நம:
ஓம் ஐம் க்லெளம் வேண்யை நம:
ஓம் ஐம் க்லெளம் விஹங்கமாயை நம: 920

ஓம் ஐம் க்லெளம் மோதப்ரியாயை நம:
ஓம் ஐம் க்லெளம் மோதகின்யை நம:
ஓம் ஐம் க்லெளம் ப்லவநாயை நம:
ஓம் ஐம் க்லெளம் ப்லாவின்யை நம:
ஓம் ஐம் க்லெளம் ப்லுத்யை நம:
ஓம் ஐம் க்லெளம் அஜராயை நம:
ஓம் ஐம் க்லெளம் லோஹிதாயை நம:

ஓம் ஐம் க்லௌம் லாக்ஷாயை நம:
ஓம் ஐம் க்லௌம் ப்ரதப்தாயை நம:
ஓம் ஐம் க்லௌம் விஸ்வஜனன்யை நம: 930
ஓம் ஐம் க்லௌம் மனஸே நம:
ஓம் ஐம் க்லௌம் புத்தயே நம:
ஓம் ஐம் க்லௌம் அஹங்காராயை நம:
ஓம் ஐம் க்லௌம் க்ஷேத்ரஜ்ஞாயை நம:
ஓம் ஐம் க்லௌம் க்ஷேத்ர பாலிகாயை நம:
ஓம் ஐம் க்லௌம் சதுர்வேதாயை நம:
ஓம் ஐம் க்லௌம் சதுஷ்பாதாயை நம:
ஓம் ஐம் க்லௌம் சதுரந்தாயை நம:
ஓம் ஐம் க்லௌம் சருப்ரியாயை நம:
ஓம் ஐம் க்லௌம் சர்விண்யை நம: 940
ஓம் ஐம் க்லௌம் சோரிண்யை நம:
ஓம் ஐம் க்லௌம் சார்யை நம:
ஓம் ஐம் க்லௌம் சாங்கர்யை நம:
ஓம் ஐம் க்லௌம் சர்மபேக்யை நம:
ஓம் ஐம் க்லௌம் நிர்லேபாயை நம:
ஓம் ஐம் க்லௌம் நிஷ்ப்ரபஞ்சாயை நம:
ஓம் ஐம் க்லௌம் ப்ரசாந்தாயை நம:
ஓம் ஐம் க்லௌம் நித்ய விக்ரஹாயை நம:
ஓம் ஐம் க்லௌம் ஸ்தவ்யாயை நம:
ஓம் ஐம் க்லௌம் ஸ்தவப்ரியாயை நம: 950
ஓம் ஐம் க்லௌம் வ்யாலாயை நம:
ஓம் ஐம் க்லௌம் குரவே நம:
ஓம் ஐம் க்லௌம் ஆச்ரிதவத்ஸலாயை நம:
ஓம் ஐம் க்லௌம் நிஷ்களங்காயை நம:

ஓம் ஐம் க்லௌம் நிராலம்பாயை நம:
ஓம் ஐம் க்லௌம் நிர்த்வந்த்வாயை நம:
ஓம் ஐம் க்லௌம் நிஷ்பரிக்ரஹாயை நம:
ஓம் ஐம் க்லௌம் நிர்குணாயை நம:
ஓம் ஐம் க்லௌம் நிர்மலாயை நம:
ஓம் ஐம் க்லௌம் நித்யாயை நம: 960
ஓம் ஐம் க்லௌம் நிரீஹாயை நம:
ஓம் ஐம் க்லௌம் நிரகாயை நம:
ஓம் ஐம் க்லௌம் நவாயை நம:
ஓம் ஐம் க்லௌம் நிரிந்த்ரியாயை நம:
ஓம் ஐம் க்லௌம் நிராபாஸாயை நம:
ஓம் ஐம் க்லௌம் நிர்மோஹாயை நம:
ஓம் ஐம் க்லௌம் நீதிநாயகாயை நம:
ஓம் ஐம் க்லௌம் நிரிந்தநாயை நம:
ஓம் ஐம் க்லௌம் நிஷ்கலாயை நம:
ஓம் ஐம் க்லௌம் லீலாகாராயை நம: 970
ஓம் ஐம் க்லௌம் நிராமயாயை நம:
ஓம் ஐம் க்லௌம் முண்டாயை நம:
ஓம் ஐம் க்லௌம் விரூபாயை நம:
ஓம் ஐம் க்லௌம் விக்ருதாயை நம:
ஓம் ஐம் க்லௌம் பிங்களாக்ஷ்யை நம:
ஓம் ஐம் க்லௌம் குணோத்தராயை நம:
ஓம் ஐம் க்லௌம் பத்மகர்பாயை நம:
ஓம் ஐம் க்லௌம் மஹாகர்பாயை நம:
ஓம் ஐம் க்லௌம் விச்வகர்பாயை நம:
ஓம் ஐம் க்லௌம் விலக்ஷணாயை நம: 980
ஓம் ஐம் க்லௌம் பரமாத்மனே நம:
ஓம் ஐம் க்லௌம் பரேசாண்யை நம:

ஓம் ஐம் க்லெளம் பராயை நம:
ஓம் ஐம் க்லெளம் பாராயை நம:
ஓம் ஐம் க்லெளம் பரந்தபாயை நம:
ஓம் ஐம் க்லெளம் ஸம்ஸாரஸேதவே நம:
ஓம் ஐம் க்லெளம் க்ரூராக்ஷயை நம:
ஓம் ஐம் க்லெளம் மூர்ச்சாயை நம:
ஓம் ஐம் க்லெளம் முக்தாயை நம:
ஓம் ஐம் க்லெளம் மனுப்ரியாயை நம: 990
ஓம் ஐம் க்லெளம் விஸமயாயை நம:
ஓம் ஐம் க்லெளம் துர்ஜயாயை நம:
ஓம் ஐம் க்லெளம் தக்ஷாயை நம:
ஓம் ஐம் க்லெளம் தனுஹந்த்ர்யை நம:
ஓம் ஐம் க்லெளம் வராபயதாயினீ நம:
ஓம் ஐம் க்லெளம் தயாலயாயை நம:
ஓம் ஐம் க்லெளம் பரப்ரஹ்மணே நம:
ஓம் ஐம் க்லெளம் ஆநந்த ரூபாயை நம:
ஓம் ஐம் க்லெளம் ஸர்வஸித்தி விதாயின்யை நம:
ஓம் ஐம் க்லெளம் ஹலமுஸலினீ நம:
1000

ஸ்ரீ வாராஹி - திருவடிகள் துணை.

☆☆☆☆☆☆

# நிறைவுரை

**ந**மக்குப் பிடித்தமான பண்டத்தை எவ்வளவுதான் உண்டாலும் மீண்டும் மீண்டும் அதனை உண்ண வேண்டும் என்கிற வேட்கை ஏற்படுவதுபோல், வாராஹி தேவியைப் பற்றி எவ்வளவோ விஷயங்களை எழுதினாலும் நூலை முடித்து நிறைவு செய்ய முயலுகையில் இன்னமும் ஏதாவது எழுதினாலென்ன என்கிற மெய்யான ஆர்வத்தையும் விழைவையும் அன்னை ஏற்படுத்துகிறாள். ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் இவளைப் பற்றிக் கூறுகையில்,

''தண்டினி தண்டஹஸ்தாச தஹராகாச ரூபிணி
விசுக்ர ப்ராணஹரண வாராஹீ வீர்ய நந்திதா''

என்றும்

''பஞ்சமீ பஞ்ச பூதேசீ பஞ்ச ஸங்க்யோப சாரிணீ'' என்றும் விதந்து பேசுகிறது. த்வாதச நாமங்களைச் சிறப்பாக ஏற்றிருக்கும் இவளது பெயர்கள் அனைத்துமே பொருள் பொதிந்தவைதான். **பத்ரகௌமுதி** என்பது இவளது பெயர். 'பத்ர' என்று சொல்லுக்கு புனிதமிகு, நலம்தரும், சக்தி வாய்ந்த, முதன்மையான என்று பல பொருள். (பத்ராசலம்-என்பது புனிதமிகு மலை என்பது போல) கௌமுதி நிலவு. புனிதமிகு நலம் தரும் நிலவாக வாராஹி விளங்குவதால் பத்ர கௌமுதி. அக்ரம் என்றால் முதன்மையான (அக்ராசனர் என்ற சொல் காண்க) **'அக்ரிணி'** என்பது முதன்மையானவள் என்பது. போத, போதகம் என்பவை வலிமையுடைய இளமை பொருந்திய விலங்குகளைச் சிறப்பித்துக் கூறுவது. கேழலின் முகம் தாங்கியவள் என்பதால் **'போத்ரிணி'** என்ற பெயர். வாக்கைக் கட்டுப்படுத்தி ஆள்பவள் என்பதைக் குறிக்கும் **'வார்த்தாளி'**. லலிதா பராபட்டாரிகாவின் சங்கேதக் குறிப்புணர்ந்து செயல்படுவதால் **'சங்கேதா'**. அவள் ஆணையை மேற்கொள்வதால் **ஆக்ஞாசக்ரேஸ்வரி;** மனித உடலில் ஆக்ஞா சக்கரத்தில் இலங்குவதாலும் இப்பெயர்; பஞ்சகிருத்தியங்களைச்

செய்யும் சதாசிவர் பத்தினி; பஞ்ச மகாரங்களால் வழிபடப்படுபவள்; அன்னையின் பஞ்சபாணங்களில் தோன்றியவள்; பஞ்சமி திதிக்குரியவள்; சப்தமாதரில் ஐந்தாவது சக்தியானவள். இப்படி அனைத்துக் காரணங்களுக்குமாகப் **பஞ்சமி;** ஸ்வப்னத்தில் வந்து அருள்பவள் **ஸ்வப்னேசி;** தண்டமேந்தி உலகைக் காத்து தீமைகளை ஒறுப்பதால் **தண்டநாதை.** லலிதாவின் மிகப்பெரிய சக்தி சேனையின் தலைவி என்பதால் **மகாசேனா;** மங்களம் பொருந்தியவள் என்பதால் **சிவா.** புகை வடிவினள் என்பதால் **தூம்ர வாராஹி.** குதிரையில் ஏறி வருவதால் **அஸ்வாரூடா;** மிகப் பெரியவள் என்பதால் **'பிருஹத் வாராஹி.** எதிரிகளின் பேச்சை நிறுத்தக் கூடியவள் என்பதால் - **வாக்ஸ்தம்பினி;** விச்வம் என்றால் பெரிய; உலகம் என்றும் பொருள்; **விச்வ விஜயா** மிகப்பெரிய வெற்றிக்கு உரியவள் என்பது. இப்படி வாராஹியின் ஒவ்வொரு பெயருக்கும் சிறப்பான பொருள் திகழ்கிறது. அது அவளது செயல்பாடுகள் மற்றும் இயல்புகள், தோற்றம் ஆகியவற்றை விளக்குவதாகவும் உள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

**''கல்வி, தறுகண், இசைமை, கொடையெனச் சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே''** எனத் தொல்காப்பிய இலக்கணம் கூறும். பெருமித உணர்வு வருவதற்கு சிறப்பான கல்வியோ, மிகப்பெரிய இகலும் திறனோ, அல்லது நாடு போற்றும் புகழோ அன்றி கொடையோ இவற்றில் ஒன்றிருப்பினும் அதனால் ஒரு பெருமிதம் வருவது இயல்பு என்பது இதன் பொருளாகும். அந்த முறையில் தனது மேதகு படைத்தலைமையாலும், ஆள்வினைத் திறனாலும், பெரும் ஆற்றலின் வெளிப்பாட்டால் ஏற்பட்ட புகழாலும் **வாராஹி** அன்னை நிறைந்து விளங்குவதால் அவள் 'பெருமிதம்' மிக்குடைய தெய்வம் எனில் பொருத்தமுடையது! 'வில்லினாற் சொல்லினல்லது சொல்லினாற் சொல்லக் கற்றிலம்! என்று கம்பன் சொன்னபடி, வாராஹி சொல்லைக் குறுக்கியவள்; செயலைப் பெருக்கியவள்! அவளது உபாசனை என்பது 'கத்தி மேல்' நடப்பது போல் புத்தியின் எச்சரிக்கையுடன் செய்யக்கூடியது.

பூஜை செய்யும் இடம், பூஜா மந்திரம், பூஜா காலம், பூஜா நைவேத்யம், பூஜிப்பவனுடைய தகுதி ஆகியவற்றை வைத்து, உபாசனை சித்திக்கிறது அல்லது சிதிலமடைகிறது. தக்க ஆச்சாரியனை அணுகி வாராஹி ஸ்வரூபங்களில் தனக்கேற்றது எதுவெனத் தேர்ந்து அதில் சிரத்தா பக்தி சமன்விதனாக ஈடுபட்டு அதற்குரிய பூஜைகளை, அதற்குரிய காலங்களில், அதற்குரிய மந்திரங்களைக் கொண்டு செய்பவர்க்கு பஞ்சமி, பஞ்சமின்றி அருள் பொழிவாள் என்பது சத்தியம்! உள்ளும் புறமும் சலனமின்றி தூய்மையோடு பக்தி செய்வோருக்கு அவள் 'காத்திருந்து' உதவி செய்வாள். 'நடுங்கா வகை அன்பர் நெஞ்சினிற்புக்கு' என்ற வாராஹி மாலை அடிகள் அன்பு செய்யும் அடியார்கள் பயம் தொலையும் படியாக அவர் உள்ளத்திலே குடியிருந்து என்று பொருள்படும். அவள் சினத்துடன் கண் பார்த்தாலே அவளது பக்தரின் பகை, அனைத்தும் 'பருத்திப் பொதிக்கிட்ட தீப்பொறி போல்' எரிந்து தூசாகும் என்றும் கூறுவதால், வார்த்தாளி அடியவர்க்கு சிறந்த காவல் தெய்வமாக விளங்கிக் காக்கிறாள் என்பதை உணரலாம். நவகோணத்தில் வீற்றிருந்து பக்தர்களை பயமும் பகையும் அணுகாமல் காத்து, கண் கலங்காமல் வைத்திருப்பாள் என்பதிலும் எந்த ஐயமும் இல்லை. கலியின் நலிவுகள் சூழ்ந்த இவ்வுலகில் ஆற்றல் மிகுந்த வாராஹியை வணங்கி அனைவரும் அல்லல்கள் தீர்ந்து, அவனியிலே பரமக்ஷேமத்துடன் பல்லாண்டு புகழ் பொருந்தி வாழ்ந்திட குருநாதர் ஸ்ரீமத் புவனேஸ்வரி சுவாமிகளின் அருளைச் சிந்தித்து ஆசிர்வதிக்கிறேன்.

ஜெய் புவனேஸ்வரி! ஜெய் வாராஹி!

அன்புடன்

பரமஹம்ஸ ஸ்ரீமத் பரத்வாஜ சுவாமிகள்





## அனைத்து நலன்களையும் வழங்கும் அம்பத்தூர் ஸ்ரீ புவனேஸ்வரி தேவி

அகிலாண்ட கோடி நாயகியாம் அன்னை பராசக்தி, சர்வேஸ்வரனின் கட்டளைக்கிணங்க, ஒருசமயம் தாட்சாயணி என்னும் திருப்பெயரைத் தாங்கி தட்சனின் மகளாகப் பிறந்து வளர்ந்து வந்தாள். அப்போது ஈசனையே இதயத்தில் இருத்தி ஈடிணையற்ற தவம் புரிந்து, சர்வேஸ்வரனையே மணந்து சர்வேஸ்வரியும் ஆனாள்.

அப்போது தாட்சாயணியின் தந்தை நடத்திய ஒரு மாபெரும் யாகத்துக்கு, சர்வேஸ்வரனுக்கு முறைப்படி அழைப்பு அனுப்பாததால், தட்சன் நடத்திய யாகத்துக்குப் போகக்கூடாது என்று தடுத்த ஈசனின் கட்டளையையும் மீறி, தந்தையின் மீதுள்ள பாசத்தால் தாட்சாயணி யாகத்துக்குச் சென்றாள். ஆனால்–

கணவனின் சொல்லை மீறிச் சென்ற பராசக்தியை அங்கே கவனிப்பாரில்லாமல் போனது மட்டுமல்லாமல் ஏளனச் சொற்களுக்கும் ஆளானாள். இதனால் மிகுந்த சினமும் அவமானமும் கொண்ட பராசக்தி நெருப்பில் பாய்ந்து மாண்டபொழுது, அதையறிந்த சர்வேஸ்வரன் ஓடோடி வந்து, தாட்சாயணியின் உடலைத் தம் தோளின் மேல் கிடத்திக் கொண்டு கோர நர்த்தனம் ஆடியபொழுது, தேவியின் உடல் பாகங்கள் அங்கங்கே சிதறி 51 பாகங்களாக பாரத புண்ணிய பூமியில் 51 இடங்களில் வீழ்ந்ததாகப் புராண வரலாறு.

அவ்வாறு ஐம்பத்தோராம் இடமாக தேவியின் உடற்பகுதி வீழ்ந்த இடமே ஐம்பத்தோராம் ஊர் என்று பெயர் விளங்கியதாகவும், அதுவே நாளடைவில் அம்பத்தூர் என ஆயிற்று என்றும் சில குறிப்புகள் கூறுகின்றன.

புராண வரலாறு எப்படியிருப்பினும் அம்பத்தூர் கள்ளிக்குப்பம் பகுதியில் உள்ள பரத்வாஜ் ஆசிரமத்தில் கோயில் கொண்டு எழுந்தருளி, பொன்னவிர் மேனியும் புன்னகை முகமும் கொண்டு விளங்கும் அன்னை புவனேஸ்வரி தேவி அம்பாளின் வடிவமாகக் காட்சி தந்து வழிபடும் அன்பர்களின் வாட்டங்களைப் போக்கி வளமான நல்வாழ்வைத் தந்து வருகிறாள் என்பது நாம் நேரில் கண்டு மகிழும் சத்தியமான உண்மை என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

உலகில் பிறந்த மக்கள் ஒவ்வொருவருக்கும் சிரமங்கள் ஒவ்வொரு வகையில் இருக்கக்கூடும். சிரமங்கள் இல்லாதவர்கள் யாரும் இருக்க முடியாது என்பதும் உண்மை. அத்தகைய சிரமங்களைக் குறைத்து நிம்மதியை வாரி வழங்கக்கூடியவை தான் ஆன்மிக மணங்கமழும் அருளாலயங்களான ஆசிரமங்கள்.

நம் புனித பாரத மண்ணில் ஆங்காங்கே தோன்றி தாமும் வளர்ந்து ஆன்மிகப் பயிரையும் செழித்து வளரச் செய்து வரும்

ஆசிரமங்கள் பலவற்றுள் குறிப்பிடத்தக்கது, பரத்வாஜ் ஆசிரமம் என்பதை யாரும் மறுப்பதற்கில்லை.

இது அம்பாளின் அருளாணைப்படி யுகபுருஷர் புவனேஸ்வரி ஸ்வாமிகளால் உருவாக்கப்பட்டது. அவருடன் உடனிருந்து ஒத்துழைத்து புவனேஸ்வரி ஸ்வாமிகளின் விருப்பப்படி ஆசிரமம் நிர்மாணிக்கப்பட்டதில் பெரும்பங்கு வகித்தவர் அவரது திருப்புதல்வரான பரமஹம்ஸ ஸ்ரீ பரத்வாஜ் ஸ்வாமிகள் அவர்களாவார். இப்போது ஆசிரமத்தைக் கண்ணும் கருத்துமாக சிறப்பான முறையில் நிர்வகித்து வருபவரும் இவரே.

ஆசிரமத்தில் மாதம் இருமுறை அஷ்டமி தினங்களிலும், பௌர்ணமி தினத்திலும் பிரம்மாண்டமான பூஜைகள் நடைபெறுகின்றன.

லலிதாம்பிகையின் பதினைந்து கலைகளும் அவர்களின் கிரண ரூபமான அணிமா, லகிமா போன்ற எண்வகைச் சக்திகள் யாவும் சேர்ந்து பௌர்ணமி நாளில் சந்திர மண்டலத்தில் சேர்ந்திருப்பதால் அன்றைய தினம் அம்பாளை நினைத்துப் பூஜை செய்வதன் மூலம் அம்பாளின் பேரருளைப் பூரணமாகப் பெற்று மகிழலாம்.

அதேபோல அஷ்டமி ருத்ரனுக்கு உகந்தநாள்; நவமி அம்பிகைக்கு உகந்த நாள். அஷ்டமியும் நவமியும் சங்கமமாகும் இனிய வேளையில் பூஜை செய்வதன் மூலம் அம்பாளின் அருளைப் குறைவின்றிப் பெறலாம். எனவே தான் அஷ்டமி, பௌர்ணமி தினங்களில் இங்கே அற்புதமான பூஜைகள் நடத்தப் பெறுகின்றன. இவை தவிர அன்றாட பூஜை, பக்தர்களின் வேண்டுக்கோளுக்கிணங்க நடத்தப்பெறும் விசேஷ பரிகார பூஜைகளும் உண்டு.

ஆண்டுதோறும் நவராத்திரிப் பெருவிழா பத்து நாளிலும் மிகக் கோலாகலமாகக் கொண்டாடப்படுகிறது. அந்தப் பத்து நாளிலும் ஆசிரமம் தேவலோகம் போலக் காட்சியளிக்கும் எனில் மிகையாகாது.

பூஜைகளுக்காக வருபவர்களில் பெரும்பாலானவர்கள், ஏற்கெனவே இங்கே வந்து தங்கள் குறைகளை ஸ்வாமிகளிடம் சொல்லி, ஸ்வாமிகள் அது அதற்குரிய முறையில் துல்லியமாய்க் கணித்து அதற்கேற்ற பரிகார பூஜைகளையும் மிகச் சிறப்பாகவும் ஆத்மார்த்தமாகவும் செய்துவரும் காரணத்தால் பெரிதும் பலன் பெற்றவர்களாவார்கள். அதற்காக நன்றி தெரிவிப்பதற்காக வந்தவர்கள் என்றாலும் அவர்கள் வாயால் சொல்லக்கேட்டு, புதிதாக வந்தவர்களும் பலராவர்.

இதற்கெல்லாம் மூலகாரணம் யுகபுருஷர் புவனேஸ்வரி ஸ்வாமிகள் தாம் எனலாம். தாம் செய்யும் பூஜைகள் தமக்கு மட்டும் பயன்படுவதாக இராமல் லோகக்ஷேமத்திற்குப் பயன்படுவதாக அமைய வேண்டும் என்ற கொள்கையுடன் காயத்ரி மந்திரத்தைக் கோடிமுறை ஜபித்து தாம் பெற்ற சித்திகளையும் அருளாற்றலையும் தம்மை நாடிவரும் மக்களுக்குச் சென்றடையச் செய்ய வேண்டும் என்ற உயர்ந்த குறிக்கோளைக் கொண்டு செயல்பட்டு வந்த ஆன்மிக ஞானக்கடல் அவர். தேவி உபாசனையிலேயே தம் வாழ்நாளை அர்ப்பணித்து வந்த அருள்ஞானச் செல்வர்.

அத்தகைய புலிக்குப் பிறந்தது பூனையாகுமா? அவருடைய அடியொற்றி இன்று விண்ணுலகிலிருக்கும் தம் தந்தையே கண்டு வியக்குமளவுக்கு பல்வேறு ஆன்மிக சாதனைகளைப் படைத்து வருகிறார், அவரது அருந்தவப் புதல்வர் பரத்வாஜ் ஸ்வாமிகள்.

பராசக்தியின் கரத்தில் ஒரு திரிசூலம் உண்டல்லவா? திரிசூலத்தின் மூன்று முனைகளைப் போல மூன்று முத்தான புதல்வர்கள் புவனேஸ்வரி ஸ்வாமிகளுக்குப் பிறந்தார்கள். அவர்களுள் திரிசூலத்தின் நடுமுனையைப் போல நடு நாயகமாகத் தோன்றிய பரத்வாஜ் ஸ்வாமிகள் இன்று மக்களின் துயர் துடைக்கும் ஆன்மிக உலகின் சாதனை நாயகராக நாளும் பரிணாம வளர்ச்சி பெற்று வருகிறார்.

துள்ளித் திரியும் பள்ளிப்பருவ காலத்தில் ஒன்பது வயது வரை நாக்கு கூட சரியாகப் புரளாமலும், சரியாகப் பேச்சு கூட வராமலும் இருந்து வந்த இராமகிருஷ்ணன் என்ற சிறுவன் இன்றைய விசுவரூப வளர்ச்சியைப் பெற்றது எப்படி?

பொங்கிப் பெருகும் காவிரியின் கரையில் இடுப்பளவு நீரில் மணிக்கணக்கில் அமர்ந்து உலக நன்மை கருதித் தவம் செய்வது-

ஒற்றைக் காலில் நின்று மாங்காடு காமாட்சி தவம் செய்ததைப் போல ஆறுமணி நேரம் தவம் செய்வது -

சிறுத்தைக்கு முன்னால் அமர்ந்து தவம் செய்வது -

பிளிறி நிற்கும் யானையின் முன் அமர்ந்து தவம் செய்வது -

இப்படி எண்ணற்ற சாதனைகளை நிகழ்த்தும் ஆற்றல் இவருக்கு ஏற்பட்டது எப்படி?

மாதத்தில் குறைந்தது பத்து கோயில்களுக்குச் சென்று, திருத்தலங்கள் பலவற்றின் கும்பாபிஷேக விழாக்களை நடத்தி வைக்கிறார் என்றால், இவருக்கு வசதியான தேதிகள் அமையும் வரை மாதக்கணக்கில் கூட கோயில் நிர்வாகிகள் காத்திருந்து இவரை அழைத்துச் சென்று கும்பாபிஷேகம் நடத்தி மனம் குளிர்கிறார்களே ஏன்?

ஹோமங்கள், பூஜைகள், கும்பாபிஷேகங்கள் மட்டுமல்லாமல் எழுத்தில் மட்டும் சளைத்தவரா என்றால் அதுவுமில்லை. அதிலும் வித்தகர்தான்.

முன்னணிப் பதிப்பகங்கள் வெளியிட்டுள்ள ஏறத்தாழ நாற்பது நூல்களும் இதுவரை பல பதிப்புகள் விற்றுத் தீர்ந்துள்ளன என்றால் பல்வேறு நுணுக்கமான விஷயங்களை யெல்லாம் தம் தெளிவான எழுத்து நடையால் எளிமையாக விளக்கி எழுதியுள்ள தனிச்சிறப்பே காரணம். இந்தச் சிறப்பு ஸ்வாமிகளுக்கு அமைந்தது எப்படி?

ஒருநாள் - அது 27.10.1998 ஆம் தேதி.

ஆசிரமமே தெய்வலோகம் போலக் காட்சியளிக்கக்கூடிய பத்துநாள் திருவிழாவான நவராத்திரி விழாவின் ஏழாம்நாள் பஜனை நிகழ்ச்சிகள் நடைபெற இருந்த ஆசிரமத் தோட்டத்திற்குச் சென்று நிகழ்ச்சி நடைபெற இடத்தைப் பார்வையிட்டு வருவதற்காக அந்த இடத்துக்குச் சென்றிருந்தார் ஸ்வாமிகள்.

கஜ பூஜைக்காக வரவழைக்கப்பட்டிருந்த யானை, அங்கிருந்த புல், வாழை ஆகியவற்றைத் தின்று கொண்டிருந்தது. அதன் கால்கள் அப்போது கட்டப்பட்டிருக்க வில்லை. பாகனும் தூங்கிக் கொண்டிருந்த வேளை. யானைக்கும் ஸ்வாமிகளுக்கும் இடையே 50 அடி தொலைவே இடைவெளி இருந்தது.

அப்போது கண்ணிமைக்கும் நேரத்தில் ஒரு விபரீதம் நிகழ இருந்தது.

புல்லைத் தின்று கொண்டிருந்த யானை, என்ன நினைத்ததோ திடீரென்று காதுகளையும் துதிக்கையையும் வேகமாக ஆட்டிக்கொண்டு ஸ்வாமிகளை நோக்கி ஓடிச்சென்று ஸ்வாமிகளைத் தாக்கிக் கீழே தள்ளியது.

கண்ணிமைக்கும் நேரம்தான்!

ஸ்வாமிகளின் உதடுகள் தேவியின் திருநாமங்களைச் சொல்லிக் கொண்டிருந்தன.

எந்த நேரமும் தம் திருநாமங்களை ஓயாமல் உச்சரித்துக் கொண்டிருக்கும் அன்புத் திருமகனை, யானை தாக்கப் போவதைக் கண்ட அன்னை பொறுத்திருப்பாளா?

உலகின் மொத்தக் கடற்கரைப் பகுதிகளிலும் பொங்கியெழுந்து பல்லாயிரக்கணக்கான இன்னுயிர்களைப் பலி வாங்கிய சுனாமிப் பேரலையின் கொடிய நாக்கு, வெற்றி

வேல்முருகன் வீற்றிருக்கும் திருச்செந்தூர்க் கடற்கரையின் ஓரத்தில் மட்டும் ஒருமணி நேரம் அடங்கி அலைகள் ஒரு கி.மீ தொலைவுக்கு உள்வாங்கி அதாவது பின்னோக்கிச் சென்றதை தொலைக்காட்சியில் பார்த்தவர்களின் கண்கள் வியப்பால் விரிந்தனவே - அதைப்போல ஸ்வாமிகளைத் தாக்க ஓடிவந்த யானை யாரோ பிடித்து இழுத்ததைப் போல தன் கால்களைப் பின்னே இழுத்து, பின்னர் தன் இடத்துக்குச் சென்று படுத்துக் கொண்டது. ஸ்வாமிகளின் விதியையே முடிக்கவந்த யானையின் கதிநிலை மாறியதற்குக் காரணம் என்ன?

இப்படி வினாக்கள் கணக்கிடலங்கா.

ஆயினும் விடை ஒன்றே ஒன்றுதான்.

அதுதான் அம்பிகையின் அருட்சக்தி.

தம்மையே நம்பியிருக்கும் அன்புக் குழந்தைகளை ஆதரித்துக் காப்பது அன்னையின் சக்திதான் என்பது உண்மையல்லவா?

அம்பிகை எல்லாக் கோள்களுக்கும் தலைவி; சர்வ மந்திர சொரூபிணி. வித்தைகள் யாவற்றுக்கும் தலைவியான வித்யா தேவி எல்லாச் சக்திப் பீடங்களுக்கும் அதிபதி. எல்லா வேதங்களுக்கும், தத்துவங்களுக்கும் ஒப்பற்ற முதல்வி; காருண்யப் பெருங்கடல்.

ஈரேழு உலகங்களையும் எப்போதும் காத்தருளும் அன்னை பக்தர்களின் இதயத் தாமரைகள் பூத்துக் குலங்கும் தடாகத்தின் மத்தியில் நடுநாயகமாக புன்னகைச் சுடரொளியைப் பரப்பியபடி எழிலாகக் கொலு வீற்றிருக்கும் இன்னருட்செல்வி.

இத்தகைய அருளாற்றல்கள் மிக்க அன்னை புவனேஸ்வரியின் திருமுன்னே தம் மகனை அமரவைத்து, திரிசூலத்தால் பாலைத் தொட்டு இவரது நாவில் ஐம் க்லீம் ஸௌ என்ற மந்திரத்தை எழுதி பாலா திரிபுரசுந்தரி மந்திரத்தை

உபதேசம் செய்து, புவனேஸ்வரி ஸ்வாமிகள் ஆசி வழங்கிய அந்த நாள் தொட்டு, பரத்வாஜ் ஸ்வாமிகள் தம்மைப் பீடித்திருந்த தடைகளையெல்லாம் உடைத்துத் தவிடு பொடியாக்கி இன்று நாடறிந்த நல்லருள் மகான்களுள் குறிப்பிடத்தக்கவராக விளங்குகிறார்.

தேவியின் திருநாமங்களை நாத்தழும்பேற ஓயாமல் உச்சரித்து வரும் இவரது நாவில் தேவி குடியேறியிருப்பதாலோ என்னவோ, இவரது நாவிலிருந்து வெளிவரும் வார்த்தைகள் அப்படியே பலிதமடைகின்றன.

இவர் செய்யும் பூஜைகளோ வார்த்தைகளால் வர்ணிக்க இயலாத அளவுக்கு அத்தனை பிரம்மாண்டம்! இங்கே வருபவர்களில் பலரும் சொல்வது ஒரே கருத்தைத்தான். ''நாங்கள் எத்தனையோ இடங்களுக்குச் சென்றிருக்கிறோம். எத்தனையோ பூஜைகளைப் பார்த்திருக்கிறோம். ஆனால் இங்கே நடைபெற்ற பூஜைகளைப் போல எங்குமே பார்த்ததில்லை'' என்று சொல்லுமளவில் மிக நேர்த்தியான பூஜைகள் அவை.

உண்மையில் பூஜைகள் மிகச் சிறப்பான பூஜைகள் தான்.

பூஜை தொடங்கும் நாளில் முதலில் கோபூஜை.

கோபூஜை குபேர சம்பத்தைத் தரும் என்பார்கள். பிரும்மா சிருஷ்டியின் போது அதன் உடலில் முப்பத்து முக்கோடி தேவர்களையும் இருக்கச் செய்தார். தேவர்கள் அனைவரும் பசுவின் ஒவ்வொரு பாகங்களில் குடியேறிய பின்னர், தாமதமாக வந்த மகாலட்சுமிக்கும், கங்காதேவிக்கும் இடமில்லாத நிலை ஏற்பட்டது.

அவர்கள் இருவரிடமும் பசு ''என் உடலிலிருந்து சாணம், மூத்திரம் ஆகிய இரண்டும் வெளியேறும் பகுதிகளில் இன்னும் யாரும் குடியேறவில்லை. வேண்டுமானால் நீங்கள் அங்கே குடியேறிக் கொள்ளலாம்'' என்று சொன்னதும், அவர்கள் இருவரும் அவ்வாறே ஒப்புக்கொண்டார்கள்.

புனிதம் நிறைந்ததாகக் கருதி எல்லா சுபநிகழ்ச்சிகளிலும் முக்கியத்துவம் பெறக்கூடிய பசுவின் சாணமும், கோமியமும் சகல பாபங்களையும் போக்கக்கூடியவை. வசதியுள்ளவர்கள் பசுவைத் தினமும்கூட குளிப்பாட்டி அதன் பின்புறத்தில் மஞ்சள், குங்குமம் இட்டும்கூட வணங்கி வரலாம். அது சகல நன்மைகளையும், சௌபாக்யங்களையும் தரவல்லதாகும். எனவே இதையெல்லாம் கருத்தில் கொண்டு முதலில் கோபூஜையைச் செய்து முடிக்கிறார் ஸ்வாமிகள்.

கோபூஜை முடிந்தவுடன் ஆசிரமத்தின் முன் வாயிலில் நின்றபடி வரவேற்கும் நீலமேக சியாமள வண்ணனான மகாவிஷ்ணுவுக்கு பூஜை நடைபெறுகிறது.

அதைத் தொடர்ந்து ஹோம பூஜை தொடங்குகிறது. முதிர்ந்த அனுபவம்மிக்க வேத விற்பனர்கள் பலர் ஹோமகுண்டத்தைச் சுற்றிலும் அமர்ந்து அம்பாளின் நாமாவளிகளை ஓதுகிறார்கள். ஸ்வாமிகளும் அவ்வப்போது இடையிடையே நாமாவளிகளைச் சொல்லுவதுடன் ஹோமகுண்டத்தில் தம் திருக்கரங்களால் ஹோம திரவியங்களைச் சமர்ப்பிப்பார்.

ஹோம குண்டத்தில் கூடைகூடையாய்ப் பழவகைகள், குடம் குடமாகப் பால், தயிர், டின்டின்னாக நெய், வாசனைத் திரவியங்கள், மணம்மிக்க மலர்கள், பூஜைக்கென்றே நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் விசேஷமாகத் தருவிக்கப்படும் மருத்துவ குணம் மிகுந்த உயர்தர மூலிகைகள், வேர்கள், இனிப்புப் பண்டங்கள் ஆகியவற்றுடன் புத்தம் புதிய பட்டுப் புடைவைகள் ஆகியவற்றைப் போட்டுக்கொண்டே இருப்பார்கள்.

இதன் காரணமாக எழும் புகை ஆசிரமம் முழுவதும் பரவி, ஆசிரமம் முழுதுமே புகை மண்டலமாகக் காட்சியளிக்கும். மேலும் மருத்துவ குணம் மிக்க இந்த மூலிகைகளின் புகையால் அங்கே கூடியிருப்பவர்களின் பல்வேறு உடல் உபாதைகள்

குணமாகின்றன. வேத மந்திர முழக்கங்களால் உள்ளமும் களிப்படைகிறது.

பிறகு சிறிது இடைவேளை போல, அங்கேயே ஆசிரமத் தோட்டத்தின் ஒரு பகுதியிலுள்ள கேதார்நாத் சிவனுக்கு அபிஷேக அலங்கார பூஜை மிகச் சிறப்பாக நடைபெறுகிறது. மலையிலிருந்து அருவி கொட்டுவது போலவும், சிவனின் தலையிலிருந்து கங்கை பொங்கிப் பெருகுவது போலவும் அமைத்துள்ள அமைப்பு மிகப் பரவசமூட்டுவதாகும். அங்கேயே எல்லாருக்கும் சாத வகையில் ஏதேனும் ஒன்று வழங்கப் படுகிறது.

பின்னர் ஆசிரமத்தின் பூஜையறையில் அம்பாளுக்கு அபிஷேக அலங்கார பூஜை நடைபெறும்.

தேவி பாகவதத்தில் அம்பாள் வீற்றிருக்கும் திருநகரத்தின் மணித்வீப மண்டபத்தைப் போல அழகிய மண்டபத்தின் மத்தியில் பீடம் ஒன்றை அமைத்து அங்கே புவனேஸ்வரி தேவியை எழுந்தருளச் செய்திருக்கிறார்கள். மணித்வீப மண்டபத்தில் ரத்தின சிம்மாசனத்தில் எழிற்கோலத்துடன் எழுந்தருளி அகில உலகையும் ஆட்சி செய்வதாக வர்ணிக்கப்படும் அதே எழிற்கோலத்தை இங்கேயும் கண்ணாரக் கண்டு மகிழலாம்.

மங்களகரமானதும் புண்ணியம் மிக்கதுமான கங்கை நீரால் முதலில் அபிஷேகம். பின்னர் அம்பாளின் அங்கமெல்லாம் நல்லெண்ணெய் பூசி வாசனைப்பொடி கொண்டு அபிஷேகம். பின்னர் பசும்பால், தயிர், நெய், தேன், இளநீர், மஞ்சள்பொடி, அரிசிமாவு போன்ற மாவு வகைகள், பச்சிலை, வெட்டிவேர், மூலிகைகள், கரும்பு, மாம்பழம், திராட்சை, அன்னாசி, சாத்துக்குடி போன்ற பழ வகைகளாலும், பிறகு அவற்றின் சாற்றாலும், குங்குமப்பூ, கஸ்தூரி, சந்தனம் போன்ற பல வாசனைத் திரவியங்களாலும், முந்திரி போன்ற உலர் பழ

வகைகளாலும், சர்க்கரை, கேசரி, பாயசம் போன்றவற்றாலும் அபிஷேகங்கள் நடைபெறுவதையும், பின்பு அலங்காரம் செய்யப்பட்ட பின்னரும் அம்பாளின் திவ்ய, திருக்கோல தரிசனத்தையும் காணக் கண் கோடி வேண்டும். அபிஷேகத்தின் இடையே காமதேனுவே மடியிலிருந்து பாலைப் பொழிவது போல் செய்து வைத்திருக்கும் ஏற்பாடுகளெல்லாம் பிரமிப்பும், பரவசமும் தருபவையாகும். ஒருமுறை அந்த எழிற்கோல தரிசனத்தைக் கண்டுவிட்டால் அங்கிருந்து நகரவே மனம் வராது. வந்தாலும் மீண்டும் மீண்டும் காணத் தூண்டும்.

அபிஷேக அல்ங்காரங்கள் முடிந்ததும் தூப தீப நைவேத்தியங்கள், பூரண ஆரத்தியுடன் பூஜைகள் முடிவடையும்.

பூஜைகள் முடிவடைந்தவுடன் வருகை தந்த அத்தனை பேருக்கும், திருமண வீட்டு விருந்தைப் போல வடை, பாயசத்துடன் திவ்யமான உணவு வழங்கப்படுகிறது. பூஜைக்கு வந்தவர்களுக்கு காலையிலேயே சிற்றுண்டி, பின்னர் இடைவேளையின் போது சாதப் பொட்டலம், பின்னர் பூஜை முடிந்ததும் சாப்பாடு எனத் திணறடித்துவிடுவார்கள். அத்தனையிலும் ஒருவகைப் பரிவு, கட்டுக்கோப்பு காணப்படுவது இந்த ஆசிரமத்தின் சிறப்பம்சமாகும்.

அதைப்போல அங்கே வருபவர்களின் குறைகளைப் பரிவுடன் கேட்டறிந்து, அது அதற்கேற்ற பரிகார பூஜைகளைத் துல்லியமாய்க் கண்டறிந்து செய்வதிலும், அவர்களின் குறைபாடுகளைக் களைந்து, அனைவரையும் நிம்மதியடையச் செய்வதிலும் ஸ்வாமிகளுக்கு நிகர் ஸ்வாமிகளே எனலாம்.

இத்தனையும் தவிர, ஆசிரமத்தில் அன்னதானத் திட்டம் என்ற ஒரு திட்டம் தொடங்கப்பட்டு பத்தாண்டுகளுக்கு மேலாக மிக வெற்றிகரமாகச் செயல்பட்டு வருவதையும், அதன் மூலம் ஆயிரக்கணக்கானோர் பலனடைந்து வருவதையும் குறிப்பிட்டாக வேண்டும்.

இன்றைய காலச் சூழ்நிலையில் குடும்பத்தில் இறந்துபோன முன்னோரின் திதி போன்றவற்றையெல்லாம் முறையாச் செய்வது பலரால் முடியாத சூழ்நிலை இருந்து வருகிறது. உத்தியோகஸ்தர்கள் வெளியூர்ப் பயணங்களின் போது இதில் சில தடங்கல்கள் ஏற்படுவது இயல்பு. இதற்கு உதவுவது தான் அன்னதானத் திட்டம்.

அதாவது ஆசிரம அன்னதானத் திட்டத்தில் ரூபாய் மூன்றாயிரத்தை ஒரேமுறை வைப்பு நிதியாய்ச் செலுத்தி, இறந்தவர்களின் நினைவுநாள் போன்ற விவரங்களையும் தெரிவித்து விட்டால், மேற்கண்ட வைப்பு நிதியிலிருந்து கிடைக்கும் வட்டித்தொகையைக் கொண்டு நாம் குறிப்பிடும் நாளில் அவர்களின் பெயரால் பூஜைகளைச் செய்து விடுவார்கள். தெய்விகமான இந்தப் பூஜையின் பிரசாதங்களையும் தபாலில் அனுப்பி விடுவார்கள். வீட்டில் இருந்து கொண்டு திதி, திவசம், தர்ப்பணம் போன்ற பூஜைகளைச் செய்வதைவிட, ஆசிரமத்தில் தெய்விக சூழ்நிலையில் இந்த பூஜை நடைபெறுவது மிக விசேஷமானதாகும்.

மேலும் மேற்கண்ட பூஜை செலவுகளைத் தவிர ஆசிரமத்தில் பராமரிக்கப்பட்டு வரும் பசுக்களுக்கும் இத்தொகை பயன்படுகிறது. ஒரு கைப்பிடி அகத்திக்கீரையைப் பசுவுக்கு உணவாகக் கொடுத்தாலே கோடி புண்ணியம் என்கிறார்கள். அப்படியிருக்கும்போது இந்த தெய்விக பூஜையும், பசுக்கள் பராமரிப்பும் நம் வைப்புத் தொகையால் நடைபெறும்போது நமக்கு இரட்டிப்பு நன்மை கிடைக்கிறது. நம் முன்னோரின் மேலான ஆசிகளும் கிடைத்து நம் எதிர்கால நல்வாழ்க்கைக்கு வழிவகுக்கும்.

இத்தகைய பாக்யங்களைத் தரக்கூடிய பரத்வாஜ் ஆசிரமத்துக்கு வரும் பக்தர்கள் புவனேஸ்வரி தேவியின் தரிசனம் காண மட்டும் வருவதில்லை. மனத்தில் பல்வேறு

கவலைகளுடனும் வருகிறார்கள். தொழில், வியாபாரத்தில் சரிவு, நோய்த்தொல்லை, குடும்பத்தில் தகராறுகள், திருமணத்தடை, குழந்தை பாக்யமின்மை போன்ற பல்வேறு குறைபாடுகளுடன் வருகிறார்கள். அவரவருக்குத் தேவையான பரிகாரங்களைச் செய்து அனைவரையும் நிம்மதியடையச் செய்வதையே தம் ஒரே குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டு வருகிறார் ஸ்வாமிகள்.

பெரும்பாலானவர்கள் இங்கே வந்த பிறகு தங்கள் கஷ்டங்கள் நிவர்த்தியாகி நிம்மதியாய் இருப்பதாகவும், தங்கள் கண்கண்ட தெய்வமாகவே பரத்வாஜ் ஸ்வாமிகளைக் காண்பதாகவும் சொல்லிக்கொண்டு, கண்களில் நீர் மல்கப் பூரிப்பதைக் காணலாம்.

அவற்றுள் ஒன்றிரண்டை மட்டும் இங்கே குறிப்பிடுவது பொருத்தமாகும். ஆசிரமத்துக்கு அடிக்கடி வருகை தரும் ஸ்வாமிகளின் பரம பக்தரான ஒரு பெண்மணி சொன்னார்.

''ஒருநாள் என் தகப்பனாருக்கு கடுமையான இதயநோய் ஏற்பட்டுத் துடிதுடித்தார். நான் எதற்குமே புவனேஸ்வரி தேவியையும் ஸ்ரீமத் பரத்வாஜ் ஸ்வாமிகளையுமே வேண்டிக் கொள்வேன். ஆனால் அன்றைய நாள் பார்த்து ஸ்வாமிகள் ஊரில் இல்லை. வெளியூரில் ஒரு நிகழ்ச்சிக்காகச் சென்றிருந்தார்.

என் தகப்பனாரை பிரபலமான மருத்துவமனையில் சேர்த்து விட்டு நான் ஸ்லோகங்களை முணுமுணுத்துக் கொண்டும், பரத்வாஜ் ஸ்வாமிகளையே நினைத்துக் கொண்டும் உட்கார்ந்திருந்தேன். என் பிரார்த்தனையை ஏற்று எத்தனையோ கி.மீ. தொலைவிலிருந்தும் ஸ்வாமிகள் எனக்கு அருள் புரிந்தார் என்பதுதான் முக்கியம்.

நம்பினால் நம்புங்கள், நம்பாவிட்டால் விட்டுவிடுங்கள். நான்கு மணி நேரத்துக்குள் என் தகப்பனாரின் அறையிலிருந்து

வெளியே வந்த தலைமை டாக்டர் "ஒன்றும் பயப்பட வேண்டியதில்லையம்மா! உன் தகப்பனார் அபாய கட்டத்தைத் தாண்டிவிட்டார்" என்று சொன்னதும் என்னையே நம்ப முடியவில்லை. அந்த அளவுக்கு அளவற்ற சக்தியும் கருணையும் மிக்கவள் புவனேஸ்வரி தேவி. அவள் கருணையை எனக்குக் கிடைக்கச் செய்த பரத்வாஜ் ஸ்வாமிகளை நான் என்றும் மறக்க முடியாது. பிரத்யட்ச தெய்வமாகவே நான் நினைக்கிறேன்" என்று அவர் சொல்லும் போது உணர்ச்சிவசப்பட்டுக் காணப்பட்டார்.

இன்னொரு நிகழ்ச்சி.

23.2.2002 அன்று நியூஸிலாந்தின் தலைநகர் வெலிங்டன் அருகில் ஒரு கார் விபத்து நேர்ந்தது. ஈரோட்டிலிருந்து சென்றிருந்த மில் ஜவுளி ஆலை அதிபர் சுப்பிரமணியன் என்பவரின் மனைவி மீனாட்சி காரில் சென்று கொண்டிருந்தார். அப்போது நடைபெற்ற விபத்தில் அவருடன் பயணம் செய்த நால்வரில் ஒருவர் சம்பவம் நடைபெற்ற இடத்திலேயே உயிரிழந்தார். மற்ற மூவரில் ஒருவரான மீனாட்சி கடுமையான அடிகள், காயங்களுடன் மருத்துவமனையில் சிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்டார். அவருக்கு ஒன்றன்பின் ஒன்றாக தலையில், பிடரியில், நெற்றியில் என பத்து இடங்களில் ஆபரேஷன் செய்யப்பட்டு, தையல் போடப்பட்டு, சிலநாள் கழித்து, ஜான் கீட்டிங் என்ற பிரபல டாக்டரின் தலைமையிலான உலகத்தரம் வாய்ந்த நிபுணர்களின் கடுமையான சிகிச்சைகளால், மீனாட்சி உயிராபத்திலிருந்து மீண்டு வீட்டுக்குத் திரும்பினார்.

திரும்பியவர் "நீங்கள் அம்பாளுக்குப் பூஜை செய்து கொடுத்த அம்பாளின் குங்குமப் பிரசாதத்தை எப்போதும் என் பையில் வைத்திருப்பேன். நீங்கள் எழுதிக் கொடுத்த ஸ்லோகத்தை தினமும் தவறாமல் படித்து வருகிறேன். அதுதான்

என் உயிரைக் காப்பாற்றியதாக உறுதியாக நம்புகிறேன்" என்று கண்ணீர் மல்க, ஸ்வாமிகளுக்கு கடிதம் எழுதியிருந்தார்.

அம்பாளின் சக்தி அத்தகையது.

தட்பவெப்ப நிலைகளால் வானிலையில் ஏற்படும் மாற்றங்களால் வான்மழை பொய்ப்பதுண்டு. மக்கள் வாழ்வதற்குத் தேவையான தண்ணீரில்லாமல் தவிப்பதுண்டு. ஆனால் எந்தக் காரணத்தாலும் வற்றாத - பொய்க்காத - மழை ஒன்றுண்டு. அதுதான் அன்னை புவனேஸ்வரி தேவியின் கருணை மழை. பல்வேறு துன்பங்கள் என்னும் அனலில் சிக்கித் தவிப்போரை மீட்டு இன்பப்புனலில் ஆழ்த்தி மகிழ்விக்கும் அன்னையின் அருள்மழை, வற்றாத பெருங்கருணையுடன் அருள் மழையைப் பொழிந்து வாழ்வளிப்பதில் தன்னிகரற்றவள் புவனேஸ்வரி தேவி.

அம்பத்தூரில் பரத்வாஜ் ஆசிரமத்தில் அருளே வடிவாக எழுந்தருளி, முகத்தில் படரும் அமுதப் பொற்கிரணங்களால் அனைவரையும் தம்பால் ஈர்த்து, நாளும் தம்மை நோக்கி மக்களை வரச்செய்து, அவர்களுக்கெல்லாம் நல்வாழ்வை வாரி வழங்கும் சர்வமந்திர சொரூபிணியான புவனேஸ்வரி தேவியின் பொற்பாத கமலங்களில் தலை தாழ்த்தி வணங்கி பக்தி சிரத்தையுடனும் உள்ளன்புடன் வணங்குவோம். அவளுடைய வற்றாத கருணை மழையைப் பொழிய வைக்கும் நற்பணியில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டுள்ள நற்றவச் செல்வர் ஸ்ரீமத் பரத்வாஜ் ஸ்வாமிகளின் அன்பு கனிந்த அனுக்கிரகத்துக்குப் பாத்திரங்களாகி அம்பாளின் அருளால் அனைவரும் குன்றாத செல்வம் குறைவின்றி கிடைக்கப்பெற்று நாமும் நலமடைவோமாக!



## மதி நிலையம் வெளியிட்டுள்ள ஸ்வாமிகளின் தெய்விகப் புத்தகங்கள்

### ஸ்ரீ புவனேஸ்வரி பரிபூரண கிருபா ரூ. 30.00

பரமஹம்ஸ ஸ்ரீமத் புவனேஸ்வரி ஸ்வாமிகள் அருளில் மலர்ந்த புத்தகம் இது.

ஸ்ரீ புவனேஸ்வரி தேவியின் மகாத்மியம், பகாராதி ஸஹஸ்ர நாமம், ஸ்ரீ புவனேஸ்வரி திரிசதி, அஷ்டோத்தரத் துடன், தெளிவான அச்சுக்கோப்பில் பார்க்கவும், படிக்கவும் உள்ள சிறந்த நூல். ஸ்ரீ புவனேஸ்வரி தேவியின் அற்புத லீலைகள், கவசம், ஆவரண பூஜை, ஹ்ருதய ஸ்தோத்ரம் உள்ளடங்கிய இப்புத்தகத்தின், அட்டையில் யோகமாயா புவனேஸ்வரியின் திருவுருவம் ஜொலிக்கிறது.

### ஆனந்த ரூபிணி காளி - விலை: ரூ 30.00

இதுவரை வெளிவராத காளி மாதாவைக் குறித்த அபூர்வமான ஆராய்ச்சி நூல். ஸ்ரீ பரத்வாஜ் ஸ்வாமிகளின் கை வண்ணத்தில், காளிதேவியின் பல படங்களுடன் வெளி வந்துள்ளது. பிரளயம் எப்படி ஏற்படுகின்றது? பவளக்காளீ, பச்சைக்காளீ, தக்ஷிணா காளீ கட்டுரைகள் பல தகவல்களைத் தருகின்றன. காளீ அஷ்டோத்தரம், தக்ஷிணாகாளி, திரிசதி நாமாவளி, தேவியின் ஸஹஸ்ரநாமாவளி ஆகியவை அடங்கிய இந்தப் புத்தகம் காளி உபாசகர்களுக்கு ஒரு வரப்பிரசாதமாகும்.

### சர்வம் சக்தி மயம் - விலை: ரூ 35.00

அன்னையை எப்படித் தொழுவது? ஸ்ரீசக்ர வழிபாடு என்பது யாது? எந்தெந்த மலர்களால் அர்ச்சிக்க வேண்டும். தேவீ மகாத்மிய பாராயணம் எப்படி செய்ய வேண்டும். லலிதா ஸஹஸ்ரநாமம் படித்தால் இராமாயணம் படித்த பலன் என்கிற விளக்கங்களோடு

தெள்ளத் தெளிவாய் அமுதூறும் வார்த்தைகளில் விவரித்துள்ளார். ஸ்ரீ பரத்வாஜ் ஸ்வாமிகள். லலிதா ஸஹஸ்ர நாமாவளியும், லலிதா அஷ்டோத்தரமும் சேர்க்கப்பட்டுள்ளது. சக்தி வழிபாடு செய்பவர்கள் அவசியம் இந்நூலைப் படிக்க வேண்டும்.

## வேதமாதா காயத்ரீ - ரூ 75.00 (படத்துடன்)

பரமஹம்ஸ ஸ்ரீமத் புவனேஸ்வரி ஸ்வாமிகளின் அற்புதப் படைப்பு. சிறுவர்களுக்கு பார்த்தவுடன் புரியும்படியான வகையில் பக்தியையும், ஆர்வத்தையும் தூண்டும் தெய்வீக சித்திரங்கள் நிறைந்த புத்தகம். காயத்ரீ மந்திரச் சிறப்பு, காயத்ரீயே வேதமாதா போன்ற கட்டுரைகள் பல தகவல்களைத் தருகின்றன. காயத்ரீ கல்பம் - மந்திர விளக்கம் - இதற்கு முன் வெளி வராத விஷயமாகும். 24 ரிஷிகளின் படங்கள், கனடியன் கால்வாய் தோன்றிய வரலாறு அவசியம் படிக்க வேண்டியவை.

சந்தியா வந்தனப் பெருமையை மிக அருமையாக ஸ்ரீ ஸ்வாமிகள் விளக்கியுள்ளார்கள். எப்படி ஜபம் செய்ய வேண்டும், கடைப்பிடிக்க வேண்டிய முறைகள், சாப விமோசன மந்திர விளக்கம் - ஆகியவை கட்டாயம் அறிய வேண்டியவையாகும். மொத்தத்தில் இப்புத்தகம் காயத்ரீ தேவியை வழிபடுபவர்க்கு ஓர் அரிய வழிகாட்டி. சந்தியா வந்தன தத்துவத்தை, பிள்ளைகளுக்கும் பேரன்களுக்கும் இப்புத்தகம் வாயிலாக உணர்த்துங்கள். நிச்சயம் காயத்ரீ தேவி ப்ரத்யக்ஷமாவாள்.

## சம்போ சிவசம்போ - விலை: ரூ 30.00

சிவபெருமான் முன் அட்டையில் அருட்கோலம் பூண்டு புத்தகம் ஜொலிக்கிறது. சிவபெருமானைக் குறித்து வழிபடும் விரதங்கள் எல்லாம் ஐந்து, அஷ்டாஷ்ட விக்கிரக லீலை, ருத்ர ஜபத்தைப் பாராயணம் செய்யும் முறை, சிவநித்திய பாராயண ஸ்தோத்ரங்கள், சிவபூஜை மகத்துவம் - ஆகிய

கட்டுரைகள் அபூர்வத் தகவல்களைத் தருகின்றன. ஸ்ரீபரத்வாஜ் ஸ்வாமிகள் கை வண்ணத்தில் மலர்ந்த இப்புத்தகத்தில் சிவதாண்டவ அஷ்டோத்தர நாமாவளி இணைக்கப்பட்டுள்ளது.

## ஸ்ரீ மாதா ஜகன்மாதா சப்தமாதா விலை: ரூ 30.00

ப்ராஹ்மி - மாகேஸ்வரி - கௌமாரி - வைஷ்ணவி - வாராஹி - ஐந்த்ரீ - சாமுண்டி - ஆகிய ஸப்த மாதாக்களைக் குறித்த விளக்கம் மற்றும் இத்தேவியர்களின் மூல மந்திரங்களைக் கொண்ட இப்புத்தகத்தில் உயிர்சக்தியும் இவளே. சத்திய விரதனுக்கு சக்தியான புவனேஸ்வரி காட்சி, ஸ்ரீமாதாவின் ஸ்ரீசக்ர ராஜ விளக்கம், குரு மண்டலம் என்பதைப் பற்றிய விவரம் ஆகியவை அவசியம் படிக்க வேண்டிய விஷயங்கள். மனித தேகத்தில் ஸ்ரீசக்ரம்- படவிளக்கத்துடன் உள்ளது. ஸ்ரீ லலிதாருத்ர திரிசதி நாமாவளி சேர்க்கப்பட்டுள்ளது. ஸ்ரீ புவனேஸ்வரியின் மாலா மந்த்ரமும் உள்ளது.

## ஸ்ரீ வாஞ்சா கல்ப கணபதி – விலை: ரூ 35.00

ஸ்ரீ வாஞ்சா கல்ப கணபதி - இதுவரை வெளிவராத பல அபூர்வ விஷயங்களுடன், ஸ்ரீ பரத்வாஜ ஸ்வாமிகள் வாஞ்சா கல்ப கணபதி ஹோமப் பெருமையையும்; மகிமையையும் விளக்கி எழுதியுள்ளார். சதுராவ்ருத்தித் தர்ப்பண மகத்துவம், ஐம்பத்தொரு கணபதிகளின் மூலமந்த்ரங்கள், என்னென்ன திரவ்யம் கொண்டு எப்படி ஹோமம் செய்தால் என்ன பலன்கள் கிடைக்கும் என்பதான விஷயங்கள் அடங்கிய அரிய நூல். மகாகணபதியின் திருவுருவ விளக்கம், ஆயுதங்களின் விளக்கம் ஆகியவை அவசியம் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயங்களாகும். அட்டையின் முகப்பில் பிள்ளையார் அருள் கூட்டுகிறார். மகாகணபதி உபாசகர்களுக்கு இந்நூல் ஒரு வழிகாட்டியாக இருக்கும்.

## ஸ்ரீ சக்ரம் ஸ்ரீ நகரம் ஸ்ரீ வித்யா - விலை: ரூ 35.00

இப்புத்தகம் வாங்கினால், அத்துடன் பெரிய அளவில் இரண்டு வண்ணப்படங்கள் தரப்படும். அதாவது ஸ்ரீ நகரம் ஸ்ரீசக்ரம். (ஸ்ரீபுரத்துடன்) நல்ல வண்ணத்தில் பளிச்சென்று தெரியும்படியாக தெய்வீகம் நிரம்பப்பெற்ற படங்கள் இணைக்கப்பட்டுள்ளன. ஸ்ரீ நகர விளக்கம், ஸ்ரீ சக்ர தத்துவம், மாத்ருகா அக்ஷரங்களின் பெருமை, ஐம்பத்தோரு மாத்ருகா அக்ஷர தேவிகளுக்கும் ஐம்பத்தொரு படங்கள் தொகுக்கப் பட்டு, சேர்க்கப்பட்டுள்ளன. லகு ஸ்ரீவித்யா பூஜையும், ஆச்சார்யாஷ்டோத்தரமும் இடம் பெற்றுள்ளன. ஸ்ரீ வித்யா தீக்ஷை பெற்றவர்கள் கட்டாயம் வாங்கிப் படிக்க வேண்டிய நூல். இப்புத்தகம் ஸ்ரீராஜ ராஜேஸ்வரி பக்தர்களுக்கு ஒரு வரப்பிரசாதமாகும்.

## துயர் நீக்கும் துர்காதேவி - விலை: ரூ 30.00

துர்கையை வழிபட்டால் வாழ்வில் துன்பங்கள் யாவும் நீங்கி இன்ப நலங்கள் பெருகும் என்பதைப் பற்றியும், வழிபடுவதற்குரிய முறையான வழிகளைப் பற்றியும்,ஸ்தோத்தி ரங்களை வகைப்படுத்தியும் மிக விரிவான முறையில் இந்நூலை ஸ்ரீபரத்வாஜ் ஸ்வாமிகள் தொகுத்து வழங்கியுள்ளார்கள். இதைத் தவிர பக்கத்துக்குப் பக்கம் புவனேஸ்வரி ஸ்வாமிகளின் அற்புதமான அருள்மொழிகளும் இடம் பெற்றுள்ளன.

## உபாசனை தத்துவம் - விலை: ரூ 25.00

அவரவர்களின் இஷ்ட தெய்வத்தை மனத்தில் நிறுத்தி, ஒருமித்த சிந்தனையுடன் அன்றாடம் வணங்கி வழிபடும் முறைகளில், தேவி உபாசனை என்பது மிக மேலானதாகவும் சிறந்ததாகவும் கருதப்பட்டு வருகிறது.

அத்தகைய தேவி உபாசனையைக் கடைப்பிடிக்கும் வழிகளைப் பற்றியும், அவ்வாறு கடைப்பிடிப்பதால் ஏற்படும் நன்மைகளைப் பற்றியும் விரிவாக எடுத்துக்கூறி, அதற்குரிய ஸ்தோத்திரப் பாமாலைகளையும் தொகுத்து, ஸ்ரீ பரத்வாஜ் ஸ்வாமிகள் அவர்கள் ஓர் அரிய வழிபாட்டு வழிகாட்டியாக இந்நூலை ஆக்கியருளியுள்ளார்கள். தேவி உபாசனை மேற்கொண்டுள்ளவர்கள் அனைவரின் கரங்களிலும் இருக்க வேண்டிய அரியதொரு கருவூலம்.

## வல்வினை நீக்கும் ஸ்ரீ பிரத்தியங்கிரா தேவி-35.00

ஸ்ரீ புவனேஸ்வரி தேவியை வழிபடும் பக்தர்களை, எல்லைத் தெய்வமாயிருந்து காக்கும் அன்னை ஸ்ரீ பிரத்தியங்கிரா தேவியை வணங்கி நலம் பெறுதற்குரிய வழிபாட்டு முறைகளைத் தொகுத்த மந்திரங்கள், ஸ்தோத்திரங்களுடன், ஸ்ரீ பரத்வாஜ் ஸ்வாமிகளால் உருவாக்கப் பட்டுள்ள நூல். விரோதிகளின் பகைமையிலிருந்து விடுபட்டு, சீரான பாதையில் சென்று, வாழ்வில் அபரிமிதமான முன்னேற்றத்தைப் பெற உதவும் இந்நூலில், பக்கந்தோறும் அரிய பொன்மொழிகள் இடம் பெற்றுள்ளது தனிச்சிறப்பாகும்.

## நவக்கிரகங்களின் நடனமும் - பரிகாரமும் ரூ. 40.00

குடும்பத்திலுள்ள அனைவருக்கும் அவரவர் பிறந்த நேர அமைப்பின்படி, ஜாதகக் கட்டத்தில் பொருந்தியுள்ள நவக்கிரகங்களின் சஞ்சாரத்தால் அவ்வப்பொழுது நடைபெறக் கூடிய பலன்கள், நவக்கிரகங்களின் நிலை, குணம் ஆகியவற்றையெல்லாம் விளக்கி விசேடமான முறையில் பரத்வாஜ் ஸ்வாமிகள் உருவாக்கியுள்ள இந்நூல் குடும்பத் தினர் அனைவருக்கும் வாழ்நாள் முழுதும் பயன்படக்கூடிய சிறந்த வழிகாட்டியாகும்.

ஒவ்வொரு தசாபுத்தி நடைபெறும்போதும் அந்தப் பலாபலன்களுக்கேற்ற பரிகார முறைகளும் விரிவாகச் சொல்லப்பட்டிருப்பது மிகப் பயனுள்ளதாகும்.

## குரு தத்துவ விளக்கம் - விலை: ரூ 25.00

குரு என்றாலே அறியாமையை அகற்றுபவர் என்பது தான் பொருள். அத்தகைய குருவைப் பணிந்து வணங்குதல் ஒவ்வொருவரின் கடமை.

அறியாமை இருளைப் போக்கி ஞான வெளிச்சத்தை கொடுத்து மக்களை நல்வழிப்படுத்துபவர்தான் குரு என்பதைப் பல ஆதாரங்களுடன் விளக்கி, அவரை எப்படி மதிக்க வேண்டும், குருவைப் போற்றுவதால் கிடைக்கும் நன்மைகள் யாவை என்பதையெல்லாம் பல்வேறு ஆழ்ந்த தத்துவ விளக்கங்களுடன் இணைத்து விளக்கி வரைபடங்கள், ஸ்தோத்திரங்களுடன் அரியதோர் ஆன்மிகப் பொக்கிஷமாய் பரத்வாஜ ஸ்வாமிகள் படைத்துள்ள நூல் இது.

## ஸ்ரீ வித்யா சாம்ராஜ்யம் - விலை: ரூ 25.00

இனிமையான - ஈடிணையற்ற - என்றுமே அழியாத ஓர் ஒப்பற்ற சாம்ராஜ்யமே ஸ்ரீ வித்யா சாம்ராஜ்யம் என்பதை மிக விளக்கமாகப் புரிய வைக்கும் வகையில் ஸ்ரீ பரத்வாஜ ஸ்வாமிகள் படைத்துள்ள இந்நூலில், ஸ்ரீ வித்யா உபாஸனையின் அருமை பெருமைகள் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

நம்மை வாழ்வில் துன்புறுத்தும் வல்வினைகளைப் பறந்தோட வைத்து வாழ்வில் நலமும் வளமும் பெற வழிகாட்டும் ஸ்ரீ வித்யா உபாசனையை மேற்கொள்ளும் வழிமுறைகள், ஸ்ரீ வித்யா உபாஸனையால் கிடைக்கும் நற்பலன்கள் ஆகியவை பற்றி ஸ்வாமிகள் தமக்கேயுரிய அழகிய நடையில் எடுத்துக் கூறியிருக்கிறார்.

## ஆனந்தோல்லாஸ விலாஸ ஹாஸம் ரூ 50.00
## ஸௌந்தர்ய லஹரி - சிவானந்தலஹரி
## அபிராமி அந்தாதி மூலமும் - தெளிவுரையும்

அர்த்தநாரீஸ்வரத் திருக்கோலத்தில் அம்மையும் அப்பனுமாய் இருந்து, அகில உலகங்களையும் காத்தருளும் ஈசனையும் ஈஸ்வரியையும் வழிபடுவதற்கேற்ற முறையில் ஸௌந்தர்ய லஹரி - சிவானந்தலஹரி - அபிராமி அந்தாதி ஆகிய மூன்றையும் தொகுத்து- தமக்கேயுரிய அழகிய நடையில் தமிழில் விளக்கவுரை வழங்கி, ஸ்ரீமத் புவனேஸ்வரி ஸ்வாமிகள் படைத்துள்ள அரிய பொக்கிஷம். பழங்கால ஏட்டுச் சுவடியின் அமைப்பில் புத்தம் புதிய தோற்றத்தில் தனிச்சிறப்புடன் வெளிவந்துள்ள இந்நூல் அரியதொரு பிரார்த்தனைக் களஞ்சியமாகும்.

## சகல ஐஸ்வர்யம் தரும் மகாலட்சுமி ரூ 50.00

அலைமகளாகிய செல்வத் திருமகள் மகாலக்ஷ்மியின் அருட்கடாட்சம் என்பது அனைவரும் விரும்பக்கூடிய ஒன்றாகும். மகாலக்ஷ்மியைப் பற்றிய ஏராளமான செய்திகள், வழிபாட்டு முறைகள், ஸ்தோத்திரங்கள் ஆகியவற்றுடன், வளமான செல்வ நல்வாழ்வுக்கு வழிகாட்டும் இந்நூல் ஸ்ரீ பரத்வாஜ் ஸ்வாமிகளின் அருளில் மலர்ந்ததாகும். அருள் பொழியும் அன்னை மகாலக்ஷ்மியின் அழகிய திருவுருவம் அட்டையில் ஜொலிக்கிறது.

## ஸ்ரீ ஸ்வர்ணாகர்ஷண பைரவர் - விலை: ரூ. 70.00

சிவாலயங்களில் தவறாமல் இடம் பெற்றிருக்கக்கூடிய க்ஷேத்ரபாலர் எனப்படும் பைரவர் பற்றிய செய்திகள், இந்நூலைத் தவிர மற்ற நூல்களில் இருக்குமா என்று

சந்தேகப்படுமளவுக்கு, மிக விரிவான முறையில் தேடித் தேடித் தொகுத்து வெளிப்படுத்தியிருக்கிறார் ஸ்ரீ பரத்வாஜ் ஸ்வாமிகள். அவரது கைவண்ணத்திலும் அருள் எண்ணத்திலும் மலர்ந்த இந்நூலுக்கு அட்டையில் ஸ்ரீ பைரவர் வண்ணப்படம் அணி செய்கிறது.

## ஸ்ரீ பாலா திரிபுர சுந்தரி - விலை: ரூ 55.00

அன்னைத் தெய்வத்தை வழிபடுவது நன்மைகளை அளிப்பதுதான் என்றாலும், அதே அன்னையை பாலாவாக துள்ளி விளையாடும் சிறுமியாக - எண்ணி, வழிபடுவது அளவற்ற நன்மைகளை அள்ளித் தருவதாகும் - பாலாவை வழிபடுவதால் உண்டாகும் பலன்களைப் பற்றியும் அனுபவ பூர்வமாக அறிந்து நாவினிக்க, மனம் இனிக்க நற்றமிழ்ச் சொற்களில் வளமான நடையில் சொல்லியிருக்கிறார் ஸ்ரீபரத்வாஜ் ஸ்வாமிகள். பாலா திரிபுரசுந்தரியின் ஸ்தோத்திரங்களும் பயனுள்ள முறையில் தொகுக்கப்பட்டுள்ளது.

## பராசக்தி ஸ்ரீ இராஜராஜேஸ்வரி விலை: ரூ 50.00

அன்னை பராசக்தியின் பல்வேறு அம்சங்களில் ஒன்றான ஸ்ரீ இராஜ ராஜேஸ்வரியின் சிறப்புகளைப் பற்றியும், அவளது உறைவிடமான ஸ்ரீ நகரத்தின் அமைப்பு. சிவ-சக்தி ஐக்கியம் பற்றிப் பல்வேறு நிலைகளிலான விளக்கங்கள், தேவியைப் பிரார்த்தனை செய்யும் முறைகள், தேவி வழிபாட்டின் பயன்கள் ஆகியவை பற்றியும் வெவ்வேறு கோணங்களில் திரட்டப்பட்ட அருமையான தகவல்களுடன், அஷ்டோத்தர சத நாமாவளி மற்றும் சிறந்த ஸ்லோகங்களையும் சேர்த்துத் தொகுக்கப்பட்ட அம்பிகை உபாசகர்களுக்கான அரிய கருவூலம். பரத்வாஜ் ஸ்வாமிகள் அருளிய அற்புதமான படைப்பு.

## ஸ்ரீ தசமகா வித்யா - ஸஹஸ்ரநாமங்கள் ரூ 125

தசமஹா வித்யா என்பது, பத்து வித்யா தேவியரைப் பற்றிய விவரங்களைக் கூறுவது. ஏராளமான இனிய தகவல்கள் இந்நூலில் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன. பத்து வித்யா தேவியரைப் பற்றிய ஸஹஸ்ரநாமங்களுடன் பக்கத்துக்குப் பக்கம் பயனுள்ள குறிப்புகளும், ஸ்வாமிகளின் அழகியநடையில் எண்ணத்தை இனிக்கவைத்து, இதயத்தைக் குளிர்விக்கும் அற்புதமான வர்ணனைகளும் நூலுக்குப் பெருமை சேர்க்கின்றன. கண்ணையும் கருத்தையும் கவரும் தசமஹா தேவியரின் உருவப் படங்களும் நூலை அணி செய்கின்றன.

## ஸ்ரீ துர்கா மஹோத்சவம் - விலை: ரூ 130.00

முப்பெரும் சக்திகளை உள்ளடக்கிய முப்பெருந் தேவியரின் மகிமைகளை அறிந்து முறைப்படி நாளும் வணங்கி வருபவர்களின் நலிவுகள் நீங்கும். நன்மைகள் பெருகும். துயர் நீக்குபவளான துர்க்கையைப் போற்றி துதிப்பவர்களுக்கு துன்பங்கள் பறந்தோடும். மகாகாளி, மகாலட்சுமி, மகாசரஸ்வதி ஆகிய மூவருக்கும் உரிய அஷ்டோத்தர சதநாமாவளிகள், தேவி மகாத்மிய விளக்கம் , சண்டிஹோம விளக்கம் ஆகியவற்றை ஸ்வாமிகள் அளித்துள்ளார்.

## ஹரஹர மஹாதேவ விலை: ரூ 150.00

### பவானி சங்கர தச சகஸ்ர நாமாவளி

எல்லாம் வல்ல எம்பெருமான் சிவபெருமானின் அருமை, பெருமைகளைப் பற்றியும், சிவனுக்குரிய விரதங்கள் பற்றியும் எண்ணற்ற தகவல்களின் தொகுப்பே இந்த நூல். பரத்வாஜ் ஸ்வாமிகளின் படைப்பான இந்நூலில் யுகபுருஷர் புவனேஸ்வரி ஸ்வாமிகள் அரும்பாடுபட்டு மிகவும் போற்றிப் பாதுகாத்து வந்த

பத்தாயிரம் சிவநாமாவளிகளாலான பவானி சங்கர தச சகஸ்ர நாமாவளி என்னும் அற்புதப் பெட்டகம் இணைக்கப்பட்டிருப்பது இந்நூலின் தனிச்சிறப்பு.

## அல்லல் தீர்க்கும் அன்னை துர்கை ரூ 75.00

துர்கை என்றாலே துன்பம் நீக்குபவள் என்பதுதான் பொருள். அன்னை பராசக்தியின் அம்சமான துர்கையைத் தொழுபவர் களுக்கு எதிலும் வெற்றி உண்டாகும். துர்கையைப் பற்றிய நுணுக்கமான பல தகவல்களைக் கொண்டு பரமஹம்ஸ பரத்வாஜ் ஸ்வாமிகள் படைத்துள்ள இந்நூலில் துர்காதேவியைப் போற்றித் துதிக்கும் நாமாவளிகள் பலவற்றையும் திரட்டித் தரப்பட்டுள்ளதால் இந்நூல் துர்கை பக்தர்களுக்கு மிக அரிய பொக்கிஷமாகும்.

## மந்திர ஆராதனை ரூ. 85.00

பார்ப்பதற்கு எளியவராகவும், பழகுவதில் வாத்ஸல்யம் மிகுந்தவராகவும் திகழ்ந்த பரமஹம்ஸ ஸ்ரீ புவனேஸ்வரி ஸ்வாமிகள் தேர்ந்து தெளிந்த ஸ்ரீவித்யா உபாசனையையும், அளப்பரிய சித்திகளை தரக்கூடிய மந்திர ஜபங்களையும் இந்நூலில் படைத்துள்ளார். இந்நூல் பக்தர்களுக்கு அரியதொரு பொக்கிஷமாகும்.

## ஸ்ரீ மகா கணபதி மகத்துவம் ரூ. 65.00

விக்கினங்கள் யாருக்கு நேர்ந்தாலும் விரைந்தோடி வந்து விக்கினங்களைப் போக்கி நிம்மதி தரும் விநாயகரை பற்றி ஸ்வாமிகள் தொகுத்துள்ள அற்புதமான நூல். இந்நூலில் கணபதியின் சகஸ்ர நாமாவளிகள், அஷ்டோத்தர சத நாமாவளிகள், திரிசதி நாமாவளிகள் மற்றும் எண்ணற்ற தோத்திரங்கள் அடங்கிய அரிய பொக்கிஷம்.



/SSC
SURANCE
BAKKAM

SC
DETAILS VERY SOON
CHING

2018
ESULTS
01.01.2019
PO


KEERTHANA R
2691009882
22-07-1995
PALLAVAN
GRAMA BANK


SUBHASHREE R
2691008331
15-05-1996
PALLAVAN
GRAMA BANK


SAVITHRI MOHAN
2691005556
07-02-1991
PANDYAN

# 9677166210 / 70

# IBPS/SSC
## RRB-INSURANCE
CHENNAI: VELACHERY




**2018 SBI PO**
**FINAL SELECTIONS**


RAKESH E
SBI
PROBATIONARY
OFFICER
MANGALORE


ARUN A
SBI
PROBATIONARY
OFFICER
TRICHY


ANANDA RAMYA
SBI
PROBATIONARY
OFFICER
YET TO JOIN


GABRIEL
SBI
PROBATIONARY
OFFICER
MANGALORE


ABINAYA G
SBI
PROBATIONARY
OFFICER
THIRUPUR


MANIMALA
SBI
PROBATIONARY
OFFICER
BANGALORE

6
GOT FINAL
SELECTIONS
OUT OF
8
INTERVIEWS

# IBPS CALENDAR 2019

| IBPS RRB OFFICER AND OFFICE ASSISTANTS | IBPS PROBATIONARY OFFICERS | IBPS CLERKS | IBPS SPECIALIST OFFICER |
|---|---|---|---|
| PRELIMS AUGUST - 2019 | PRELIMS OCTOBER - 2019 | PRELIMS DECEMBER - 2019 | PRELIMS DECEMBER - 2019 |
| MAINS EXAM SEPTEMBER - 2019 | MAINS EXAM NOVEMBER - 2019 | MAINS EXAM JANUARY - 2020 | MAINS EXAM JANUARY - 2020 |

# SSC CALENDAR 2019